


மாலை 1] விளம்பி மார்கழி - 1959 சனவரி [மணி 4

# இருபாவைகள்

"சமயம்" என்பது மக்கள் அறிவு விளக்கம் பெற்று மண்ணில் நல்லவண்ணம் வாழ்ந்து உயிர்க்கு உறுதி எய்தி பேரின்பமடைவதற்குரிய நெறி. நாயன்மார்களும் ஆழ்வார்களும் நமக்கு வழி காட்டிகளாக உள்ளனர். இருசாராரும் முப்பொருளுண்மையை வலியுறுத்தினர். நமது சமயத்துக்கு சைவமும் வைணவமும் இருகண்கள். திருமுறைகளும், திவ்யப் பிரபந்தங்களும் அக்கண்களின் கருமணிகள். 'திருநெறிய தமிழ்' என்றார் சம்பந்தர். "ஞானத்தமிழ்" என்றார் பூதத்தாழ்வார். இறைவனையடைய நம் சமய குரவர் வகுத்த வழிகள் நான்கு. தாசமார்க்கம் அல்லது சரியை என்பது இறைவனும் ஆன்மாவும் ஆண்டான் அடிமைத் தொடர்பு கொண்டதாகக் காட்டும் நெறி. சத்புத்திர மார்க்கம் அல்லது கிரியை தந்தை தநயன் தொடர்பையும், சகமார்க்கம் அல்லது யோகம் தோழமையையும், சன்மார்க்கம் அல்லது ஞான மார்க்கம் குரு சிஷ்ய அல்லது நாயகன் நாயகி தொடர்பையும் காட்டும் மார்க்கங்கள். இறைவன் முன்பு உயிர்கள் அனைத்தும் நாயகிகளே. ஞான மார்க்கத்தை வற்புறுத்திய பேரடியார்கள் மாணிக்கவாசகரும், ஆண்டாள் அம்மையாரும் ஆவர். அவர்கள் அருளிய திருவெம்பாவையும் திருப்பாவையும் நமது சமயமாகிய கண்ணிற் கருமணியுள் ஆடும் பாவைகள் போன்றவை என்று ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அழகாக வர்ணித்துள்ளனர்.

'என்னிரு கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடுபாவாய்' என்பது அப்பர் அருள்வாக்கு. சுமார் எட்டு ஆண்டுகளாக மார்கழி மாதம் நாடெங்கும் திருவெம்பாவை — திருப்பாவை மகாநாடுகளும், சமயச் சொற்பொழிவுகளும், திருக்கூட்ட வழிபாடுகளும், இருபாவைகளின் முழக்கமும் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியுடன் நடைபெற்று வருகின்றன.

இவ்விருபாவைகளும் மார்கழி மாதத்தில் பாடப்பெறுகின்றன. மாதங்

களுள் நான் மார்கழியாக இருக்கின்றேன் என்பது கீதாச்சாரியன் வாக்கு. இம் மாதத்தில்தான் திருவாதிரை திரு நாளும் வைகுண்ட ஏகாதசியும் வரு கின்றன. தேவருக்கு ஒரு வருடம் ஒரு நாளாகவும் அதில் தைமுதல் ஆனிவரை பகற்காலமாகவும் ஆடிமுதல் மார்கழி வரை இரவாகவும் கணக்கிடுதல் மரபு. அதிகாலை 5 நாழிகைகள் மார்கழி மாத மாதலால் மக்கள் எழுந்து நீராடி இறை வழிபாடு செய்யும் காலமாகக் கொண்டா டப்பெறுகிறது. இராக்காலம் இறை சத்தி உலகத்தை அழிக்கும் காலத்தை யும், பகற்காலம் அச்சத்தி உலகத்தைப் படைத்துக் காக்கும் காலத்தையும் விடியு முன் 5 நாழிகைக் காலம் உலகத்தை மீண் டும் படைக்கத் தொடங்கும் காலத்தை யும் குறிக்கும். இவ்வருட் செயலைப் புகழ்ந்து பாடிய திருவெம்பாவைத் தலைப்பில் "சத்தியை வியந்தது" என்று கூறப்பெற்றுள்ளது.

"அறிவாற் சிவனே" என்று போற் றப்பெற்ற மாணிக்கவாசகர் அல்லும் பகலும் அனவரதமும் சித்தத்தைச்சிவன் பாலே வைத்த பேரடியார். தாம் காணும் காட்சிகளனைத்தையும் சிவபரமாகவே பாடுமியல்பினர். திருவெம்பாவை திருப் பெருந்துறையில் பாடப் பெற்றதென சிலரும் தில்லையில் அருளிச்செய்தது என்று சிலரும் கூறுவர். ஆனால் திரு வாதவூரடிகள் புராணம் அருளிய கட வுண்மாமுனிவர் திருவெம்பாவை திரு வண்ணமலையில் பாடியதாகவே கூறு கின்றனர். மாணிக்கவாசகர் திருவண்ணு மலை சென்றபோது மார்கழித் திங்களில் வைகறையில் பெண்கள் ஒருவரையொரு வர் எழுப்பிக்கொண்டு இறைவன் புக ழைப் பாடிக்கொண்டு நீராடப்போகும் காட்சியைக்கண்டு உள்ளம் பூரித்து இப் பாவைப்பாட்டுப் பாடியதாக திருவத வூர்ப்புராணம் திருவம்பலச் சருக்கத்தில் "அன்று வந்தென்னையாளும் அணி அண்ணுமலையாய் போற்றி என்று தம் பரிவால் ஏத்தி இறைஞ்சியங்குறையும் நாளில்"

'மாதர் கொண்மாத ரெல்லாம் மார்கழித் திங்கடன்னில்
ஆதிரைநாள் முன்னீரைந்தாகிய தினங்கடம்மின்
மேதகுமனைகடோறு மழைத்திருள் விடிவதான
போதிவர் தம்மிற் கூடிப்புனற்றிடமாடல் செய்தார்"

"அன்னவரியல்பு கண்டாராங்கவர் புகன்றதாக
மன்னிய திருவெம்பாவை வாசகம் பேசி"—

எனக் கூறப்பட்டுள்ளது.

'மலவிருளூற்று உறங்காமல் மன்னு பரிபாகர் அருள்செலமுழுக வருகவெனச் செப்பல் திருவெம்பாவை' என்று கூறு கிறது திருப்பெருந்துறைப் புராணம். திரு என்பது தெய்வத்தன்மையையும், எம் என்பது உயிர்த்தன்மையையும், பாவை என்பது வழிபாட்டுக்கினிய திருஉருவை யும் குறிக்கும். இறைவன் ஏகநாயகன் உயிர்கள் நாயகிகள். அவை மும்மலங்களா கிய இருளில் உறங்குகின்றன. அம்மலங்களி னின்றும் விடுவிப்பதே துயிலுணர்த்தல். பக்குவப்பட்ட உயிர்கள் முன்பு துயி லுணர்ந்தெழுந்து மற்ற உயிர்களை மல பரிபாகப்படுத்தி இறையருளில் தோய் வித்தலே நீராடலும் நோன்பும். திரு வருள் சக்தியாகிய அம்மையார் பாவைத் திருவுருவில் நின்று ஏற்று ஆதிரை விழா வில் ஆனந்தக் கூத்தன் தாண்டவத்தில் தூக்கிய திருவடியருளால் அவனுடன் இரண்டறக் கலக்கும் பேரின்பத்தை யளிக்கிறுள் என்பது தத்துவப் பொருள் என்பர்.

பண்டைக் காலத்திலிருந்து தமிழ் நாட்டில் இப்பாவை நோன்பு ஆன்ருேர்

அநுட்டானப்படி நடைமுறையில் இருந்து வருகிறதென்பது "மேலையார் செய்வனகள்" என்ற திருப்பாவையில் வரும் பகுதியில் காணப்படுகிறது.

"அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர் முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப் பனிபுலர்பாடி......"
என்பது பரிபாடலில் காணும் குறிப்பு.

**"வையெயிற்றிவர் நாப்பண்வகை யணிப் பொலிந்து நீ
தை யினீராடிய தவந்தலைப்பாடுவாயோ"**

என்பது கலித்தொகை. பூர்ணிமாந்தம் எனும் முறைப்படி பௌர்ணமிக்குப் பின் தைத்திங்கள் என்ற கொள்கைப் படி தை நீராடலும் மார்கழி திருவா திரைக்குப் பின்னுள்ள நாட்களைக்குறிக் கும்.

**"நறு வீயைம்பான் மகளிராடும்
தை இத்தண் கயம்போல்-"** என்பது ஐங்குறு நூறு

**'வான் பெயனனைந்த புறத்த நோன்பியர்
தையூணிருக்கையில்"** என்பது நற்றிணை
**'இன்ன தண்பனிப் பருவநல் லிளநரு ஒழுகும்
கன்னியந்துழாய்க் கண்ணனெங் கணவனு கென்ன
அன்னமென்னடையாரயர் தங்கன்னியர் நோற்றுர்
மன்னு வெம்பனி மால்வரைக் கன்னியைத் தொழுதே"**

என்பது பாகவதம்.

எனவே, சிறுபெண்கள் தாங்கள் நற் கணவரைப் பெற்று மண்ணில் நல்லவண் ணம் வாழவும், நாட்டினில் பருவமழை பெய்து உலகின்புற்றிருக்கவும் உயிர்க் குறுதி யெய்தி இறைவனருள் பெற்றுப் பேரின்பமடையவும் மார்கழிமாதம் ஒவ் வொருநாளும் வைகறையில் எழுந்து கூட்டமாகச் சென்று இறைவன் புகழ் பாடி நீராடி நோன்பு செய்தனர் என அறிகிறோம்.

மலையாள நாட்டிலும் இம்மார்கழி நீராடல் திருவாதிரைப் பெருவிழாவாக இளம்பெண்களால் கொண்டாடப்பெறு கிறது. சயாம் நாட்டில் . ஆருத்ராதரி சனசமயத்தில்" திரியம்பாவை திரிபாவை' என்ற உத்சவம் அரசாங்கச் சார்பில் நடைபெறுவதாக அறிகிறோம்.

அர்த்தநாரீஸ்வரராகிய சிவபெரு மானைவிட்டு நீங்காத பராசக்தியருளால் ஏவப்பெற்ற மனோன்மணி சக்தி பக்குவர் களான உயிர்களை மலங்களினின்றும் நீக்கி இறைவன்றிருவடிகளில் சேர்ப்பிக் கும். இச்சத்தியே ஆன்மா, சூரியன், சந்திரன், ஆகாயம், வாயு, தேயு, அப்பு பிருதிவியாகிய அட்ட மூர்த்திகளிடம் விளங்கும் சத்திகளை எழுப்புவதாகத் திருவெம்பாவை முதலெட்டுப் பாடல் களும் அமைந்துள்ளன. ஒன்பதாவது திருப்பாட்டிலிருந்து இருபதாவது பாடல் முடிய நவசத்திகளும் சேர்ந்து சிவபெரு மானைப் போற்றிப் புகழ்ந்து துதிப்பதாக அமைந்துள்ளன. ஒன்பதாவது பாட்டி லும் பத்தொன்பதாவது பாட்டிலும் பயன் கருதி விண்ணப்பம் செய்கின்றனர். பத்தாவது பாடலில் திருக்குளம் செல் கின்றனர். பதினொன்றுமுதல் பதினெட்டு வரை அம்மையப்பர் வடிவமான திருக் குளத்தில் அவர் அருள் மயமான நன்னீரில் திருவருளைப் பாடிக்கொண்டும் ஆடிக் கொண்டும் நீராடுகின்றனர். இருபதாவது பாடலில் படைப்பு முதலிய ஐந்து தொழில்களினுண்மையும் அவற்றால் விளையும் பயனும் விளக்கப்பெற்றுள்ளன.

திருவாதிரைக்கு முன்பு பத்து நாட் களும் சிவாலயங்களில் திருவெம்பாவைப் பாடல்கள் மாத்திரமே ஓதலும் திருவா திரையன்று திருவெம்பாவையைப் பாடிய பின்னர் தேவாரம் முதலிய திருமுறைப் பாடல்கள் வழக்கம்போல் பாடுவதும் மரபு. நாளொன்றுக்கு ஒரு பாடலாகத்

திருப்பாவைப் பாடல்களை வைணவர்களால் மார்கழி மாதம் முழுதும் ஓதப் படுகின்றன. இவ்விருபாவைகளும் வேறுவேறு தெய்வச் சார்புடையவாயினும் ஒரு பொதுக் குறிப்புடையன என்பது அறிஞர் கண்ட உண்மை. இருபாவைகளிலும் சமயக்கருத்துக்கள் பொதிந்துள்ளன.

வான்முகில் வழாது பெய்து மலிவளம் சுரந்து குறைவிலாது உயிர்கள் வாழ்ந்து இன்புற வேண்டும் என்று இருபாவைகளிலும் நோன்பின் பயனாக வேண்டப் படுகிறது. திருவெம்பாவையில் பெண்கள் மெய்யடியார்களைக் கணவராகப் பெறவேண்டுமென்றும் திருப்பாவையில் கோபியர் கண்ணனைக் கணவனாகப் பெற வேண்டுமென்றும் பிரார்த்திக்கிறார்கள்.

திருவெம்பாவை முதற்பாட்டில் "ஆதியுமந்தமுமில்லா அரும்பெருஞ்சோதி' என்றும், இரண்டாம் பாடலில் 'பரஞ்சோதி' என்றும் வரும் தொடர்கள் அதிகாலையில் சூரியோதயத்திற்கு முன் எழுந்து நீராடப்போகும் மக்கள்முன் தோன்றும் செக்கர் வானம் செம்பொற் சோதி மயமாய் விளங்கும் இறைவனை நினைப்பூட்டுவதாய் அமைந்துள்ளன. கோயிற்றிருப்பதிகத்தில் மாணிக்கவாசகர் அருளிய

'இன்றெனக்கருளி இருள்கடிந்துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்ற நின்தன்மை நினைப்பற நினைந்தேன்
........................
ஒன்று நீயல்லையன்றி ஒன்றில்லை
யாருன்னை யறிய கிற்பாரே,

என்ற பகுதியும்,

"சோதியாய்த் தோன்றும் உருவமேயருவாம்
ஒருவனே சொல்லுதற்கரிய
ஆதியே நடுவே அந்தமே பந்தம்
அறுக்கு மானந்தமாகடலே"

என்ற பகுதியும் நினைவுக்கு வருகின்றன.

இவ்வாறு திருவெம்பாவையில் ஒவ்வொரு பாட்டிலும் உள்ளுறையாக சமய உண்மைகள் பொதிந்திருப்பதைக் காணலாம்.

திருவாதவூரர்க்கு மாணிக்கவாசகர் என்ற பெயர் இறைவனாலேயே சூட்டப் பெற்றது. இறைவனே குருவாக அவருக்கு உபதேசம் செய்தான். அவனே அந்தண உருவில் தோன்றி திருவாசகத்தை எழுதிக்கொண்டான். திருவாசகத்தின் பொருள் சிவபெருமானே என்று மாணிக்கவாசகர் தில்லையில் நடராஜப் பெருமான் திருவடிச் சோதியில் இரண்டறக்கலந்தார் என்ற வரலாறு யாவரும் அறிந்ததே. இவர்பொருட்டு இறைவன் இயற்றிய திருவிளையாடல்கள் பல. நரியைப் பரியாக்கியதும், பிட்டுக்கு மண் சுமந்து பிரம்பாலடிபட்டதும் இவர் பொருட்டேயன்றோ!

ஆழ்வார்களுக்குள் ஆண்டாள் பூதேவியின் அம்சமாகவே அவதரித்துப் பெரியாழ்வார் நந்தவனத்தில் திருத்துழாய்ப் பாத்தியில் தோன்றிச் சிறு பிராயத்திலிருந்தே கண்ணனிடம் அளவு கடந்த காதல்கொண்டு இறைவனுக்குக் கட்டிய பூமாலையைத் தான் சூடியழகுபார்த்துக் கொடுத்து சூடிக் கொடுத்த நாச்சியாராக வாழ்ந்து வந்தாள். பக்தி மேலீட்டால் திருவில்லிப்புத்தூரையே ஆயர்பாடியாகவும், தன்தோழியரையே கோபிகளாகவும், வடபத்ர சாயியையே கண்ணனாகவும், அவன் திருக்கோயிலையே நந்தகோபன் அரண்மனையாகவும், கற்பனை செய்துகொண்டு மார்கழிமாதம் பாவை நோன்பு செய்து திருப்பாவைப் பாடல்களைப் பாடியருளினாள். பல இடங்களில் கோபியர் பேச்சையே காண்கிறோம். திருப்பாவையில் சமயக் கருத்துக்கள் அடங்கியுள்ளன. திருப்பா

வைக்கு பொருள்கேட்டபோது எம்பெருமானுர் 'திருப்பல்லாண்டுக்கு ஆள் கிடைத்தாலும் திருப்பாவைக்கு ஆள் கிடையாது. பிராட்டியார்க்கும் கேட்க நிலமல்ல—பல சொல்லியென்! பத்து ஆழ்வார்களுடைய சாரபூதையான தானே சொல்லித்தானே கேட்குமத்தனை' என்று அருளிச்செய்தாரென்பர்.

ஏனைய ஆழ்வார்களுக் கெல்லாம் பேரருளான் 'மயர்வறமதி நலம் அருளினன். ஆண்டாளோ அவனையே எழுப்பித் தன் குறையை அவனிடம் விண்ணப்பித்துக்கொண்டாள். தன் வளர்ப்புத் தந்தையும் குருவுமாக விளங்கிய பெரியாழ்வாரை உபாயமாகக் கொண்டே இறைவனுக்கு பூமாலையும் சாத்தி அவருடனேயே திருவரங்கத்துக்குச் சென்று மணக்கோலத்துடன் இறைவனுடன் இரண்டறக் கலந்தாள்.

பாவை நோன்பிற்குரிய கிரியைகளைத் திருப்பாவையில் காண்கிறோம். நெய்பால்உண்ணுமை, மையிட்டுக் கொள்ளாமை, மலரால் அலங்கரித்துக் கொள்ளாமை, செய்யாதன செய்யாமை, தீக்குறளைச் சென்று ஓதாமையோடு ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம் செய்தல் வற்புறுத்தப்படுகின்றன. கண்ணனிடம் செல்லும்போது "தூயோமாய்ச் சென்று தூமலர் தூவித் தொழுது வாயினுல் பாடி மனத்தினுல் சிந்திக்க" வேண்டும்.

இருபாவைகளிலும் ஒருமித்த கருத்துகளுடன் பல ஒருமித்த சொற்களையும் காணலாம். திருவெம்பாவையில் 16வது பாட்டு மழைப்பாட்டு. திருப்பாவையில் 4-வது பாட்டு மழைப்பாட்டு. மூன்ருவது பாட்டிலும் மழை வழாது பெய்து நாடு செழிக்கவேண்டுமென்ற விண்ணப்பத்தைக் காண்கிறோம். திருவெம்பாவையில் மழையைத் தேவிக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. திருப்பாவையில் மழையைக் கண்ணனுக்கு உவமையாய்க் காட்டியிருக்கிறது

**"இறைவி யிட்டிடையின் மின்னிப் பொலிந்து எம்பிராட்டி**
**திருவடிமேற் பொன்னம் சிலம்பிற் சிலம்பித்**
**திருப்புருவம் என்னச் சிலைகுலவி அன்பர்க்கு**
**முன்னியவள் நமக்குமுன் சுரக்கும் இன்னருளே**
**என்னப் பொழியாய் மழையே லோரெம்பாவாய்"**

என்பது திருவெம்பாவை. "ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து பாழியந் தோளுடைய பத்மநாபன் கையில் ஆழி போல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து தாழாதே ச்சார்ங்கம் உதைத்த சரமழைபோல் வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய்" என்பது திருப்பாவை. இறைவியின் இன்னருள் பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து சுரக்கும் என்பதும் அடியவர்க்கருள் புரிய, 'தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை' பொழிந்து அல்லல் போக்கும் என்பதும் அருள்மாரியின் கைம்மாறு கருதாக்கடப்பாட்டை நன்கு விளக்குவதாய் அமைந்துள்ளன.

"கோழிசிலம்பச் சிலம்புங் குருகெங்கும் ஏழில் இயம்ப இயம்பும் வெண்சங் கெங்கெங்கும்" என்பது திருவெம்பாவை. "புள்ளும் சிலம்பினகாண். புள்ளரையன் கோயில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ" என்பது திருப்பாவை.

'மேடில் விழுப்பொருள்கள் பாடினேம் கேட்டிலையோ' என்பது திருவெம்பாவை. 'கீசு கீசென்றெங்கும் ஆனைச் சாத்தன் கலந்து பேசின பேச்சரவம் கேட்டிலையோ' என்பது திருப்பாவை.

திருவெம்பாவையில் வரும் 'வண்ணக் கிளி மொழியார் எல்லாரும் வந்தாரோ— எண்ணிக் கொடுள்ளவா சொல்லு கோம்' என்பதுடன் திருப்பாவையில்' எல்லாரும் போந்தாரோ போந்தார் போந் தெண்ணிக்கொள்' என்பதை ஒப்புநோக்குக.

மாணிக்கவாசகருக்கு இறைவன் கண்ணுக்கினியானுய் தோற்ற மளிக்கிருன். ஆண்டாளுக்குக் கண்ணன் மனத்துக்கினியான்.

திருப்பாவையின் முதல் பாட்டில் மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய் என வருகிறது. திருவெம்பாவைக் கடைசிப் பாட்டில் "போற்றியாம் மார்கழி நீராடேலோ ரெம்பாவாய்' என்று அப்பாட்டிலுள்ள எட்டுப் போற்றிகளுள் இறுதிப் போற்றியாக அமைந்துள்ளது.

திருவெம்பாவை 9-ம் பாட்டிலும் 19-ம் பாட்டிலும் பாவை நோன்பின் தனிப்பெரு நோக்கம் கூறப்படுகிறது. "உன் அடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம், அன்னவரே எங்கணவர் ஆவார். இன்னவகையே எமக்கு எங்கோன் நல்குதியேல் என்ன குறையுமிலோம்" என்றும், "எம் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க. எங்கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க. கங்குல் பகல் எங்கண் மற்ருென்றுங் காணற்க. இங்கிப் பரிசே நல்குதியேல் எங்கெழில் என் ஞாயிறு" என்றும் வேண்டுகின்றனர். திருப்பாவையில் 'குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது. என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னேடு உற்ருேமே யாவோம் உனக்கே நாம் ஆட் செய்வோம். மற்றை நம் காமங்கள்மாற்றேலோரெம்பாவாய்' என்று 29-ம் பாட்டில் இறுதி வேண்டுகோளாகக் குறிப்பிடப்பட்டு இறுதிப்பாட்டில் 'எங்கும் திருவருள் பெற்றின்புறுவ ரெம்பாவாய்' என்று முற்றுப் பெறுகிறது. 3-ம் பாட்டில் 'தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரி பெய்து நீங்காத செல்வம் நிறைந்தேலோரெம்பாவாய்' என்று பிரார்த்தனை செய்யப்படுகிறது.

'புனமயிலே இளங்கிளியே' என்ற திருப்பாவைச் சொற்கள், திருவெம்பாவையில் உள்ள வண்ணக் கிளிமொழியார், முத்தன்ன வெண்ணகையார் என்ற சொற்களை நினைப்பூட்டுகின்றன. அவ்வாறே 'ஏலக்குழலி' 'கொங்குண் கருங் குழலி' என்பது திருவெம்பாவையில். 'கந்தம் கமழும் குழலி' என்பது திருப்பாவையில்.

'மானே நீ நென்னலை நாளை வந்துங்களை நானே எழுப்புவன் என்றலும் நாணுமே போனதிசை பகராய்' என்பது திருவெம்பாவை. "எங்களை முன்னர் எழுப்புவான் வாய் பேசும் நங்காய்! எழுந்திராய்! நாணுதாய்! நாவுடையாய்" என்பது திருப்பாவை.

'ஆதியும் அந்தமுமில்லா அரும் பெருஞ்சோதி' 'பரஞ்சோதி' 'சோதி திறம் பாடி' என்பவை திருவெம்பாவையில். 'ஆதியாஞ்சோதியே ஆயர்குலத்தினில் தோன்றிடும் அணிவிளக்கு' 'தோற்றமாய் நின்ற சுடரே' என்பவை திருப்பாவையில்.

"வன்செவியோ நின் செவிதான் என்பது திருவெம்பாவை. 'உன்மகள் தான் ஊமையோ அன்றிச் செவிடோ' என்பது திருப்பாவை.

'இன்னம் துயிலுதியோ; என்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய்' 'ஈதென்ன உறக்கமோ' என்பது திருவெம்பாவை. 'கும்பகர்ணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில் தான் தந்தானே' என்பது திருப்பாவை.

திருப்பாவையில் 2-ம்பாட்டில் 'பரமனடிபாடி' என்றும், 3-ம் பாட்டில் 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி' என்றும் '24-ம் பாட்டில், அன்றிவ்வுலகம் அளந்தாய் அடி போற்றி, பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி கழல் போற்றி' என்றும் திருவடிகளைப்போற்றி கன்று குணிலா எறிந்தாய் குன்று குடையாயெடுத்தாய் வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல்போற்றி என்று திருக்கைகளையும், இறுதிப்பாட்டில், 'ஈரிரண்டுமால்வரைத் தோள் செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால்' என்று முகத்தையும் பாடி யிருத்தல் கண்ணன் வர்ணனை பாதம் முதல் முகம் வரை அனுபவித்ததாயிற்று. 24-ம் பாட்டில் உள்ள 6 போற்றிகளும் அறுசுவை உண்டியைப்போல் தித்திக்கும். திருவெம்பாவை இறுதிப் பாட்டில் எட்டுப் போற்றிகளும் இறைவன் ஐந்தொழில்களையும் அட்டமூர்த்தங்களையும் இறைவன் திருவடி நிழலே பேரின்பமும் ஆதி அந்தம் போகம் திருவருள் எல்லாம் என்பது வற்புறுத்தப்பட்டுள்ளது.

நோன்பு காலத்தில் விரதத்தோடிருந்த பெண்கள் நோன்பு முடிந்ததும் சூடகம் தோள்வளை தோடு செவிப் பூடகம் என்றனைய பல்கலனும் அணிந்து புது ஆடை உடுத்து பால்சோறுமூட நெய்பெய்து முழங்கை வழிவாரக் கூடியிருந்து உண்டு உள்ளம் குளிர்ந்து மகிழ்ந்த செய்தி 27-ம் பாட்டில் கூறப்படுகிறது. திருவெம்பாவை விழா பூர்த்தியாகும் திருவாதிரை நாளில் ஆனந்தக்களி நடனத்தோடு களியும் சாந்தும் விநியோகிப்பது மரபு.

திருப்பாவை 18-ம் பாட்டில் நப்பின்னைப் பிராட்டியை கும்பன் மகளே என்றழையாமல் நந்தகோபாலன் மருமகளே என்று புக்ககமே பெண்களுக்கு முக்கியமென்பதைக் காட்டிக் கடைதிறவாய் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்து என்று இருமுறை அழைக்கிருள். இந்தப் பாடலைப் பாடிக்கொண்டு இராமானுஜர் தம்குரு பெரியநம்பி வீட்டுக்கு சென்றபோது அத்துழாய் என்ற குருபுத்திரி கதவைத் திறக்கக்கண்டு அவளையே நப்பின்னையாக பாவித்து வணங்கினராம். இராமானுஜர் உகந்த பாட்டு என்று இப்பாட்டு கோயில்களில் இரண்டுதடவை ஓதுவது மரபு.

இருபாவைகளிலும் இறைவனை ஊழி முதல்வன் என்றழைக்கக் காண்கிருேம்.

திருப்பாவையில் முதல்பாட்டில் நாராயணனே என்று பரமபத நாதனையும் அடுத்து பாற்கடலில் பையத்துயின்ற பரமன் என்று வியூக நிலையையும் மூன்ரும் பாசுரத்தில் ஓங்கி உலகளந்த உத்தமன் என்ற விபவ நிலையையும் குறிப்பிடக் காண்கிருேம். திருப்பாவைப் பாசுரங்களில் பெரும்பாலும் கண்ணனைப் பற்றியே பாடியிருப்பினும் அன்று இவ்வுலகமளந்த திருவிக்ரமனையும், சினத்தினல் தென் இலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியானையும் பற்றிய குறிப்புக்களும் உள்ளன.

திருவெம்பாவையில் இறைவன் திருவடிப்புகழைப் பரக்கக் காண்கிருேம். விண்ணேர்கள் ஏத்துதற்குக் கூசும் மலர்ப்பாதம், பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர், ஆதியாம் பாதமலர், அந்தமாம் செந்தளிர்கள், தோற்றமாம் பொற்பாதம், போகமாம் பூங்கழல்கள், ஈரும் இணையடிகள், மால் நான்முகனும் காணுத புண்டரீகம், யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள் என ஐந்தொழில்களுக்கும் அவன் திருவடிகளே காரணம் என்ருலும் அவன் மெய்யன்பர்களுக்கு எளிவந்த

பிரான் "நந்தம்மைக் கோதாட்டி இங்கு நம் இல்லங்கள்தோறும் எழுந்தருளிச் செங்கமலப்பொற்பாதம் தந்தருளும் சேவகன்" என்று குறிப்பிடப்பட்டுள் ளது. இவ்வுண்மையைப் பெரியபுரா ணத்தில் பல நாயன்மார்கள் வரலாற்றில் காண்கிறோம்.

தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டில் மாணிக்கவாசகர் மதுரையருகே திருவாதவூரிலும், ஆண்டாள் திருவில்லி புத்தூரிலும் அவதரித்தவர்கள். இருவர் வாழ்க்கையும் ஆன்மா கடைத்தேறும் வழியைக் காட்டும் வகையில் அமைந் துள்ளன. இருவரும் இறைவனுடன் இரண்டறக் கலந்தவர்கள். இவர்கள் வாழ்ந்த காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி இன்னும் முடிந்தபாடில்லை. இவர்கள் எக்காலத்தவராயினும் அவர்கள் அருளிய தெய்வீகப் பாடல்களும் அவர்கள் புக ழும் எக்காலத்துக்கும் உரியன என்பதில் யாதொரு வேறுபாடுமில்லை.

"பாவை பாடிய வாயால் கோவை பாடுக" என்று இறைவனே கேட்டு மாணிக்கவாசகரைக் திருக்கோவையார் என்ற அகத்துறைப் பாடல்களைப் பாட வைத்தான் என்ற வரலாறு திருவெம் பாவையின் சிறப்பைக் காட்டுகிறது. திருக்கோவையாருக்குத் திருவெம்பாவை வகை நூல் என்பர்.

'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்னும் பழ மொழி யாவருமறிந்ததே.

'வருமொழி செய் மாணிக்கவாசக நின் வாசகத்தில்
ஒருமொழியே என்னையுமென் உடையனையும் ஒன்றுவித்துத்
தருமொழி யாமென்னில் இனிச்சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பியயல் கூடுவதேன் கூறுதியே'

என்பது இராமலிங்க சுவாமிகள் திரு வாக்கு.

திருவாசகமிங் கொருகாலோதிற்
கருங்கல் மனமும் கரைந்துகக்கண்க
டொடுமணற்கேணி யிற்சுரந்து நீர்பாய
மெய்ம்மயிர்ப் பொடிப்பவிதிர்
விதிர்ப்பெய்தி
அன்பராகுநரன்றி
மன்பதை யுலகின் மற்றையரிலரே'

என்றார் சிவப்பிரகாசர்.

'அன்னவயற் புதுவை ஆண்டாளரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல் பதியம் இன்னிசையாற்
பாடிக் கொடுத்தாள் நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்'

என்பது உய்யக்கொண்டார் திருவாக்கு.

'நேயமுடன் திருப்பாவை பாட்டாறைந்தும்
நீயுரைத்ததையொரு திங்கள் பாமாலை
ஆயபுகழ் நூறுடன் நாற்பத்து மூன்றும்
அன்புடனேயடி யேனுக்கருள் செய்வாயே'

என்பது வேதாந்த தேசிகர் திருவாக்கு.

ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி!
திருப்பாவை முப்பதும் செப்பினள் வாழியே!

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற அடிப்படைக் கொள்கையுடைய சைவ ரும் வைணவரும் திருவெம்பாவை திருப் பாவையின் குறிக்கோள்களை உணர்ந்து போற்றிப் பயன் பெறுவார்களாக!

அ. உத்தண்டராமன்
2-1-59.



# சைவம்

திரு. K. வச்சிரவேலு முதலியார், B.A., L.T.,

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

## சைவ இலக்கியங்கள்

### (1) ஆராய்தலும் நெறிப்படலும் :

நாம் உளங்கொள்ளும் பொருள்களெல்லாம் இரு வேறியல்புகளை உடையவை ஆகும்; அவை அளக்கப்படும் இயல்புகள் (metrical aspects) அளக்கப்படுதலின்றி அனுபவிக்கப்படும் இயல்புகள் (non-metrical aspects) என்பவை. நம் கண்முன் தோன்றும் ஒருவரைப்பற்றி, அவரது உயரம், பருமன், நிறை, வயது என இவ்வாறு அறிவோமாயின், அளக்கப்படும் இயல்புகளை ஆராய்ந்து அறிகிறோம். அவ்வாறன்றி, அவர்தம் அழகு, குணம், பேச்சின் இனிமை முதலியவற்றில் ஈடுபட்டு உணர்வோமாயின், அளக்கப்படாத இயல்புகளை உணர்ந்து அனுபவிக்கிறோம். இவை போன்று சமய உண்மைகளை அறியும் வகையும் இருவகைப்படும். ஒன்று ஆராய்ந்து அறிதல், மற்றொன்று உணர்ந்து நெறிப்படல். உண்மையில் ஒரு சமயத்தால் பயன் பெறுவார் அதனை ஆராய்தலைவிட அதன் நெறிப்படலே செய்யத் தக்கது. நெறிப்பாட்டிற்கு ஆராய்ச்சியும் ஓரளவு வேண்டத் தக்கதே. ஆயினும் ஆராய்ச்சியில் மிகைப்படச் செல்லுதல் தமக்கும் பிறர்க்கும் ஏதம்தரும். இக்கருத்துப் பற்றியே திருஞானசம்பந்தப் பிள்ளையார்,

"ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா; சுடர்விட்டுளன் எங்கள் சோதி;
மாதுக்கம் நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார் மின்களே"

என்றருளிச் செய்வாராயினர்.

### (2) நெறி உணர்த்தும் நூல்கள் :

இவ்வாறு நெறிப்பட்டு ஒழுகுவோர்க்கு உண்மை நூல்கள் எனச் சான்றோர்கள் கொண்டவற்றை ஔவையார் தமது நல்வழியில்

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என் றுணர்.

என வரையறுத்துக் கூறியுள்ளார்.

இப்பாட்டின் பொருள்: "திருவள்ளுவர் அருளிச் செய்த திருக்குறளும், நான்குவேதங்களின் முடிவு எனப்படும் உபநிடதங்களும், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பி ஆரூரர் என்னும் திருநெறித் தலைவர் மூவர் அருளிச் செய்த இசைத் தமிழாகிய தேவாரமும், திருவாதவூர் முனிவர், (மாணிக்கவாசகர்) அருளிச் செய்த திருச்சிற்றம்பலக் கோவை, திருவாசகம் என்னும் இயற்றமிழும், திருமூலர் அருளிச் செய்த திருமந்திரமாலையும் ஒரே பொருள் முடிபு உடையவை: ஆகலின் அவற்றை உலகத்திலுள்ள நன்மக்கள் உயர்ந்த பிரமாண நூல்களாகக் கைக்கொண்டு ஒழுகுவர்" என்பது. இவற்றோடு உண்மை நாயன்மார் வரலாறு கூறும் பெரிய புராணமும், சிவஞானபோதமும் இன்றியமையாது கற்றுணரத்தக்கவை ஆகும்.

### (3) சைவ இலக்கிய வரலாறு :

(அ) பழங்காலம் :

மேலே குறித்தவாறு நெறிப்பாடு உடைய மக்களே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நம் தமிழகத்தே வாழ்வாங்கு

வாழ்ந்து வந்த தமிழ் மக்கள். ஆகலின், சைவ சமயமும் அக்காலத்தில் சமயம என வழங் கப்படவில்லை; திருநெறி, மெய்ந்நெறி, முன் னெறி, சிவமாநெறி என்றாற்போல நெறி எனவே அதனை வழங்கி வந்திருக்கின்றார்கள்.

## (ஆ) சமயமும் நெறியும் :

சமயம் என்பதற்கும் நெறி என்பதற்கும் வேறுபாடு உண்டு. சமயம என்னும் சொல் நியமிக்கப் பெற்றது, வரையறை செய்யப் பட்டது என்னும் பொருளைத் தரும். வினை வயப்பட்ட மக்கள், தம் உலக அனுபவத் திற்கு ஏற்ப தம் அறிவுகொண்டு சில முடிவு களைத் துணிந்து, நிறுவி, மக்களிடைப் பரப்பி வருவனவெல்லாம் சமயம் எனப்படும். அப்படி நிறுவும்போது, தம் கொள்கைக்கு ஆதாரமான நூல், தருக்கம், தத்துவக் கோட் பாடு, வீடு என்னும் நான்கு வகையில் வைத் துத்தங் கொள்கைகளை நிறுவுவார்கள். இவ் வாறு தம்தம கோள்களை நிறுவுவோரே சம யக் கணக்கர் அல்லது மதவாதிகள் எனப் படுவர். மதவாதிகள் மேற்கூறிய நால்வகைப் பற்றித் தருக்கம் செய்வோர் என்பதை

"மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனும்
இத்திறம் தத்தம் இயல்பினிற் காட்டும்
சமயக் கணக்கரும்"[1]

என்னும் மணிமேகலை அடிகளால் உணர லாகும்.

இத்தகைய சமயவாதத்தைப் பண்டு தமிழ்ச் சான்றோர்கள் விரும்பவில்லை. கல் லாடனார்,

"சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருள் இது என்ற
வள்ளுவன்"

என்றமை கருதத் தக்கது. ஆதலினாற்றான், சிவநெறி, பழங்காலத்துச் சமயம், மதம் என் னும் பெயர்களால் வழங்கவில்லை. திருஞான சம்பந்தர் தமது அருட்பாடல்களைத் "திரு நெறிய தமிழ்" எனவே குறிக்கின்றார். சேக் கிழாரும்,

"உலகியல் வேதநூ லொழுக்கம் என்பதும்
நிலவு மெய்ந்நெறி சிவநெறிய(து) என்பதும்
பலர்புகழ் தென்னவன் உணரும் பான்மையால்"

எனவும்,

..."ஓங்கும் பொருட் சமய முதற் சைவநெறி
தான்பெற்ற புண்ணியக் கண் இரண்டு"

எனவும் கூறுதல் கவனிக்கத் தக்கது. சான் றோர் பலரும் சென்றவாற்றால் செல்லுதல் நெறிப்பாடு அல்லது நெறி நிற்றல் ஆகும்.

புத்தம், சைனம், அத்வைதம், துவை தம், விசிட்டாத்வைதம் என்றாற் போல்வன வெல்லாம ஒவ்வோராசிரியரால் நியமிக்கப் பெற்றுப் பின் பிரசாரம் செய்யப்பட்டவை யாதலின், அவை யெல்லாம் மதம் எனவோ சமயம் எனவோ வழங்கப்படுமே தவிர நெறி என வழஙகப்படுதல் இன்று. பிற்காலத்தில் நெறி என்பது சமயத்திற்கும் பரியாய மாயிற்று.

## (இ) குழப்பக்காலம் :

கிறித்து சகாப்தத்திற்கு முன் தமிழகத் தில் சமயக் கணக்கர் என்போர் தோன்ற வில்லை. முதல் முதல் பௌத்த தருமத்தைப் பிரசாரம் செய்யும் சமயக் கணக்கர் இந்நாட் டில் தோன்றினர். அசோகர் பௌத்த தரு மத்தை எங்கும் பரப்ப எடுத்துக்கொண்ட முயற்சி வரலாற்று முதன்மை உடைய தன்றோ! சற்றேறக் குறைய அதே காலத்தில் தான் சைன சமயக் கணக்கர்களும் தமி ழகத்தே நுழைந்தனர். இவர் எல்லாரும் தாம் கொண்ட கொள்கைகளை அளவை முறைகளால் நிறுவிப் பிற கொள்கையின ரைத் தம் கொள்கைக்கு இழுக்கும் பேச்சு வன்மையும் பயிற்சியும் பெற்றவர்கள். இவர் கள் தமிழகத்தே நிலைக்கத் தொடங்கிய பின் னரே

"ஒன்றே பொருளெனின் வேறென்ப; வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார்"[2]

எனப்பட்ட பல்குழு தோன்றிக் குழப்பமான கருத்துக்களை வெளியிடத் தொடங்கின. இக் குழப்பக் காலத்திற்குமுன், மக்கள் அடிப் பட்ட சான்றோர் சென்ற நெறிபற்றியே அற

[1] விழாவறை காதை, 11–13.

[2]. திருவள்ளுவமாலை.

வுணர்வும் கடவுள் உணர்வும் பெற்றனர்; பெற்று, உலகியல் மெய்ந்நெறி என்னும் இவைபற்றி ஒழுகி அமைதியும் இன்பமும் உடையவராய் வாழ்ந்து வந்தனர்.

### (ஈ) திருக்குறள் தோற்றம் :

சமயக் கணக்கர்களால் மக்கள் அமைதி வாழ்வை இழக்க நேர்ந்த காலத்தில்தான் திருவள்ளுவர் ஒப்புயர்வற்ற பொது மறையாகிய திருக்குறளை இயற்றியருளினர். இக்காலம் கிறித்து சகாப்தத்தின் தொடக்கமாக இருக்கலாம். தமிழ்ப் பெருமக்கள் தம் பண்டை நன்னெறியினைத் தெளிவாக உணர்ந்து, புதியனவாகப் போந்த கொள்கைகளுள் தள்ளுவன தள்ளிக்கொள்வனகொண்டு, ஒழுகி, நலன் பெறுதற்குஇப்பெருநூல் உரையாணியாக அமைந்து நிலவிற்று.

திருவள்ளுவர் "எல்லா நெறியிலும் நன்மையைக் கொண்டு ஒழுகவேண்டும்" [3] ஒருவன், தான் கொண்ட நூல் நெறி பற்றியே ஒழுகினல் போதாது; மற்று, உலகத்தோடொட்ட ஒழுகலைக் கற்கவேண்டும்.[4] அதாவது, "அறநூல் சொல்லியவற்றுள் தன் காலத்திற்கு ஏலாதன ஒழித்து, சொல்லாதனவற்றுள் ஏற்பன கொண்டு, உயர்ந்தோர் பலரும் ஒழுகுமாற்ருன் ஒழுகக் கற்கவேண்டும்" என்ருற்போலப் பல அரிய ஒழுகலாறுகளை விதித்துள்ளார். உபநிடதக் கருத்துக்களையும், சிவாகமக் கருத்துக்களையும் மெய்யுணர்தல், கடவுள் வாழ்த்து, முதலிய அதிகாரங்களில் மேற்கொண்டு கூறியுள்ளார். ஆயினும், யாதேனும், ஒரு நூலையோ அல்லது பலநூல் தொகுதியையோ குறிப்பிட்டு இவற்றையே பிரமாணமாகக் கொள்க எனக் கூறவில்லை என்பது சிந்தித்தற்கு உரியது.

### (உ) திருவள்ளுவர்க்குப் பின் :

இனி, திருவள்ளுவர் காலத்திற்குப்பின், தமிழகத்தே சிவநெறி உச்சநிலையில் இருப்பினும், பிற தெய்வ வழிபாடும் பிற சமயப் பிரசாரமும் இருந்தன என்பது கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் தோன்றினவாகக் கருதப்படும் சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் நூல்களாற் புலனுகின்றது. அப்பொழுது சிவநெறியைச் சிறப்பாக உணர்ந்து ஒழுகுவதற்கு என்ன நூல்கள் வழக்கில் இருந்தன என்பது தெரியவில்லை. ஆயினும், அக்காலத்து வாழ்ந்த சிவநெறியாளர்கள் கடவுளைப்பற்றிக் கொண்டிருந்த கொள்கைகளுட் சில மணிமேகலையால் விளங்குகின்றன.

"இறைவன் நிலம், நீர், தீ, வளி, வெளி, ஞாயிறு, திங்கள், உயிர் என்னும் எண் வகைப் பொருளோடு புணர்ந்து, உலகமே உருவமாகத் தான் அதற்கு உயிராக நிற்பன்; கலையுருவினன் [5]; யாவற்றையும் படைத்து, அப்படைத்தவை நின்று நிலவச் செய்து, அங்ஙனம் நின்றவற்றை ஒடுக்கு மாற்ருல் உயிர்களின் துயரத்தைத் தீர்த்தருளும் தோற்றத்தை உடையவன்; இத்தொழில் களைச் செய்தற்கண், தான் எத்தகைய மாறுதலும் எய்துதல் இன்றி, எளிதிற் செய்வன். தன்னின் வேருய் நிற்பதொரு பொருள் இன்றி எவற்றையும் தன் வயப்படுத்தி நிற்பன்; ஈசன் என்பது அவன்றன் சிறப்புப் பெயர்" [6] என்பவை அவை.

மணிமேகலை பௌத்த சமயத்தைக் கருப்பொருளாகக் கொண்டு, அச்சமயத்தைப பரப்பும் குறிக்கோளுடன் இயற்றப்பட்டதாகலின் சிவநெறியின் கடவுட் கொள்கையால் ஒரு சிறிதே நம்மால் அறிய முடிகிறது. அக்காலத்து, பிருகற்பதி செய்த உலோகாயதம், புத்தன் வகுத்த பௌத்தம், கபிலன் இயற்றிய சாங்கியம், அக்கபாதன் ஆக்கிய நையாயிகம், கணாதன் கண்ட வைசேடிகம், சைமினி தந்த மீமாஞ்சகம் என்னும் ஆறு மதங்களும், பிரமவாதம், வைணவவாதம், வேதவாதம், ஆசீவகவாதம், நிகண்டவாதம், பூதவாதம் என்னும் ஆறு மதங்களும் பிரசாரத்தில் இருந்தன.

---

3. "எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு"—குறள், 423

4. "உலகத்தோடொட்ட ஒழுகல் பலகற்றும் கல்லார் அறிவிலா தார்"—குறள், 140.

5. இங்குக் கலை என்றது பல்வகைக் கலை ஞானங்களை அல்லது 38 கலைகளைக் குறித்தல் வேண்டும். "ஐயா றதன்மிசை எட்டுத்தலையிட்ட, மையில் வாலகலை மெய்யுடன் பொருந்தி" என்னும் பேராசிரியர் மொழி காண்க. (திருச்சிற்றம்பலக் கோவையார் உரை)

6. சமயக் கணக்கர் தந்திறங் கேட்டகாதை, 86—95.

## (ஊ) திருவாசகத் தோற்றம்

இத்தகைய மதங்கள் பலவும் தோன்றித் தெய்வக் கொள்கையுடைய மக்களை ஒரு நிலைப் படவிடாமல் அலைத்த காலத்தில், திருவாதவூர் அடிகள் எனப்படும் மாணிக்கவாசக சுவாமிகள் திருவவதாரம் உளதாயிற்று.[7] மான் கணம் பேய்த்தேரை நீரென்று எண்ணிப் பின் சென்று இளைத்தல் போல, வீடு பேற்றில் அவாவுள்ள மக்கள் தக்க நூல்களும் நெறியும் உணர்த்துவார் இன்மையின், மேற் கூறியவாறு அறுவகைப்பட நின்ற சமயக் கொள்கைகளை மேலும் மேலும் வருந்திக் கற்றுத் தாம் விரும்பிய இன்பத்தைப் பெறாமல் துன்பம் உழந்தனர். அந்நிலையில், இறைவன் கருணை மழை பொழியும் முகிலெனத் திருப்பெருந் துறையில் தோன்றி, அடிகளை ஆட்கொண்டருளிப் பரமானந்தப் பெரும் பயனைத் தந்தருளினன்.

இறைவன் தந்தருளிய பரமானந்தப்பயனை அடிகள், தூய திருவாய் மலரால் சொற்செய்து[8]. திருவாசக மழையாகப் பொழிந்தார். அம்மழை, தொண்ட உழவர் அருச்சனை வயலுள் அன்பு வித்திட்டுச் சிவம் என்னும் மென்முளை தோன்றிப் பணைத் தோங்கி இருவினையின் களை கட்டுக் கதிர்பரப்பி முடிவிலாத சிவபோகம் முதிரச்செய்து ஆரத் தந்தது. அடிகள் தில்லையம் பதியில் வீற்றிருந்தபோது, திருச்சிற்றம்பலம் உடையார் அந்தணராய்த் தோன்றி, "பாவை பாடிய வாயாற் கோவை பாடுக" என விரும் பத் திருச்சிற்றம்பலக் கோவையாரைப் பாடியருளினர். திருச்சிற்றம்பலம் உடையார் திருவாசகத்தையும், திருச்சிற்றம்பலக் கோவையையும் மாணிக்கவாசகர் சொல்ல எழுதி, எழுதிய சுவடியைக் கனக சபையில் வைத்து மறைந்தனர். தில்லைவாழந்தணர் சுவடியைக் கண்டு, மாணிக்கவாசகரிடம் வந்து, அதனை அவருக்குக் காட்டி, அதிலிருந்த பாட்டுக்களின் பொருளைத் தெரிவித்தருளும்படி வேண்டினர். மாணிக்கவாசகர் அவர்களை உடனழைத்து உட் சென்று, தில்லைத் திருக்கூத்தனைச் சுட்டி, "இவனே இவற்றின் பொருள்" எனச் சொல்லி, அவன் திருவடியில் புக்கு ஒன்றி உடனானர்.

(தொடரும்)

[7]. அடிகள் காலம் 3-ஆம் நூற்றாண்டென்பது பலர் ஒப்ப முடித்த முடிபாக இருத்தலும், ஏனைய சமய குரவர் மூவர்க்கும் முற்பட்டவர் என்பது மரபாதலும், புராண வரலாறுகளுக்கு ஒத்ததாலும் கருதி இங்கு இவ்வாறு எழுதப்படுகின்றது. மேலும் இங்கு விரித்துரைக்கப்படும் சூழ்நிலை திருவண்டப் பகுதி 68—95 அடிகளிலும், போற்றித் திருவகவல் 41—58 அடிகளிலும் விளங்குதல் காண்க.

[8]. திருக்களிற்றுப் படியார், 73.

## திருக்குற்றால நாதர் கோயிலில் அற்புத நிகழ்ச்சி

சில நாட்களுக்கு முன் தென்காசித் தாலூகா, காவலா குறிச்சியைச் சேர்ந்த, சுமார் 25 வயதுள்ள (காசி ஆசாரி குமாரர்) ஆறுமுகம் ஆசாரி நோய்வாய்ப் பட்டு ஒரு வாரமாக தனது இரண்டு கண்களும் பார்வை இழந்து துன்பப்பட்டுக் கொண்டிருந்தார். ஓர் இரவில் அவருடைய கனவில் முருகன் தோன்றி, நீ போய் திருக்குற்றால நாதரை தெரிசித்தால் உன்னுடைய கண் பார்வை மறுபடியும் கிடைத்து விடுமென்று அவருக்குத் தெரிவித்தாராம். அதன்படி அந்த இளைஞர் திருக்குற்றாலமடைந்து இறைவனை வழிபட்டு வரும் சமயத்தில் 1-12-58-ந் தேதி மாலை பூசை நடக்கும்போது தீபாராதனை ஒளி அவர் கண்ணில் பட, கண் பார்வையும் நன்றாகத் தெரிந்து இறைவனைத் துதித்து ஆடினார், பாடினார். இந்த அதிசய நிகழ்ச்சியைப் பார்த்த மக்களும் கேள்வியுற்றவர்களும் பரவசப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

# வைணவம்

[திரு. T. A. சீனுவாசாச்சாரியார்]

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

## ஆகமங்கள்

ஒரு ஊருக்குப் போக விரும்புகிறவனுக்குக் கண் கால் முதலிய கருவிகளும் அறிவும் இருந்தாலும் அந்த ஊருக்குச் செல்லுகிற பாதை (வழி) இல்லாவிடில் பிரயாணம் கஷ்டப்படும். தானே கண்டபடி செல்வதால் ஊரை அடைய முடியாமலும் போகும். ஆகையால் எந்த ஊரை அடைவதாயினும் அந்த ஊருக்குச் செல்லும் பாதை முக்கியமாக இருக்க வேண்டும். பாதைகள் பலவிதமான வசதிகளுடையனவாக இருக்கும். இப்படியே மோக்ஷமடைய வேண்டியதற்கான சவுகரிய முள்ள பாதைகளை வகுத்துக் கூறுவதே ஆகம சாஸ்திரம் எனப்படும். ஆகமம் என்னும் சொல்லுக்குப் பலவிதமான பொருள்கள் கூறுவர். பொதுவாகச் சொன்னால், நமக்கு ஞான விஷயத்தில் (பூஜை விஷயத்தில்) தேவையான செயல் முறைகளை விவரித்துக் கூறுவதே ஆகமம் ஆகும். வைணவ ஆகமங்கள் இரண்டு ஆகும். அவை பாஞ்சராத்ரம், வைகாநஸம் என்பனவாம். அநுபவ முறைக்கு ஆன்மாக்களை ஆளாக்குவதே ஆகமங்கள் ஆற்றும் பணி ஆகும்.

பாஞ்சராத்ர ஆகமத்தின் வழி ஒழுகுபவர் பாஞ்சராத்ரர் எனப்படுவர். இந்த ஆகமம் ஐந்து நாட்களில் திருமாலால் பிரமனுக்கு உபதேசிக்கப்பட்டது. பிறகு பிரமதேவர், நாரதருக்கு உபதேசித்தனர். அப்பால் நாரதர் மற்ற முனிவர்கட்கு உபதேசித்தனர் என்பர். இது நூற்றெட்டுச் சம்மிதைகளைக் கொண்டது. அவை பாத்மம் முதல் பிராசேத சாக்யம் என்பனவாம். இதனில் விஷ்ணு ஆலயப் பிரதிட்டை விதி, துவஜாரோகண விதி, தீக்ஷை, ஆராதனம், பூஜை, மஹோற்சவம், ஜீர்ணோத்தாரணம், பிராயச் சித்தம், மந்திர விதி முதலிய பல செய்திகள் விவரமாகக் கூறப்பட்டுள்ளன.

வைகாநஸம் என்பது வைணவாகமங்கள் இரண்டில் ஒன்றும். இது விகனஸ ருஷி செய்தது என்பர். விகனஸர் விஷ்ணுமூர்த்தியின் மனத்திற் பிறந்தவர். இந்த வைகானஸ சூத்திரங்கள் வேதங்களின் நான்கு பிரிவு பாட்டுக்கு முற்பட்டவை. இந்த சூத்திரங்களை அனுஷ்டிப்போர் வைகானஸர் ஆவர். இந்த விகனஸ ருஷியின் சீடர்கள் நால்வர். அவர்கள் மரீசி, அத்ரி, பிருகு, காச்யபர் ஆவர். இவர்கள் நான்கு லக்ஷம் கிரந்தங்கள் செய்தனர். இவைகளுக்கும் வைகானஸம் என்றே பெயர் வழங்கும். விகனஸரின் சாகை யஜுஸ். இவ் வைகானஸம் பல பிரச்னங்களை உடையது. இதனில் உள்ள பிரச்னங்கள் கிருஹ்யம், தெய்விகம் எனப் பிரிவு படும். முதலது சரீர சம்பந்த விஷயங்களை உடையது. பின்னது ஆலய நிர்மாணம் பிரதிஷ்டை பிராயச் சித்தங்களைக் கூறுவது. இந்த ஆகமத்தருக்கு விஷ்ணு பலி முக்கியமானது. இது கருவிலேயே மந்திரோபதேசம் செய்யும் சடங்காகும். ஆதலால், இதனை மேற்கொண்டவர்கட்கு சமாச்ரயணம் கிடையாது. இவ்வாகமக்காரர்கள் அர்ச்சகர்கள். இவர்கள் வடநாட்டில் ஆசாரியர்களாகவும் உள்ளனர்.

இதுகாறும் செயல் முறைக்கான ஆகம விவரம் சுருக்கமாகத் தரப்பட்டது. பகவானை அடைவதற்குக் கர்மயோகம்—ஞானயோகம்—பக்தியோகம்—பிரபத்தி என்பன சாதனங்களாகக் கூறப்படும். இவற்றுள் கர்மயோகத்தைச் செய்வதால் மனம் வசப்படும். ஞான யோகத்தைச் செய்வதால் ஆத்ம சாக்ஷாத்காரம் விளையும். பக்தியோகத்தைச் செய்தலால் பரமாத்மாவைக் கூடலாம். பிரபத்தியைச் செய்வதால் மேற்சொன்ன எந்தப் பயனையும் அடையலாம்.

### சதா சாரம் (அல்லது) நன்னடக்கை :

நற்கதி அடைவதே நார்களாகிய நமது நோக்கமாக இருக்க வேண்டும். நற்கதி நன்னடத்தையால்தான் சித்திக்கும். சத் என்பது பகவானையே குறிக்கும் பதமாம். ஆசாரம் நடக்கை ஆம். எனவே நீதிவழி நிற்றலே சதா சாரமாம். ஆதலால் நீதிநெறி பிறழாமல் நடப்பதே முதலில் யாவருக்கும் வேண்டுவதாம். இந்த விஷயத்தில் தமிழில் உள்ள எல்லா நீதிநூல்களும் துணைபுரியும். "நீதிக்கண்ணுடி நினைவார் மனத்துளன்" என்பர் பெரியோர். இதனுல் இறை வழி நடத்தலே (அதாவது) இறைவனுக்கு (பெரியோர்கட்கு) உகப்பான வழியில் பணிபுரிதலே நன்றும். இவ்வாறு நடப்பதால் தன்னலம் ஒழியும். "பாரதந்த்ரியம் பிறந்தாலொழிய அர்த்தகாமராகத்வேஷாதிகள் ஒழியா" என்பர் திருக்கோட்டியூர் நம்பிகள். மேலும், "இராகத்வேஷாதிகள் ஒழிந்தாலொழிய ஸ்ரீ வைஷ்ணவத்வம் கை கூடாது" என்பர் அவர். ஆதலால், அஹிம்சை—ஐம்பொறி அடக்கல் — அருள் — பொறை—ஞானம் — தவம்—தியானம்—சத்யம்—என்கிற எட்டு மலர்களால் நாம் பகவானை ஆராதிப்பதே சிறப்பாம். பாகவத அபசாரம் கூடாது. கட்குடி, சூது முதலிய தீய ஒழுக்கங்களிருத்தல் ஆகாது. தற்புகழ்ச்சி தகாது. காமம், கோபம், லோபம் இவை ஆத்ம நாசம் செய்து நரகத்திற் செல்லும்படி செய்யும். நன் முயற்சியால் ஊதியம் அடைந்து ஜீவிக்கவேண்டும். ஹரி நாம ஸ்மரணத்துடன் அதிகாலையில் எழுந்திருத்தல் தக்கது. பெண்கள் குருபரம்பரையையும் கணவனையும் எண்ணி எழுதல் நன்றும். கோயிலுக்குச் செல்வது முக்கியம். ஆலய தரிசன விதிப்படி நடந்துகொள்வது தான் பலனளிக்கும். கோயிலுக்குச் செல்லுகிற அந்த நாளிலாவது மாமிச போஜனம் செய்யாதிருத்தல் நல்லது. வராஹ புராணத்தில் சந்நிதியில் புரியக் கூடாதவையான முப்பத்திரண்டு குற்றங்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றைச் சேவார்த்திகள் நீக்கி நடப்பதே நன்மை தரும். "அடியேன்"; "தேவரீர்"; "ஸ்வாமி" போன்ற பரிபாஷைகளை உண்மையுணர்வோடு பேசுதல் தக்கதாகும். நூல்களில் ஸதாநுபவ யோக்யர்தான் சிறப்புடையயவர்கள் என்று பேசப்பட்டிருக்கிறது.

### முடிபுரை :

மக்கள் தெய்வ நம்பிக்கை பெறவேண்டும். ஸ்ரீமத் நாராயணனே சிறந்த தெய்வம் என்பது வைணவம். அந்த நம்பிக்கையுடன் நல்ல ஆசாரத்துடன் யாவரும் நடந்து கொள்வேண்டும். இதுதான் சிறந்த பக்தி ஆகும். பிறகு பகவானுடைய பெருமைகளை அறியவேண்டும். அப்பால் தத் தமக்குரிய பரம்பரை முறைப்படி ஆசாரியரை அடைந்து பஞ்ச சம்ஸ்காரம்—உபதேசம் அடையவேண்டும். பிறகு திருமந்திரம் முதலிய சிந்தனை உடையவராய்ப் பக்தி அல்லது பிரபத்தி மார்க்கத்தினை மேற்கொள்ளவேண்டும். இந்த மார்க்கங்களுக்குரிய அங்கங்களைத் தவருமல் கடைப்பிடிக்கவேண்டும். பிரபத்தியே சுலபமான சாதனமாகையால் அதற்கான இலக்ஷணங்களை அறிந்து செய்து எல்லாம் இறைவன் செயல் என்று அமைதியுற்று வாழ்வதே எம்மைக்கும் நன்றும்.



## தாமல் கிராமத்தில் லக்ஷார்ச்சனை

முத்திதரும் நகரேழில் முக்கியமாம் கச்சியென்றும், காசி முதலாகிய நன்னகரியெல்லாம் கார்மேனி அருளாளர் கச்சிக்கொவ்வாயென்றும் மகரிஷிகளாலும் ஆசார்யர்களாலும் கொண்டாடப்பட்ட ஸ்ரீ காஞ்சி க்ஷேத்திரத்துக்கு சமீபத்திலுள்ள தாமல் என்கிற கிராமத்தில் அச்சாரூபியாய் எழுந்தருளியிருக்கும் திருமாலழகி ஸமேத ஸ்ரீ தாமோதரப் பெருமாளுக்கு 7—11—58 முதல் 25—11—58 வரையில் லக்ஷார்ச்சனை நடந்தது. சதகலச திருமஞ்சனத்தோடு அர்ச்சனை பூர்த்தியாயிற்று. ஸ்ரீ தூப்பல் ராமானுஜாசாரியார் அச்சாவதாரத்தைப்பற்றி மிகவும் சிறப்பாக உபந்யாசம் செய்தார்.

# ஸ்ரீ விஷ்வக் ஸேனர்

தஞ்சை, பண்டித சிரோமணி திரு ஏ. எஸ். அரங்கநாதாச்சாரியார்

திருமாலின் நித்ய வாஸஸ்தலமும், அந்தமில் பேரின்பமளிக்க வல்லதுமான பரமபதம் என்கிற ஸ்ரீவைகுண்டத்தில், எழுந்தருளியிருக்கும் 'நித்யஸூரிகளுள், ஸ்ரீவிஷ்வக்ஸேனரும் ஒருவர். திருமாலின் (ஜகத்ரக்ஷணம்), 'உலகைக்காத்தல்' என்ற தொழிலுக்கு, படைத்தலைவராக இருந்து பணியாற்றுபவர் ஸ்ரீ விஷ்வக் ஸேனர். 'விஷ்வக்' என்ற ஸம்ஸ்கிருதச் சொல்லிற்கு 'எங்கும்' என்பது பொருளாகும். எந்த இடத்திற்கும் செல்லவல்ல படைகளைக் கொண்டிருப்பதாலும், எந்த இடத்திலும் படைகளை வைத்திருப்பதாலும், "விஷ்வக்ஸேனர்" என்ற திருநாமமேற்பட்டது. விஷ்ணுவின் படைகளுக்கெல்லாந் தலைமையான பதவியிலிருப்பதாலேயே, 'சேனை முதலியார்' என்றும் வழங்கப்படுகிறார். 'முதல்வர்' என்ற கருத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் 'முதலியார்' என்ற சொல் வழங்கப்படுகிறது.

### உதவியாளர்கள்

இவருக்குக் கீழ் :

கணுதிபதி
ஜயத்ஸேனர்
ஹரிவக்த்ரன்
காலப்ரக்ருதி

என்ற நான்கு உபதலைவர்களுண்டு. அவர்களின் கீழ். பல படைகளிருந்து கொண்டு, உலகைக்காத்து வருகின்றன. தவிர்க்க முடியாத நிலையிலேயே ஸாது பரித்ராணத்திற்காக எம்பெருமான் அவதாரம் செய்கிறாரே தவிர மற்ற சமயங்களில் இப்படையையே உலகைக்காக்கப் போதுமானது.

### மூன்றாவது குரு

ஸ்ரீவைஷ்ணவர்களது குருபரம்பரை வரிசையில் சேனை முதலியார், 3வது குருவாகிறார். திருமால் திருமந்தரத்தைப் பிராட்டியாகிய இலக்குமிக்கு உபதேசம் செய்ய, பிராட்டியும் ஸ்ரீ விஷ்வக்ஸேனருக்கு (திருமந்திரோபதேசம்) உபதேசம் செய்ததால்: அவர் தமது அம்சமான நம்மாழ்வாருக்கு, (அவர் யோகநிலையிலிருந்த பொழுது) பஞ்சஸம்ஸ்காரமும், மந்த்ரோபதேசமும் செய்ததாக குரு பரம்பரை கூறும். ஆகவே **ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் 3வது குருஸ்தானத்தை சேனை முதலியார் பெறுகிறார்.**

### 'ஸூத்ரவதீ'யின் பர்த்தா

சேனை முதலியாரது மனைவியின் பெயர் 'ஸூத்ரவதீ' என்று கூறப்படுகிறது.

வந்தே வைகுண்ட ஸேனான்யம்
தேவம் ஸூத்ரவதீஸகம்
யத்வேத்ரசிகரஸ்பந்தே
விச்வமேதத்வ்யவஸ்திதம்

கருத்து :—வைகுண்டத்திலுள்ள படைத்தலைவனும், ஸூத்ரவதீ தேவியின் கணவனும், எவனது கையிலுள்ள குச்சி அசையும்பொழுதே உலகம் நிலை பெற்றுவிடுகிறதோ அவ்வித சக்தியுடையவனுமான ஸ்ரீவிஷ்வக்ஸேனனை வணங்குகிறேன். (ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகனது 'தயாசதக'த்தில் 3வது சுலோகம்)

### இடையூறுகளைப் போக்குபவர்

தமது படைகளின் மூலம் உலகில் அமைதி நிலவச்செய்து இடையூறுகளைப் போக்குவதால், எந்த நற்காரியம் செய்

தாலும் முதலில் இவருக்குப் பூஜை செய்யப்படுகிறது.

ஆதௌ விஷ்வக்ஸேனாராதனம் கரிஷ்யே என்று ஸங்கல்பம் செய்து கொள்வதை வைஷ்ணவர் அறிவர். இந்நிலையில், இவர், சைவர்களால் வழிபடப்படும் 'கணபதி'யைப் போன்றவராகிறார். இதனை, தேசிகன், தமது 'தயாசதக'த்தின் 5வது சுலோகத்தில்

*அசேஷ விக்ன சமனம் அனீகேச்வர*
*மாச்ரயே*
*ஸ்ரீமத: கருணம்போதௌ*
*சிக்ஷாஸ்ரோத இவோத்திதம்,*

**கருத்து** :—" பக்தர்கட்கு ஏற்படும் இடையூறுகளைப் போக்கடிப்பவனும், படைத்தலைவனும், ஸ்ரீநிவாஸனது கருணைக்கடலிலிருந்து பிரவாஹம் போல் கிளம்பி 'சிக்ஷணை' செய்து வருபவருமான ஸ்ரீவிஷ்வக்ஸேனரைத் தஞ்சம் புகுகிறேன்" என்று கூறுகிறார். இங்கு 'சிக்ஷை' என்பது உபதேச முறையையும், அதிலும் திருந்தாதவர்கட்குத் தண்டனையையும் குறிப்பிடும் நிலையில் அமைந்துள்ளது சுவைக்கத்தக்கது. எனவே **இடையூறுகளைப்போக்குபவர்** என்பது ஸ்தாபிதமாகிறது.

## நிர்மால்யதாரீ

ஸ்ரீ விஷ்ணுவின் நிர்மால்யத்தைத் தரிப்பவரென்றும், (சைவத்தில் ஸ்ரீசண்டிகேச்வரர் போல) ஸ்ரீ விஷ்ணுவைப்போல நான்கு கைகள் உண்டென்றும், அவைகளில் சங்கு, சக்ரம், கதை, முதலியவைகளை தரிக்கிறரென்றும், வெண்மையான தாமரை மலர்மேல் வீற்றிருப்பவரென்றும், செந்நிறமானவரென்றும், **நீண்ட மீசையையும்,** சடையையும் உடையவரென்றும், **"காளிகாபுராண"**த்தில், 42-வது அத்யாயத்திலுள்ள கீழ்க்கண்ட சுலோகங்கள் கூறுகின்றன.

*நிர்மால்யதாரீ விஷ்ணோஸ்து*
*விஷ்வக்ஸேன: சதுர்புஜ:*
*சங்க, சக்ர, கதா பாணி:*
*தீர்கச் மச்ருர் ஜடாதர;*
*ரக்த பிங்கள வர்ணஸ்து*
*ஸித பத்மோ பரிஸ்தித:*

வைகானஸாகமத்தில், (அத்ரிப் ரோக்தம்) 21-வது அத்யாயத்தில் 19 முதல் 21 சுலோகங்களில், ஸ்ரீ விஷ்வக்ஸேன மூர்த்தி செய்யப்பட வேண்டிய விதம், அளவு, முதலியவை குறிப்பிடப்பட்டுள்ளது. அதில், செந்நிறத்தில் மூர்த்தியமைக்கப்பட வேண்டுமென்றும், ஸ்ரீ விஷ்ணுவைப் போல் நான்கு திருக் கரங்களும், கிரீடம் முதலியவைகளும், வீற்றிருக்கும் திருக்கோலத்தில் அமைக்கப்பட வேண்டுமென்றும், ஸ்ரீ விஷ்ணுவின் மார்பிலுள்ள **ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம், யக்நோபவீதம் (பூணூல்) ஆகிய மூன்றும் விஷ்வக்ஸேனருக்குக் கிடையாதென்றும் கூறுகிறது.**

*விஷ்வக் ஸேனஞ்ச ரக்தாபம்*
*விதினைவச காரயேத்*
*கிரீடிநம் சதுர்பாஹும்*
*சங்க சக்ர, கதாதிபி:*
*விபூஷிதம் ஸுகாஸீனம்*
*ஸர்வ மங்யச்ச விஷ்ணுவத்*
**ஸ்ரீவத்ஸம் பிரம்ம ஸூத்ரஞ்ச**
**கௌஸ்துபஞ்ப விநைவதம்**

ஸ்ரீவிஷ்வக்ஸேனர் பூராட நக்ஷத்திரத்திலவதரித்தவரென்றும், லக்ஷ்மியைக் கொடியாக உடையவரென்றும், மஞ்சள் நிற ஆடையில் பிரியமுடையவரென்றும், சங்கம், சக்ரம், அபயம், கடி ஹஸ்தங்களுடனே, அல்லது சங்கம், சக்ரம், அபயம், தடியுடனே அமைக்கப்படக்கூடியவரென்றும், ஆலயங்களில், விமானத்தின் அருகிலோ, அல்லது வடபிராகாரத்தில் வடக்கிற்கும், வடகிழக்கிற்கு மிடையேயோ, இவரது மூர்த்தி தெற்கு நோக்கி அமைக்கப்பட வேண்டுமென்றும், 'ஜயா' என்பவள் இவரது மனைவி என்றும் வைகானஸாகமத்தில் (மரீசி இயற்றியது) 19-வது படலத்தில் "உதக்பிராகார பார்ச்வே" என்று தொடங்கும் பகுதி விவரிக்கிறது.

**ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில்,**

" த்வதீய புக்தோஞ்சித சேஷ போஜிநா
த்வயா நிஸிருஷ்டாத்ம பரேண யத்யதா




தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

(படைத்தல். காத்தல். அழித்தல். மறைத்தல். அருளல்.)

# ஆனந்தக் கூத்து

(பதின்மர் சாட்சி)

பி. ஸ்ரீ.

கூரை வீடுகள் உள்ள ஒரு குக்கிராமம். வீட்டு வாசலில் சிறுவன் ஒரு பம்பரத்தைச் சாட்டையால் சுழற்றிவிட்டு உள்ளே போய் விடுகிறான். பம்பரம் முடுகிச் சுற்றிக்கொண் டிருக்கிறது. தெருவழியாக வந்த ஒரு கவி ராயரும் குழந்தைகளோடு குழந்தையாக நின்று பார்த்துக்கொண்டிருக்கிறார்.

'சாட்டைக்கும் பம்பரத்துக்கும் உள்ள தொடர்பு நீங்கிப்போய்விட்டது. சுழற்றிவிட்ட பையனும் வீட்டுக்குள் மறைந்து விட்டான். என்றாலும், இந்தப் பம்பரத்திற்குத்தான் என்ன வேகம்! ஆ, சுற்றுவதும் தெரியாதபடி அவ்வளவு வேகம்!' என்று தமக்குள் தாமே சொல்லிக்கொள்கிறார் கவிராயர்.

இப்போது ஒரு குழந்தை புதிதாக வந்து சேர்ந்திருக்கிறான், இச்சிறு கூட்டத்திலே. 'அடே, பம்பரம் தூங்குகிறது!' என்று சொல்லிக்கொண்டே, வைத்த கண் வாங்காமல் பார்க்கத் தொடங்குகிறான். 'இதோ, தானாகவே, இயற்கையாகவே இந்தப் பம்பரம் ஆடத்தொடங்கிவிட்டது!' என்கிறான்.

கவிராயரோ தம் குழந்தை-மனோபாவத் துடன், 'ஓ பம்பரமே! உன் சொந்த வேகத் தில் நீ சுற்றிக்கொண்டு வருவதாக மயங்கு கிறாயோ?' என்று கேட்டுவிட்டு அப்பால் போகிறார்.

தினங்கள், மாதங்கள், ஆண்டுகள் சுழன் றோடுகின்றன. வயது முதிர்ந்த கவிராயர் திருக் குற்றாலத்துக்குன்றில் ஏறி ஓரிடத்தில் நின்று கொண்டு அங்கும் இங்கும் பார்க்கிறார். உள் ளமோ அண்டத்தையே சுற்றி வந்துவிடு கிறது. கண்ணெதிரே அழகழகான இயற் கைக் காட்சிகள்; கருத்திலே பிரபஞ்சம் குறித்த பிரசினைகள்!

### பம்பர ரகசியமே பிரபஞ்ச ரகசியம்

சிறிது நேரம் மெய்ம்மறந்து நின்று கொண்டிருக்கிறார். பல ஆண்டுகளுக்குமுன் மேலகரம் என்ற தமது ஊரில் நிகழ்ந்த அந் தக் குழந்தை விளையாட்டு அப்படியே நினை விற்கு வருகிறது. அந்தப் பம்பர ரகசியம் இப்போது உள்ளத்திலே சுற்றிச்சுழன்று விளையாடுகிறது.

'நானே சுழலுகிறேன்; இப்படிச் சுற்று வது என் இயற்கை!' என்று மயங்கிய அந்த மயக்கம் பம்பரத்திற்கும் உதவாது; உலகத் திற்கும் உதவாது. இயக்கத்திற்கும் இயக்கி யவனுக்கும் தொடர்பு உண்டு. இந்த ஞானம் 'திரிகூட ஞானக் குன்ற'த்தில் உறுதிப்படு கிறது.

உள்ளத்திற்குள்ளிருந்து மலையூற்றைப் போல் குமுறிக்கொண்டு வருகிறது வாக்கு.

---

ப்ரியேண ஸேநாபதிநா நிவேதிதம்"
சுதாநுஜாதம் தமுதார வீக்ஷணே;
(42-வது சுலோகம்)

நிர்மால்யதாரீ என்பதும், ஸேனாபதி என்பதும் குறிப்பிடப் படுகிறது.

ஸ்ரீவைகுண்ட கத்யத்திலும், ஸ்ரீ விஷ்வக் ஸேனரைப் பற்றிய குறிப்புள்ளது.

இவைகளால், இவர் ஸேனாபதி என்பதும் விக்னத்வம்ஸகாரீ என்பதும் ஸித்தம்.

மஹாகவி காளிதாஸனின் ரகு வம்சத்தில் 15-வது ஸர்கம், 13-வது சுலோகத்திலும் மாக கவியின், சிசுபாலவத காவ்யத்தில் 10-வது ஸர்கம் 55-வது சுலோகத்திலும் ஸ்ரீ விஷ்வக்ஸேனரைப் பற்றிய குறிப்புள்ளது.

**சாட்டிநிற்கும் அண்டம்எலாம்**
**சாட்டையிலாப் பம்பரம்போல்**
**ஆட்டுவிக்கும் குற்ருலத்(து)**
**அண்ணலார்.**

குற்ருலத்துக் கூத்தர் பம்பரங்களைச் சுழற்றிவிட்டு விளையாடினராம். அந்தப் பம் பரங்கள் ஆடிக்கொண்டேயிருக்கின்றன; இன்னும் ஆடிக்கொண்டிருக்கின்றன வான வீதியிலே. அவையே அண்டங்கள். ஆனல் அது என்ன, 'சாட்டையிலாப் பம்பரம்'? சாட்டைகொண்டு சுழற்றிவிட்டவர் தம் சிதம் பர வீட்டில்—சிதாகாசத் திரைமறைவில்—இருக்கிருர்.

அந்தச் சாட்டைதான் அண்டங்களை யெல்லாம் ஒழுங்காகச் சுற்றிவரச் செய்து கொண்டிருக்கும் நியதி—நீதி. அந்தச் சூட்சம இயற்கை நியதியை, அந்தத் தர்ம நீதியை 'ஏதோ ஒருவகை நியதி' என்றுதான் விஞ் ஞானத்தாலும் ஊகிக்கமுடிகிறது. பக்தர் களோ அதைத் 'தெய்வ சங்கற்பம்' 'அவன் அருள்' என்று நம்புவர், நாடுவர், காண்பர்.

எங்கே பார்த்தாலும் இயக்கம்தான். அணுக்கள் ஆடுகின்றன; அண்டங்கள் ஆடு கின்றன. புறத்திலும் ஆட்டம்; அகத்தி லும் ஆட்டம். பேயாட்டமா?—ஒரே போராட் டமா?

**வட்ட உருளைகள்போல்**
**வானத்தில் அண்டங்கள்**
**எட்ட நிரப்பிஅவை**
**எப்போதும் ஓட்டுகின்ருய்!**

என்று பாரதி பாடுகிருரே, அந்த ஓட்டமும் ஆட்டமுமாகிய பேரியக்கத்தை இயக்குகிறவர் வேறு யாருமில்லை, இயற்கையையே உடலா கக்கொண்ட நிலையில் இயங்குகின்ற ஆனந்தக் கூத்தர்தாம். 'பிரபஞ்ச ரகசியம் பம்பர ரகசி யம்போல் அவ்வளவு தெளிவாகக் காண கிறதே!' என்று ஆச்சரியத்தோடு விழித்துக் கொள்கிருர் **திரிகூடராசப்பக் கவிராயர்.**

'கடவுளே! நீ ஒரு பாட்டைப்போல் அவ் வளவு எளிமையுடன் இருக்கிருய்!' என்ருர் வங்கக்கவி ரவீந்திரநாதர். 'திருக்குற்ருலக் குறவஞ்சி ஆசிரியரான திரிகூடராசப்பக் கவி ராயருக்கு நடராஜ தத்துவம் தமது குறவஞ் சிப் பாட்டைபோல் அவ்வளவு எளிமையாக, 'திரிகூட ஞானக் குன்றம்' என்று இவர் குறிப்பிடும் குற்ருலமலையிவ் உதயமாகிறது.

**கொட்டழகு கூத்துடையார்**

என்றும் குறிப்பிடுகிருர் இக்கூத்தப் பெரு மானை. 'பொருளற்ற பேயாட்டமன்று இப்பிர பஞ்சம்; இராக தாளங்களுக்கு இசைய நடைபெறும் ஆனந்தக்கூத்தே!' என்பது பகல்போல் வெளிச்சமாகிறது.

## அம்பலத்தில் கேட்குமா?

'திருக்குற்ருலக் குறவஞ்சி' கி. பி. பதி னேழாம் நூற்ருண்டின் இறுதியில் தோன் றிப் பதினெட்டாம் நூற்ருண்டின் தொடக் கத்தில் பிரசித்தமாகிவிட்ட மக்கள் - இலக்கி யம். இதற்குப் பின்பு தோன்றிய வேருெரு மக்கள் - இலக்கியம் நந்தனர் சரித்திரக் கீர்த் தனை. இதிலும் நடராஜ தத்துவம் இனிது புலனுகக் காண்கிருேம்.

'ஆகாசத்தை நோக்கிப் பிரார்த்தனை செய்யவேண்டாம்; அதற்குக் காது கேட் காது!' என்ருர் பக்தி மதத்தை ஒப்புக்கொள் ளாத ஒருவர். நந்தனர் சரித்திரத்தில் வரும் ஆதனூர் வேதியனும், நந்தனரின் நடராஜ பக்தியைப் பரிகசிக்கிருன்.

**அம்பலமாவது ஆகாசம்,**
**உற்றுப் பாரு;**
**அருளில்லை பொருளில்லை,**
**கண்டு தேறு!**

நந்தனர் கொள்கையோ,

**அழுது முறையிட்டால்**
**அம்பலத்தே கேட்கும்**

என்பது.

ஸ்தூலமாக ஆகாசத்தைப் பார்த்தாலும் மண்ணையே நோக்கி நோக்கி அலுத்துப்போன உள்ளத்திற்கு ஒருவாறு ஆறுதல் கிடைக் கும். இரவிலே நட்சத்திரங்கள் மினிரும் எல்லையற்ற வானத்தை நோக்கும்போது இத யத்திலே பக்தி ஏற்படுவது இயல்பு. ஊடுரு விப் பார்க்கும் மெய்ஞ்ஞானியருக்கோ சிதா காசத்தில் எல்லாவற்றையும் ஆட்டிவைக்கும் கடவுளுண்மை புலனுவதும் அரிதன்று.

எல்லையற்ற வானவெளியை நோக்கி, 'எல்லாம் வெறும் பாழ்; சுத்த சூனியம்,

அங்கே அருளில்லை, பொருளில்லை. இல்லை என்பது கொட்டை யெழுத்தில் அந்த வான வளையத்திலே தெளிவாகக் காண்கிறது!' என்கிறான் நாஸ்திகன். ஆனால் நோக்குவது வேறு, உற்றுநோக்குவது வேறு, ஊடுருவிப் பார்ப்பது வேறு. ஊடுருவிப் பார்க்கும் மெய்ஞ்ஞானி,

**தூக்கிய பாதம்கண்டோம்;**
**ஜோதி கண்டோம்;**
**சுத்தவெளிக்[கு] உள்ளேஒரு**
**கூத்தும் கண்டோம்!**

என்று குதூகலம் அடைகிறான்.

இந்தக் கூத்தர் எங்கும் கண்களாய்ப் பார்க்கிறார்; எங்கும் செவிகளாய்க் கேட்கிறார். அந்தச் சிதாகாசத்திலே, இவருடைய அம்பலத்திலே கேட்க வேண்டுமென்றால், சத்தம் போட்டுப் பயனில்லை; கூக்குரலிட்டுப் பிரார்த்திக்க வேண்டும் என்பதில்லை. உள்ளுருகி அழுது முறையிட்டால் அம்பலத்தே கேட்கும் என்பது 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை' ஆசிரியர் கோபாலகிருஷ்ண பாரதியார் நமக்குச் சொல்லும் நல்ல செய்தி.

## மரணபயத்துக்கும் மருந்து

'திருக்குற்றாலக் குறவஞ்சி' ஆசிரியருக்கு முன் தோன்றித் திகழ்ந்த குமரகுருபர அடிகளின் வாக்கிலும் நடராஜ தத்துவத்தின் சில மர்மங்களைக் காண்கிறோம்.

**மதுவிரி கோதை மடவரற்(கு)அம்ம!**
**புதுவிருந்(து) உண்ணஉண்ண**
**அதிசயம் விளைக்கும்நின்**
**அற்புதக் கூத்தே!**

என்ற வாக்கைத்தான் பாருங்கள்.

உடன் இருந்து இறைவனது ஆனந்தக் கூத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் உமையம்மைக்கே என்றும் புதுவிருந்தாக இருக்கிறதாம் இக்கூத்து. ஆம், புதுமைக்கும் புதுமையானது, பழமைக்கும் பழமையானது ஆனந்தக்கூத்து.

இந்த விருந்தே பிறவிநோய்க்கு மாமருந்து, மரணபயத்திற்கும் மாமருந்து என்பர் குமரகுருபர அடிகள். 'கோதையோடும் கறைக் கண்டன் (நீலகண்டன்) ஆடும் திறம் காண்மினோ, காண்மினோ!' என்று அடிகள் நடராஜ தரிசனத்திற்கு நம்மைக் கூவி அழைக்கிறார்.

## பிறவியும் வேண்டுவதே!

நடராஜமூர்த்தியைத் தரிசித்துப் பேறு பெறுவதற்கு மனிதப்பிறவியும் வேண்டும் என்கிறார் அப்பர் சுவாமிகள். ஆனந்தக் கூத்தர், தம்மை நோக்கி, 'என்று வந்தாய்?' என்று கேட்பதுபோல் குறிப்புத் தோன்ற நடனம் புரிவதாக உணர்ந்து பாடியிருக்கிறார் இவர்.

ஹென்ரி நாரிஸ் ரஸ்ஸல் என்ற வான சாஸ்திரி வானவெளியின் நிலைகுறித்த தம் சொற்பொழிவை முடித்ததும் ஒரு மாது, 'பிரபஞ்சம் அவ்வளவு பெரிதாகவும், நமது உலகம் இவ்வளவு சிறிதாகவும் இருக்கும் போது, கடவுள் நம்மைக் கொஞ்சமாவது கவனிக்கிறார் என்று உண்மையாக நாம் நம்பக் கூடுமா?' என்று கேட்டார். அதற்கு ரஸ்ஸல், 'அம்மா, அது நீங்கள் எவ்வளவு பெரிய கடவுளை நம்புகிறீர்கள் என்பதையே பொறுத்திருக்கிறது' என்று பதில் சொன்னார்.

பிரபஞ்சம் பெரிதுதான்; ஆனால் இதை ஆட்டுவிக்கும் பெருமானின் பெருமை எங்கே? —பிரபஞ்சம் எங்கே?

**சென்று தொழுமின்கள்**
**தில்லையுள்சிற்றம் பலத்துநட்டம்,**
**'என்றுவந் தாய்?'என்னும்**
**எம்பெருமான்தன் திருக்குறிப்பே!**

என்று பாடும் அப்பர் சுவாமிகளின் 'எம்பெருமா'னது பெருமை, அண்டகோடிகளை ஆட்டுவிக்கும்போதே அடியவர் ஒவ்வொருவர் நலத்தையும் கவனிக்க வல்லது என்ற குறிப்பையும் குறித்த தேவாரப்பாட்டு உய்த்துணர வைக்கிறது.

## மாறிலா மகிழ்ச்சி

சுந்தரமூர்த்தி சுவாமிகளும் நடராஜ தத்துவத்தில் ஈடுபட்டு, 'உமது திருக்கூத்துக் கும்பிடும் வாழ்வு பெற்ற இம்மானிடப் பிறப்பே எனக்கு நல்ல இன்பம் தருவதாயிற்று!' என்று பாடியதாகச் சேக்கிழார் தெரிவிக்கிறார். ஆனால் அந்தத் திருப்பதிகம் இப்போது கிடைக்கவில்லை.

சுந்தரமூர்த்திகள் தம்மை மறந்து நடராஜ தரிசனம் செய்தபோது, 'பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்' என்பது சேக்கிழார் வாக்கு. நடராஜ தத்துவத்தை உணர்ந்து பக்திசெய்வோரெல்லாம் இத்தகைய 'மாறிலா மகிழ்ச்சி' நிலையை அடையக் கூடும்.

### இதுவே செல்வம்!

சைவ உலகின் தனி நாயகமாகிய திரு ஞானசம்பந்தர் நடராஜப் பெருமானின் திருவடி தொழும் இன்பமே இன்பம் என்றும், இதுவே செல்வத்துள் செல்வம் என்றும் பாடுகிறார். முதல் முதல் நாம் தேடவேண்டியது நடராஜப் பெருமானின் அருட் செல்வம்தான். மற்றச் செல்வங்கள் தாமே வந்து அடையும் என்ற குறிப்பைச் 'செல்வ நெடு மாடம்' என்று தொடங்கும் பாட்டிலே காணலாம்.

'ஒரு குடிசையில் விசாலமான இதயத்தைக் காண்பது ஒரு பெரிய மாளிகையில் குறுகிய இதயம் ஒன்றைக் காண்பதைக் காட்டிலும் மேலானது' என்றார் ஒரு கிரேக்க நல்லறிஞர். நமது ஞானசம்பந்தப் பெருமானே தில்லையில் விசாலமான இதயங்களை விசாலமான மாளிகைகளில் கண்டு பாடியிருக்கிறார்.

### கருணையும் காதலும்

சைவசமய ஆசாரியர்களில் மணிவாசகப் பெருமானும நடராஜ தத்துவத்தில் ஈடுபட்டவர் தாம்.

தினைத்தனை உள்ளதோர்
  பூவினில்தேன் உண்ணாதே,
நினைத்தொறும் காண்டொறும்
  பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும்(பு) உள்நெக
  ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே
  சென்றூதாய், கோத்தும்பீ!

என்ற மணிவாசகத்தைப் பாருங்கள். நடராஜ பக்தி யென்ற 'ஆனந்தத்தேன்' மணிவாசகர் வாக்கைத் 'திருவாசகம் என்னும் தேன்' ஆக்கி, இன்றும் என்றும் பக்தர்களுக்கு உரிமையாகச் செய்திருக்கிறது.

நடராஜ பக்தியில் சிவபெருமானுடைய கருணைக்கும் காதலுக்கும் சிறப்பாக இடம் உண்டு.

தென்பால் உகந்(து) ஆடும்
  தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான்
  பெரும்பித்தன் காணேடீ
பெண்பால் உகந்திலனேல்
  பேதாய்! இருநிலத்தோர்
விண்பால் இயோ(கு) எய்தி
  வீடுவர்காண் சாழலோ!

என்ற மணிவாசகத்தின் பொருள் ஊன்றி நோக்கத் தக்கது.

### திருமூலர் கண்ட ஆனந்தம்

திருமூலர் கண்ட நடராஜ தத்துவத்திலும் சில அரிய உண்மைகளைக் கண்டு கொள்ளலாம். சிதம்பரத்தில் திருமூலர் சில தினங்களே தங்கினார். ஆனால் சிதம்பரம் இவருள்ளத்தில் எப்போதும் தங்கிவிட்டது! தில்லை வெளியிலே கலந்து விட்டார் நந்தனார் என்றால், 'தில்லைவெளி கலந்து விட்டது திருமூலர் உள்ளத்திலே!' எனலாம்.

'உலகம் உய்ய எடுத்தருளிய சேவடி'யை இந்தச் சிவயோகியார் சிதம்பரத்தில் கண்டது போல் எங்கும் கண்டார். 'அம்பலமாவது அகில சராசரம்' என்றும், 'அண்டம், நடம் செயும் ஆலயம் தானே!' என்றும் கூறும் திருமூலயோகியின் யோகக்காட்சியில்,

எங்கும் திருமேனி;
  எங்கும் சிவசத்தி;
எங்கும் சிதம்பரம்;
  எங்கும் திருநட்டம்!

இந்த நடனத்தைத் திருமூலர் எவ்வளவு தெளிவாகக் கண்டார் தெரியுமா?

ஆடிய காலும்,
  அதில்சிலம் போசையும்,
பாடிய பாட்டும்
  பலவான நாட்டமும்

கண்டு கொண்டதாக உறுதி கூறுகிறார்.

இவ்வளவு தெளிவாக எங்கே கண்டார், தெரியவேண்டாமா? "இருதய கமலம்" என்று புராணம் வருணிக்கும் அந்த அகச் சிற்றம்பலத்திலே கண்டு கொண்டாராம். நம் தமிழகத்தின் பழைய தலங்களில் ஒன்றாகிய தில்லை மூதூர் புறச்சிற்றம்பலம் (புறஉலகத்திலுள்ள சிதம்பரம்.)

திருவாவடுதுறை அரசமரத்தடியில் திருமூலர்,

**யாவையும் ஆடிடும்,**
**எம்இறை ஆடவே!**

என்ற மகத்தான உண்மையைக் கண்டு தெளிந்தார். தனித்து நிற்கும் அறிவாகிய சிவம் அசைவில்லாதது. இயற்கையை உடலாகக் கொண்ட நிலையில் கருணையால் சிவம் இயங்க, இயற்கை இயங்குகிறது. இந்தச் சிவ நடனம் ஓயாத அருள் நடனம் என்பது திருமூலர் சுட்டிக் காட்டும் உண்மை.

நடராஜப் பெருமானின் ஞானானந்தக் கூத்தைத் திருமூலர் பின்வருமாறு வருணிக்கிறார்:

**வேதங்கள் ஆட,**
**மிகுஆ கமம்ஆடக்,**
**கீதங்கள் ஆடக்,**
**கிளர் அண்டம் ஏழாடப்,**
**பூதங்கள் ஆடப்**
**புவனம் முழுதாட,**
**நாதம்கொண்(டு) ஆடினன்**
**ஞானானந் தக்கூத்தே**

திருநடனத்திலே சாந்தம் பயங்கரம் என்ற இருவகை நிலைகளையும் பார்க்கிறோம். சாந்த நிலையில் ஆக்கவேலை நடைபெறுகிறது. "உன்மத்த" நடனம் என்று அஞ்சும் நிலையில் அழிவு வேலை நடைபெறுகிறது. அழித்தலை வியாஜமாகக் கொண்டு விடுதலை அருளுகிறது இறையருள் என்பது சிவநேசர் கண்ட உண்மை. ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் என்ற ஐந்தொழில்களும் சிவநடனத்திலே நடைபெறுகின்றன என்பர். இத்தொழில்களெல்லாம் உயிர்களுக்காகவே நடைபெறுகின்றன.

ஞானானந்தக் கூத்திலும் உன்மத்த நடனத்திலும் ஒருங்கே நாதம் உண்டு, தாளம் உண்டு—அதாவது ஒழுங்கு உண்டு. இத்தகைய தத்துவத்தைத் திருமூலர்,

**ஆடியும் பாடியும்**
**அழுதும் அரற்றியும்**
**தேடியும் கண்டேன்!**

என்கிறார்.

ஆனந்தக் கூத்தின் உண்மையை—சிதம்பர ரகசியத்தை, — திருவாவடுதுறையிலேயே கண்டு கொண்ட திருமூலர்,

**ஆனந்தம் ஆடரங்(கு),**
**ஆனந்தம் பாடல்கள்,**
**ஆனந்தம் பல்லியம்,**
**ஆனந்த வாச்சியம்,**
**ஆனந்த மாக**
**அகில சராசரம்**
**ஆனந்தம், ஆனந்தக்**
**கூத்துகந் தானுக்கே**

என்று ஒரே ஆனந்த மந்திரமாகப் பொழிந்திருக்கிறார்.

இந்த ஆனந்தக் கூத்தை உணர முயல்வோரும் பயம் கவலை துன்பம் முதலியவற்றைத் தள்ளி ஆனந்தம் அடைவார்கள் என்பதில் பக்தர்களுக்கு ஐயம் இல்லை. இவர்கள் தாம் காணும் ஆனந்தத்தைப் பிறரும் கண்டு அனுபவிக்க வேண்டுமென்று எல்லா உயிருக்கும் அன்பு செய்வார்கள் என்பதும் நிச்சயம்.

## உண்மைக்குக் கவர்ச்சியான உருவம்

தாம் பெற்ற இன்பம் உலகம் பெற வேண்டும் என்று தான் மெய்ஞ்ஞானியரும், பக்த மணிகளும் கடவுளுண்மையை வசீகரமாக விளக்கும் திருவுருங்களைக் காட்டியிருக்கிறார்கள். திருமூலரைப் போன்ற சிவயோகிகளும் தங்கள் தியானத்திற்கும் உபாசனைக்கும் நடராஜ உருவத்தைக் கொண்டனரென்றால், அது நமது ஆழ்ந்த சிந்தனைக்கு உரியதல்லவா?

ஆண்டவன் அணுவுக்கு அணுவாய் எங்கும தங்குகிறான் என்றும், எல்லாவற்றையும் கடந்து அப்பாலுக்கு அப்பாலாகவும் இருக்கிறான் என்றும் வேதாந்தம் சொல்லுகிறது. காரைக்காலம்மையார் பாட்டு ஒன்றில் இந்த வேதாந்தக் கொள்கை எவ்வளவு சக்தியுடன், எவ்வளவு வசீகரமாக ஒரு நடனத் திருக்கோலம் பெற்று வருகிறது பாருங்கள்!

**அடிபேரில் பாதாளம்**
**பேரும்; அடிகள்**
**முடிபேரில் மாமுகடு**
**பேரும்;—கடகம்**
**மறிந்தாடு கைபேரில்**
**வான்திசைகள் பேரும்,**
**அறிந்தாடும்; ஆற்ற(து)**
**அரங்கு!**

என்ற பாட்டைப் பாடிப் பாடிப் பாருங்கள்.

'ஆனந்த எல்லையில் தனிப்பெருங் கூத்து' என்று இக்கூத்தைக் குறிப்பிடும் சேக்கிழார் கற்பனை கடந்த ஜோதியின் கருணையுருவமாகவும் அற்புதக் கோலமாகவும் ஆனந்தக் கூத்தரைச் சுட்டிக் காட்டுகிறார். பரம் பொருளுண்மைக்கு இதைக் காட்டிலும் கவர்ச்சியான உருவமும் இருக்க முடியுமா?

# அறிதுயில் அமர்ந்த கருணைமாமுகில்

பி. ஸ்ரீ.

'மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப் பொருள்' என்று அறிஞர்கள் பரம்பொருளைக் குறிப்பிடுவர். கடவுளே உண்மை என்பது தத்துவப் பேரறிஞர் கொள்கையென்றால், உண்மையே கடவுள் என்பது 'செழுங்கருணை ஓடிப் பெருகும்' நெஞ்சினையுடைய மகாத்மாக்களின் அனுபவம். இத்தகைய உண்மை அல்லது மெய்ப்பொருளை இருபெருந்தெய்வக் கலையுருவில் நம் முன்னோர் வழிபடலாயினர். ஒன்று நடராஜ உருவம்; மற்றது அறிதுயில் அமர்ந்த அரங்கன் உருவம்.

ஆடும் பெருமான் என்றும், உறங்கும் பெருமான் என்றும் தமிழ்ப் பொதுமக்கள் தில்லையில் கோயில்கொண்டிருக்கும் ஆனந்தக் கூத்தனையும், திருவரங்கத்தில் கோயில் கொண்டிருக்கும் அரங்கநாதனையும் நீண்ட காலமாக வழிபட்டு ஆறுதலும் ஆனந்தமும் அடைந்துவந்திருக்கிறார்கள்.

கருதுசெம்பொனின் அம்பலத்திலொர்
கடவுள்நின்று நடிக்குமே;
காவிரித்திரு நதியிலேஒரு
கருணைமாமுகில் துயிலுமே

என்பது தமிழ்மக்களிடையே வழங்கிவரும் பிரசித்தமான தனிப்பாடல்களில் ஒன்று.

## மூர்த்தி, கோயில், தலம்

இந்தக் கருணைமாமுகிலின் சயனவைபவத்தைச் சிலப்பதிகாரம் 'பலர் தொழுது ஏத்த...கிடந்த வண்ணம்' என்று சிறப்பித்துப் பேசுகிறது. 'தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம்' என்பது திவ்யப் பிரபந்தம். இக்கோயிலைப் 'பெரிய கோயில்' என்றும், இக்கோயிலில் அறிதுயில் அமர்ந்த அரங்கனைப் 'பெரிய பெருமாள்' என்றும் பிரசித்தமாகச் சொல்கிறார்கள். இப்பெரிய கோயிலைத் திவ்யகவி அழகிய மணவாளதாசர் ஸ்ரீ வைணவர்களின் மகாமந்திரமாகிய திரு எட்டெழுத்தின் வெளித்தோற்றம் என்பர்.

திரு எட்டெழுத்து என்ற அஷ்டாட்சரத்தில் உள்ள பிரணவம் விமானமாகவும், 'நமோ நாராயணாய' என்ற ஏழு எழுத்துக்களும் ஏழு பிரகாரங்களாகவும் காட்சியளிக்கின்றன என்பது அழகிய மணவாளதாசர் சுட்டிக்காட்டும் ஸ்ரீரங்க தத்துவம். 'அருமறை ஓதிய ஓர் எட்டெழுத்தும்... எம்கோன் விழி துயில் கொண்டருளத் திருமதில் ஏழும் விமானமும் ஆகிச் சிறக்கின்றவே' என்பது இவர் வாக்கு.

'தேனோங்கு சோலைத் திருவேங்கடம்' என்று திருப்பதியையும், 'வானோங்கு சோலை மலை' என்று திருமாலிருஞ்சோலையையும் பாடியிருக்கும் ஒரு பக்தகவி, திருவரங்கத்தைத் 'தான் ஓங்கு தென்னரங்கம்' என்றே சிறப்பித்திருக்கிறார். திருவரங்கமும், தொண்டரடிப் பொடியாழ்வார் பாடியிருப்பதுபோல், ஓர் அழகிய பெருஞ்சோலைதான்; கோயிலும் மலை போன்ற கோயில்தான். எனினும் திருவரங்கம் என்ற தனிச்சிறப்பே இதற்குப் போதும் என்பர். இத்தனிச் சிறப்பு அறிதுயில் அமர்ந்த திருவரங்கராஜரின் இராசதானி இது என்பதுதான்.

## 'பதின்மர் பாடும் பெருமாள்'

ஆழ்வார்களுள் பதின்மரும் ஆண்டாளும் பாடியிருக்கும் பெருமை அரங்கநாதனுக்கே உரியது. இப்பெருமானுக்கு உரிய பாசுரங்கள் திவ்யப் பிரபந்தத்தில் ஆங்காங்கே விரவிக்கிடந்து, எல்லாப் பாசுரங்களையும் சோபிக்கச் செய்கின்றன. இப் பாசுரங்களில் புலனாகும் ஸ்ரீரங்க தத்துவம் ஆழ்வார்களின் அருளிச் செயலுக்கெல்லாம் உயிர்நிலைக் கொள்கையாக ஒளிர்கின்றது என்று கூறுவது பொருந்துவதே.

பெரியாழ்வார் அறிதுயில் அமர்ந்த அரங்கனைத் 'திருவுடையாள் மணவாளா!' என்று கூவியழைக்கின்றார். இப் பெருமானை

அழகிய மணவாளன் என்று குறிப்பிடுவது பிரசித்தம். அழகிய அரங்க நகரில் கோயில் கொண்டிருக்கும் அழகிய மணவாளனது இயற்கைப் பேரழகை இந்த ஆழ்வார்,

**குன்றுடு கொழுமுகில்போல்,**
**குவளைகள்போல், குரைகடல்போல்,**
**நின்றுடு கணமயில்போல்**
**நிறமுடைய நெடுமால்**

என்ற தமது வாக்கில் அகங்குளிர வாய் குளிரப் பாடுகிறார்.

அம்மையை முன்னிட்டு அப்பனைச் சரணம் அடையவேண்டும் என்பது பக்தி மதத்தின் ஒரு பெருங்கொள்கை. அடியவர்களை ஏற்றுக்கொள்ளுமாறு 'சிபார்சு' செய்யும் பிராட்டியின் பெருங்கருணையோடு போட்டியிடுகிறதாம அறிதுயில் அமர்ந்த அண்ணலின் கருணை. குற்றம் பொறுக்கும் அன்னையே குற்றம் கூறினாலும்,

**என்அடியார் அதுசெய்யார்;**
**செய்தாரேல் நன்றுசெய்தார்!**

எனக் கருணைபுரிவர் அரங்கநாதர் என்று பாடுகிறார் பெரியாழ்வார். எனவே, இப்பெருமான் 'திருவுடையாள் மணவாளன்' மட்டுமல்ல, ஜீவாத்மாக்களுக்கெல்லாம் ஓர் அழகிய மணவாளன் என்பது இப்பெரியார் திருவுள்ளம்.

திருவரங்கத்தை இந்த ஆழ்வார் பக்தர்களும் சித்தர்களும் முனிவர்களும் பிறரும் 'தொழுது இறைஞ்சத் 'திசைவிளக்காய் நிற்கின்ற திருவரங்கம்' என்று போற்றுகிறார். இந்த அரங்கத்தில் அறிதுயில் அமர்ந்த அழகிய மணவாளனை 'என் அரங்கத்து இன்னமுதர், குழல் அழகர், வாய் அழகர், கண் அழகர்' என்றெல்லாம காதலித்துப் பேறு பெற்றது ஆண்டாளின் உள்ளம்.

'அரவரசப் பெருஞ்சோதி அனந்தன்' என்ற படுக்கையில் கண்வளரும் இந்தக் கருணை முகிலைக் கண்டுகளிக்க வேண்டுமென்று நெடுநாளாகத் துடித்துக் கொண்டிருந்தது குலசேகரரின் உள்ளம். இந்த ஆழ்வாரின் இந்த உயிர்நாடி இன்றும் துடிக்கக் காண்கிறோம் இவர் பாடிய 'பெருமாள் திருமொழி'யில். பாலையில் ஒரு ஜீவ ஊற்றைப் போல் தெய்வ நாட்டமுள்ளவர்களுக்குக் கிடைத்திருக்கிறது பண் சுமந்த இத் திருமொழி.

'மண் உய்ய, மண்ணுலகில் மனிசர் உய்ய,......அகமகிழும் தொண்டர் வாழ, அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளும் அணிஅரங்கன்' என்று பாடும் குலசேகராழ்வார் அறிதுயிலின் பொருளும் பயனும் இது என்று எவ்வளவு அழகாக, எவ்வளவு தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறார் பாருங்கள்! உலகம் உய்வதும், பாவம் நீங்கிப் புண்ணியம் வளர்வதும், தொண்டர்கள் அக மகிழ்ந்து வாழ்வதும், அரங்கநாதன் அறிதுயில் அமர்ந்திருப்பதன் பொருளும் பயனும் என்பது இந்த ஆழ்வார் திருவுள்ளம்.

இந்த உட்பொருள் மற்ற ஆழ்வார்களின் பாடல்களில் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் காணப்படுகிறது. தொண்டரடிப்பொடியாழ்வார் இந்தத் தத்துவத்தில் ஊறிக்கிடந்த உள்ளத்துடன்,

**குடதிசை முடியை வைத்து,**
**குணதிசைப் பாதம் நீட்டி,**
**வடதிசை பின்பு காட்டி**
**தென்திசை இலங்கை நோக்கி,**
**கடல்நிறக் கடவுள எந்தை**
**அரவணைத் துயிலுமா கண்டு**
**உடல்எனக்(கு) உருகு மாலோ!**
**என்செய்கேன்? உலகத் தீரே!**

என்று பாடிப் பரவசமாகிறார்.

தமது நெஞ்சிலும் அரங்கன் சயனத் திருக்கோலத்தில் தன்னைப் புலப்படுத்தி அருள் புரிந்ததாகத் திருமழிசையாழ்வார் பாடுகிறார். தன்னைச் சார்ந்தவர்களையெல்லாம் பரிசுத்தராக்கிக்கொள்ளும் இந்த அரங்கத்து அம்மானின் தன்மையை நினைத்து நினைத்துத் திருப்பாணர், 'அமலன்' 'விமலன்' 'நிமலன்' 'நின்மலன்' 'நீதிவானவன்' என்ற பெயர்களை இட்டுப் பரவசமாகிப் பாசுரமிடுகிறார். திருமங்கை மன்னனும் 'ஏழை, ஏதலன், கீழ்மகன்' என்று பாராது இரங்கி அருள்புரிவது அறி

துயில் அமர்ந்த பெருமானின் பேரருள் என்கிருர்.

ஆனல் பொய்யை அகற்றி மெய்யாக நினைப்பவர்க்கே தன் சொரூபத்தை உள்ளபடி காட்டுகிருனும் அரங்கன். உயிர்களுக்கெல்லாம் ஓர் உயிராக இருக்கும் மெய்ப்பொருள்தான் பள்ளிகொண்ட பெருமாளின் சொரூபம் என்பதையும் திருமங்கை மன்னன் 'ஆவியை, அரங்கமாலை' என்ற தமது திருவாக்கில் தெளிவுபடுத்துகிருர்.

### வித்து, விளைவு, கனி

முதலாழ்வார்களான மூவர் பாசுரங்களிலும் அறிதுயில் அமர்ந்த தத்துவம் வித்தாகக் காணப்படுகிறது. இந்தத் தத்துவம் கருவிலேயே தாம் வளரத் தானும் உடன் வளர்ந்து வந்ததாக முதலாழ்வாரிலும் முதலாழ்வாரான பொய்கையார் கூறியுள்ளார். இறைவனுக்குத் தொண்டர் உள்ளம்போல் திருவரங்கமும் இருப்பிடம் என்பர் பூதத்தாழ்வார். 'தேனர் திரு அரங்கம்' என்று ஈடுபடுவர் பேயாழ்வார்.

முதலாழ்வார்களின் அந்தாதிகளில் வித்தாகி மற்ற ஆழ்வார்களின் பாசுரங்களில் விளைவாகியிருக்கும் ஸ்ரீ ரங்க தத்துவத்தைக் கனியாகக் காண்கிறோம் நம்மாழ்வாரின் திருவாய் மொழியெங்குமே என்பது பக்தர்களின் கொள்கை. ஆம்; அறிதுயில் அமர்ந்த கருணைமாமுகில் நம்மாழ்வாரைக்கொண்டு அடியார்க்கு இன்பமாரியாகப் பெய்வித்தது தானே திருவாய் மொழி?

---

## திருவரங்கத்தில் சேவார்த்தியின் அரிய காணிக்கை

சென்னை பந்தர் தெரு, 56-ம் கெம்பர் வீட்டிலிருக்கும் திரு. வீரராகவலு செட்டியாரும், அவர் குடும்பமும் திருவரங்கம் அரங்கநாத சுவாமியை 30-11-58-ல் சேவிக்க வந்தபோது நம் பெருமாள் கிரீடத்தில் வைரம் பதித்திருப்பதைக் கண்டு ஆனந்தித்து தமது காதில் அணிந்திருந்த 14 வைரங்கள் கொண்ட கடுக்கன்கள் இரண்டு சுமார் (4 காரட்) மதிப்பு ரூபாய் 3,000 உள்ளதை அக்கணமே கழற்றி உபய நாச்சியார்கள் கிரீடத்தில் அவர் சொந்த செலவில் பதிக்க ஏற்பாடு செய்து கிரீடத்தில் பதிக்கப்பட்டு உபய நாச்சியார்களுக்கு 10-12-58-ல் சாத்தப்பட்டது. அதே சமயம் பெருமாளுக்கும் தன் கைங்கர்யம் பிராப்தமாக வேண்டுமென்ற நோக்கம் அவருக்கு ஏற்பட்டு தன் கையில் அணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றி அதில் உள்ள 9 வைரக் கற்கள் (காரட் $1\frac{1}{4}$) மதிப்பு ரூ 1000 உள்ளதை நம்பெருமாள் கிரீடத்தில் பதிப்பிக்கச் செய்தார். ரூ. 4000 மதிப்புள்ள வைரங்களை அணிகலனுக்காக அளித்த செட்டியாரின் வள்ளன்மை மிகவும் பாராட்டத் தக்கது.



# இராமேசுவரம்

தேவியை வவ்விய தென்னிலங்
கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித்
தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல்செய்
தஇராமேச் சுரம்
மேவிய சிந்தையி னார்கள்தம்
மேல்வினை வீடுமே.

அலைவளர் தண்புனல் வார்சடைமேல்
அடக்கி யொருபாகம்
மலைவளர் காதலி பாடஆடி
மயக்கா வருமாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரியும்
இராமேச் சுரம்மேயார்
தலைவளர் கோலநன் மாலைசூடுந்
தலைவர் செயுஞ்செயலே.

—திருஞான சம்பந்தர்.

கடலிடை மலைகள் தம்மா
லடைத்துமால் கருமம் முற்றித்
திடலிடைச் செய்த கோயிற்
றிருவிரா மேச்சு ரத்தைத்
தொடலிடை வைத்து நாவிற்
சுழல்கின்றேன் தூய்மை யின்றி
உடலிடை நின்றும் பேரா
ஐவராட் டுண்டு நானே.

—திருநாவுக்கரசர்.

இமசேது பரியந்தம், காசி இராமேசுவரம் என்று நம் நாட்டில் தொன்றுதொட்டுப் பேசுவது வழக்கம். புண்ணிய தீர்த்தமான சேதுவையும், மகிமை பெற்ற தலமான இராமேசுவரத்தையும் குறிக்க எழுந்தவையே இப் பழமொழிச் சொற்கள். இராமேசுவரம் பாரத நாடு முழுமையிலும் புகழ்பெற்ற பதி.

இந்தியாவின் எல்லா பாகங்களிலுமிருந்து நாள்தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து வழிபடுகின்றனர். இதற்குத் தேவ நகரம் என்ற பேரும் உண்டு. இத்தலம் இராமநாதபுரம் மாவட்டத்தின் தென்கிழக்குக் கோடியில் உள்ள தீவின் வடபால் அமைந்துள்ளது.

இராமபிரான், இலங்கையில் இராவணன் முதலிய அரக்கர்களைக் கொன்றுவிட்டு சீதா தேவியை மீட்டுக்கொண்டு இந்த தீவிலுள்ள கந்தமாதன பர்வதத்தில் வந்து தங்கினர். அரக்கர்களைக் கொன்ற பாவந்தீர சிவலிங்கப் பிரதிஷ்டை செய்ய எண்ணினர்; அனுமனை அழைத்து கயிலாயம் சென்று சிவலிங்கம் கொண்டுவர ஆணையிட்டார்; மாருதியும் அவ்வாறே சென்றார். அவர் திரும்பிவரக் காலம் தாழ்த்தது. நல்லவேளையில் சிவ லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யவேண்டி சீதாதேவியால் மணலால் பிடிக்கப்பட்ட லிங்கத்தை வைத்துப் பூசை செய்தார். அந்த லிங்கமே இராமேசுவரர், இராமலிங்கர், இராம நாதர் என்றும், அதனாலேயே அவ்வூருக்கு இராமேசுவரம் என்றும் பெயர்கள் வந்தன. அனுமான் கொண்டுவந்த லிங்கம் இராம லிங்கத்திற்கு வடபால் இருக்கிறது. அதற்கு விசுவேசுவரர், காசிலிங்கம் அல்லது அனும லிங்கம் என்று பெயர். அம்பிகையின் பெயர் பர்வதவர்த்தினி அல்லது மலைவளர்காதலி.

இராமேசுவரம், சேது இவ்விரண்டைப் பற்றியும் வடமொழி தமிழ்மொழி நூல்கள் பலவற்றில் சொல்லப்பட்டிருக்கின்றது. ருக் வேதம், தைத்ரீயசம்ஹிதை, வால்மீகி இராமாயணம், அத்யாத்ம இராமாயணம், ஆனந்த இராமாயணம், ஆக்னேய புராணம், பாகவத புராணம், பத்மபுராணம், சிவபுரா ணம், கூர்மபுராணம், ஸ்காந்த புராணம், பிரம்மாண்ட புராணம், மத்ச்யபுராணம், மனு ஸ்மிருதி, காலவஸ்மிருதி, கௌதம ஸ்மிருதி, பராசரஸ்மிருதி முதலிய வடமொழி நூல் களில் குறிப்புகள் காணப்படுகின்றன. தேவாரத்தில் திருஞான சம்பந்தர் இரண்டு பதிகங்களும், திருநாவுக்கரசர் ஒரு பதிகமும் பாடியுள்ளனர். அருணகிரிநாதர், திருப்புகழில் இரண்டு முழுப் பாடல்கள் இத்தலத்தைப் பற்றிப் பாடியிருப்பதுடன் வேறு இரண்டு பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். தாயுமானவர், பர்வதவர்த்தனியம்மைபதிகம் பாடியிருக்கின்றார். நிரம்ப அழகிய தேசிகர், சேதுப்புராணம் என்ற நூலையும் இயற்றியிருக்கிறார். இன்னும் திருவிளையாடற் புராணம் முதலிய நூல்களிலும், தனிப்பாடல்களிலும் இப்பதியைப்பற்றி யுரைக்கப்பட்டிருக்கிறது. 'சிலையண்ணல் செய்தகோயில்' என்று சம்பந்தப் பெருந்தகையும், 'மால் செய்த கோயில்' என அப்பர் பெருமானும் கூறியுள்ளனர். "மறவாளி லங்கை யிறை மகனை உதைத்த பழியால் மருண்டு அரி அன்று அறவாள் நேமி யளித்தவன் அருச் சித்தகன்ற அணிநகர்" என்று திருவிளை யாடற் புராணம் கூறுகிறது. "திண்ணிய பொற் சிலைத்தடக்கை இராமன் செய்த திரு விராமேச்சுரம்" என்றும், "சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த சிவபெருமான்" என்றும் சேக்கிழார், சம்பந்தர் புராணத்தில் கூறியிருக்கிறார். தாயுமானவர் இராமேசுவரத் திற்கு வந்தபோது மழையில்லாமல் மக்கள் தவிப்பதைக் கண்டு,

**"சைவசமயம் சமயமெனில்**
**அச்சமயத்**
**தெய்வம் பிறைசூடும்**
**தெய்வமெனில்—ஐவரைவென்று**
**ஆனந்த வெள்ளத்**
**தழுந்துவதே முத்தியெனில்**
**வானங்காள் பெய்க மழை"**

என்ற பாடலைப் பாட மேகங்கள் மழை பொழிந்ததாக அவர் வரலாறு கூறுகிறது. மேற் கூறியவைகளிலிருந்து இத்தலம் தொன்மையும், பெருமையும், மகிமையும் வாய்ந்த தென்பது புலனாகும்.

இங்குள்ள இராமலிங்கம் பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களுள் ஒன்றென்பர். மற்றவை, ஓங்காரேசர், சோமநாதர், திரியம்பக நாதர், மல்லிகார்ச்சுனர், நாகநாதர், வைத்திய நாதர், காசிவிஸ்வநாதர், பீமேசர், கேதாரேசர், மகாகாளேசுவரர், குஸ்ருணேசர் என்ற லிங்கங்களாகும். இக் கோயிலில், இராமர், இலக்குவர், சீதை, அனுமன், சுக்கிரீவன், அங்கதன், ஜாம்பவான், விபீஷணன், இந்திரன் இந்த பதினொருவரும் நிலை பெறுத்திய லிங்கங்கள் மிகவும் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றது. இராமநாதருக்கு நாள்

தோறும் கங்கையிலிருந்து கொண்டு வரப்பட்ட தண்ணீர் அபிஷேகம் செய்யப்படுகிற தென்பது பெருமை தரக்கூடிய செய்தி. வட இந்தியர் நம்நாட்டில் நான்கு தலங்களை மிகச் சிறந்தவைகளாகக் கருதுகின்றனர். அவை வடக்கே பத்ரிநாதம், கிழக்கே ஜகந்நாதம், மேற்கே துவாரகநாதம், தெற்கே இராமநாதம் என்பன. இந்த நான்கில் ஒன்றே சிவத்தலம்; அதுவும் நம் தமிழ்நாட்டிலுள்ளது.

இக் கோயிலுக்குள் பார்க்க வேண்டிய சந்நிதிகள், இராமலிங்கர், காசிவிசுவலிங்கர், பர்வதவர்த்தினியம்மை (மலைவளர்காதலி), சேதுமாதவர், காலபைரவர், ஆஞ்சநேயர் இவைகளாம். சுவேத (வெள்ளை) மாதவர் என்ற பேர் சேதுமாதவர் என்று வழங்கி வரலாயிற்று. இக் கோயிலிலுள்ள பெரிய நந்தியும் பார்க்கத்தக்கது. வெளிப் பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் இராமலிங்கப் பிரதிஷ்டையைக் காட்டும் உருவச் சிற்பங்கள் மிகவும் அழகு வாய்ந்தவை. இலங்கையரசனை பராக்கிரம பாகு என்பவன் பாண்டிய நாட்டின்மேல் படையெடுத்து வந்தான். அவன் தன் வெற்றிக்கு அறிகுறியாக கி. பி. 1173-ல் இராமேசுவரத்தில் நிச்சங்கேசுவரருக்கு ஒரு ஆலயம் எடுத்ததாக இலங்கையிலுள்ள தம்பாலா என்னும் ஊரிலுள்ள ஒரு கல்வெட்டு கூறுகிறது. இராமநாதர் கோயிலின் கிழக்குக் கோபுரம் 126 அடி உயரமுள்ளது. மேற்குக் கோபுரம் 78 அடி உயரமுள்ளது. இக் கோயிலின் பிரகாரங்கள் உலகப் பிரசித்தி பெற்றவை. அவை 4000 அடி நீளமும், 17 முதல் 21 அடி அகலமும், 30 அடி உயரமும் உள்ளவை. இராமநாதபுர மன்னர்களான சேதுபதிகள் பலர் இக்கோயிலில் பல திருப்பணிகள் செய்துள்ளனர். அவர்களின் உருவச் சிலைகளைக் கோயில் தூண்களில் காணலாம்.

இக் கோயிலுக்குள் 22 தீர்த்தங்கள் உள்ளன. அவையாவன :—மகாலட்சுமி, சாவித்திரி, காயத்திரி, சரசுவதி, மாதவ, கந்தமாதன, கவாட்ச, கவய, நள, நீல, சங்கு, சக்கர, பிரமஹத்தி விமோசன, சூரிய, சந்திர, கங்கா, யமுனா, கயா, சிவ, சாத்யாமிர்த, சர்வ, கோடி தீர்த்தங்கள். இவைகள் திருக்குளங்களாகவும், கிணறுகளாகவும் உள்ளன. அவைகளில் எல்லாம் மக்கள் நீராடுவர். இந்த தீர்த்தங்களேயன்றி, கிழக்குக் கோபுரத்தின் அண்மையிலுள்ள கடலை அக்கினி தீர்த்தம் என்பர். மேற்குக் கோபுர வீதியில் கொஞ்சம் தொலைவில் உள்ள இராமதீர்த்தம், இலட்சுமண தீர்த்தம் என்ற இரண்டு தீர்த்தங்களும் விசேஷமானவை.

இராமேசுவரத்தைச் சுற்றிலும் பார்க்க வேண்டிய சில முக்கியமான இடங்கள் உள்ளன. இராமநாதர் கோயிலுக்கு வடக்கே இரண்டு கல் தூரத்தில் கந்தமாதனபர்வதம் இருக்கிறது. ஒரு மணற் குன்றின்மேல் அழகான கட்டிடம் உள்ளது. அதில் இராமர் பாதங்கள் உள்ளன. அங்கிருந்துதான் அனுமன் கடலைக் கடக்க அளவிட்டார் என்று சொல்லப்படுகிறது.

இராமேசுவரத்திற்கு மேற்கே 3 கல் தூரத்திலும் தங்கச்சி மடம் இரயில் நிலையத்துக்குக் கிழக்கே ஒருகல் தொலைவிலும் ஏகாந்த ராமர் கோயில் இருக்கிறது. இராமர், சீதை, இலட்சுமணர் இவர்கள் நின்று அளிக்கும் காட்சியைக் காணலாம். இதைப்பற்றி ஆனந்த இராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் கோயிலில் அமிருதவாபி என்ற தீர்த்தமிருக்கிறது. இதற்கு அண்மையில் கடற்கரையில் வில்லூரணி என்ற நல்ல தண்ணீர் தீர்த்தம் ஒன்று உண்டு.

இராமேசுவரத்திற்குத் தெற்கே இரண்டு மைல் தூரத்தில் நம்பி நாயகியம்மன் கோயில் இருக்கிறது. தீவின் தென்கரையில் இராமேசுவரத்திலிருந்து 5 கல் தொலைவில் கோதண்டராம சுவாமி கோயில் இருக்கிறது. இராமர், சீதை, இலட்சுமணர் மூவரும் அர்ச்சாவதாரமாய் எழுந்தருளி யிருக்கின்றனர். இங்கு விபீடணரும் இருக்கின்றார். இவ்விடத்தேதான் அவர் இராமரைச் சரண் அடைந்ததாகச் சொல்லப்படுகிறது.

இராமேசுவரத்திலும், அதைச் சுற்றிலும் 64 தீர்த்தங்கள் உள்ளனவாகச் சொல்லப்படுகிறது. அவைகளுள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது சேது அல்லது தனுஷ்கோடி. இங்கிருந்துதான் இராமர் இலங்கைக்கு அணை கட்டியதாகச் சொல்லப்படுகிறது. அவர் வில்லின் நுனி அல்லது கோடியை ஊன்றியதால் தனுஷ்கோடி என்ற பேர் வந்தது. வில்லின் கோடி போன்ற இடத்தில்

இருப்பதால் இந்த தீர்த்தத்திற்குத் தனுஷ் கோடி என்ற பேர் வழங்கலாயிற்று என்றும் கூறுவர். இது மகோததி, இரத்தினகரம் என்ற இரண்டு கடல்களும் சேருமிடத்தில் இருக்கிறது. ஆடி, தை மாத அமாவாசை களில் ஆயிரக்கணக்கான மக்கள் நீராடுவர். அர்த்தோதயம், மஹோதயம் முதலிய புண்ணிய காலங்களில் பஞ்சமூர்த்திகளோடு இராமநாதசுவாமி சேதுக்கரையில் அதிகாலை யில் தீர்த்தம் கொடுப்பர். அதை இலட்சத் துக்கு மேற்பட்ட மக்கள் தெரிசிப்பதுண்டு. "நீடுதனுக் கோடியினை நினைந்தாலும் புகழ்ந் தாலும் நேர்கண்டாலும் வீடுபெற லெளி தாகும்" என்பது சேதுப் புராணம்.

மாசி மாதத்தில் மகா சிவராத்திரியை யொட்டிப் பெருவிழாவும, ஆடித் திருக் கல்யாண உற்சவமும் நடைபெறுகின்றன. ஆனி மாதத்தில் இராமலிங்கப் பிரதிஷ்டைத் திருவிழாவும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது.

காசிக்குச் செல்பவர்கள் கங்கை நீரைக் கொண்டுவந்து இராமேசுவரத்தில் இராம நாதருக்கு அபிஷேகம் செய்வித்து தமது யாத்திரையை முடிப்பார்கள். அப்படி வரும் போது இராமநாதபுரத்திற்கு வடக்கேயுள்ள உப்பூர் விநாயகரை வழிபட்டு, தேவிபட்டினத் தில் நவபாஷாணத்தை வணங்கி, தனுஷ் கோடியில் தீர்த்தமாடி இராமநாதரைத் தெரிசிப்பர். திரும்புகையில் இராமநாதபுரத் திற்குத் தெற்கேயுள்ள ஆதிசேது கடற்கரை யில் நீராடி, திருப்புல்லணை (தர்ப்பசயனம்) பெருமாளைச் சேவித்து இராமநாதபுரத்தில் அரண்மனையில் இராமலிங்க விலாசத்தையும் பார்த்துப் போவது வழக்கம். இராமநாத புரத்தின கீழ்பால் இலட்சுமிபுரத்தில் தாயு மானசுவாமிகளின் சமாதியையும் கண்டு செல்வது நன்று. திரு உத்தரகோச மங்கை யையும் வழிபட்டுப் போகிறவர்களும் உண்டு.

**அணையலை சூழ்கட லன்றடைத்து வழிசெய்தவன்**
**பணை யிலங்கும்முடி பத்திறுத்த பழிபோக்கிய**
**இணையிலி யென்று மிருந்த கோயிராமேச் சரந்**
**துணையிலி தூமலர்ப் பாதமேத்தத் துயர்நீங்குமே.**

*—திருஞான சம்பந்தர்.*

வாக்கினலின் புரைத்து
வாழ்கிலார் தம்மையெல்லாம்
போக்கினற் புடைத்தவர்
களுயிர்தனை யுண்டுமால்தான்
தேக்குநீர் செய்தகோயில்
திருவிரா மேச்சுரத்தை
நோக்கி ஞல்வணங்குவார்க்கு
நோய்வினை நுணுகுமன்றே.

*—திருநாவுக்கரசர்.*

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித்தி களுமுண்டு
கறையுண்ட கண்டர் பாலம்மை நின்ருளிற்
கருத்தொன்று முண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவானந்த வொளியே
நாதாந்தரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூதனன் தங்கையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர் காதலிப்பெணு மையே

*—தாயுமானவர்.*





# ஸ்ரீ வில்லிபுத்தூர்

மின்னூர் தடமதில்சூழ்
வில்லிபுத்தூ ரென்றுஒருகால்
சொன்னார் கழற்கமலம்
சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம்
கீழ்மையினில் சேரும்
வழியறுத் தோம்
நெஞ்சமே வந்து.

—பாண்டிய பட்டர்.

குறித்தொருவர் கொண்டாடும்
கொள்கைத்தோ கோதை
நிறத்தவூர் விண்டுசித்தர்
நீடூர்—பிறப்பிலியூர்
தாழ்வில்லி புத்தூர்என்
றைவர்க்குத் தானிரந்தான்
வாழ்வில்லி புத்தூர் வளம்.

—திவ்விய கவி பிள்ளைப் பெருமாளையங்கார்.

திருமால் அடியார்களான ஆழ்வார்களால் மங்கள சாசனம் செய்யப்பெற்ற திவ்விய தேசங்கள் நூற்றெட்டு. சோழ நாட்டில் நாற்பது, பாண்டிய நாட்டில் பதினெட்டு, கேரள நாட்டில் பதின்மூன்று, நடுநாட்டில் இரண்டு, தொண்டை நாட்டில் இருபத்திரண்டு, வடநாட்டில் பன்னிரண்டு, திருநாடு என்னும் பரமபதம் ஒன்று ஆக திருப்பதிகள் நூற்றெட்டு ஆகின்றன. இதை,

"ஈரிருபதாம் சோழ
மீரொன்பதாம் பாண்டி
ஓர்பதின் மூன்றுமலைநா
டோரிரண்டாம்—சீர்நடுநாடு

ஆரேழடீரெட்டுத் தொண்டை
அவ்வடநாடா றிரண்டு
கூறுதிரு நாடொன்ருகக் கொள்''

என்னும் பாடலால் அறியலாம். செந்தமிழ்ப் பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று ஸ்ரீவில்லிபுத்தூர். இதை சிவில்லிபுத்தூர், செருவில்லிபுத்தூர், திருவில்லிபுத்தூர், புதுவை, தென்புதுவை என்றும் வழங்குவர். இவ்வூர்க் கோயில்களிலுள்ள கல்வெட்டுக்களில், 'திரு வில்லி நாட்டு ஸ்ரீவில்லிபுத்தூர்', 'திருமல்ல நாட்டு ஸ்ரீவில்லிபுத்தூர்', 'திருமல்லி நாட்டு ஸ்ரீவில்லி புத்தூர்' என்று கூறப்பட்டிருக்கிறது. 'நாட் கமழ் பூம்பொழில் வில்லிபுத்தூர்', 'மச்சணி மாடப்புதுவை', 'நீரணிந்த குவளை வாசம் நிகழ நாறும் வில்லிபுத்தூர்', 'விண்தோய் மதிள் வில்லி புத்தூர்', 'பொன் திகழ்மாடப் புதுவை', 'செற்ற மிலாதவர் வாழ்தரு தென்புதுவை' 'வண்டமர் பொழில் புதுவை' 'செந்தமிழ்த் தென்புதுவை', 'வேயர் புகழ் வில்லிபுத்தூர்' என்று பெரியாழ் வார் திருமொழியிலும், 'பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த புதுவை', 'வேதவாய்த் தொழிலார்கள் வாழ்வில்லிபுத்தூர்' என்று நாச்சியார் திருமொழி யிலும் இப்பதியைப் பற்றிப் புகழ்ந்து கூறப்பட் டிருக்கிறது.

ஆழ்வார்கள் பன்னிருவரில் பெரியாழ்வார், ஆண்டாள் என்ற இருவரும் இப்பதியில் திருவ வதாரம் செய்தார்கள் என்ருல் இதன் பெருமை யைச் சொல்லவும் வேண்டுமோ! வில்லி என்னும் வேடன் இவ்வூரைப் புதிதாக ஆக்கியதால் வில்லி புத்தூர் என்ற பேர் வந்ததென்று கூறுவர். அந்த வில்லியின் தாய் மல்லி என்ற பேருடைய வளாகையால் இந்த நாட்டிற்கு மல்லிநாடு என்ற பெயர் வழங்கலாயிற்றென்றும் சொல்வர். ஆண் டாளின் புகழைப் பேசவந்த திருக்கண்ண மங்கை யாண்டான், 'மல்லி நாடாண்ட மடமயில்' என்று பாடுகிருர்.

இந்த திவ்விய தேசத்தை பெரியாழ்வாரும், ஆண்டாளும் கீழ்க்காணும் இரு பாசுரங்களால் மங்கள சாசனம் செய்திருக்கிருர்கள்:—

''மின்னனைய நுண்ணிடையார்
விரிகுழல் மேல்நுழைந்தவண்டு
இன்னிசைக்கும் வில்லிபுத்தூரினி
தமர்ந்தாய் உன்னைக்கண்டார்
என்னநோன்பு நோற்ருள்கொலோ
இவனைப்பெற்ற வயிறுடையாள்
என்னும் வார்த்தை யெய்துவித்த
இருடீகேசா முலையுண்ணயே''

—பெரியாழ்வார் திருமொழி.

''மென்னடையன்னம் பரந்துவிளையாடும்
வில்லிபுத்தூருறை வான்றன்
பொன்னடிகாண்ப தோராசையினுலென்
பொருகயற்கண் ணிணைதுஞ்சா
இன்னடிசிலொடு பாலமுதூட்டியெடுத்த
வென்கோலக் கிளியை
உன்னொடுதோழமை கொள்ளுவன்குயிலே
உலகளந்தான் வரக்கூவாய்''

—நாச்சியார் திருமொழி.

இப்பதியில் ஆண்டாள் கோயிலும், வடபத் திர சயனர் கோயிலும் உள்ளன. வடபத்திர சயனர் கோயிலே மிகப் பழமையானது என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அற்புத சிற்ப வேலைப்பாடமைந்த பெரிய கோபுரம் ஒன்று இக் கோயிலை அழகு செய்கின்றது. வடபத்திர சய னர், வடபத்திர சாயி என்பது பெருமானின் திரு நாமங்கள். 'வடபெருங் கோயில் பள்ளிகொண்ட ருளிய பரமசுவாமி' என்று கல்வெட்டுக்களில் காணப்படுகிறது. பள்ளி கொண்டருளிய திருக் கோலம் பார்க்கப் பரவசமடையச் செய்யும் காட்சி. வில்லி, கண்டன் என்ற இரண்டு வேடு வச் சகோதரர்கள் உருவங்களுமுள்ளன.

ஆண்டாள் திருக்கோயிலில், ஆண்டாள், அரங்கமன்னர் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றனர். கருடாழ்வாரும் பக்கத்தில் எழுந்தருளியிருப்பது இத் தலத்துக்குத் தனிச் சிறப்புடையது. (அட்டைப்படம் காண்க.) ஆண்டாள் சந்நிதியில் அவள் மாலைசூடி அழகு பார்த்ததாகச் சொல்லப்படும் கண்ணுடிக் கிண றும் இருக்கின்றது. பிரகாரச்சுவர்களில் 108 திவ்விய தேசங்களையும் ஓவியங்களாகத் தீட்டப் பெற்றிருக்கின்றன.

இக் கோயிலிலும், வடபெருங் கோயிலிலும் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. பாண் டியர், சோழர், விஜயநகர மன்னர் இவர்கள் காலத்தவை. நாலாயிரப் பிரபந்தப் பகுதிகளை இக் கல்வெட்டுக்களில் கையாளப்பட்டிருப்பது மிகவும் சிறப்பைத் தருவதொரு செய்தி. சூடிக் கொடுத்த நாச்சியார் என்றும், பெரியாழ்வார்

என்றும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. கோயிலில் நித்திய பூசை, நுந்தா விளக்கு, திருவிழா இவைகளுக்காக நிலங்கள் விடப்பட்டதை பெரும்பாலும் இவைகள் கூறுகின்றன. சூடிக் கொடுத்த நாச்சியார் கோயிலின் மகாமண்டபத்தை சுந்தரத் தோளுடைய சார்வ பௌம மகாபலிவாணதிராயர் கட்டியதாக ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது. ஒரு கல் வெட்டில், வேத விருத்தி, மகா பாரத விருத்தி, சோதிட விருத்தி, வைத்திய விருத்தி, முதலியவற்றிற்கு நிலம் விடப் பட்டதைச் சொல்லப் பட்டிருக்கிறது. இன்னும் பல அரிய செய்திகளும் உள.

ஆண்டாள் கோயிலுக்கும் வட பெருங்கோயிலுக்கும் இடையே ஆண்டாள் அவதரித்ததாகச் சொல்லப்படும் திருநந்தவனமும் திருத்துழாய் மாடமும் உள்ளன.

ஆடி மாதத் திருவிழா, மார்கழி நீராட்டு உற்சவம் இங்கே மிகவும் பிரசித்தியானவை. இங்குள்ள தேர் தமிழ் நாட்டிலேயே மிகவும் பெரியதொரு தேர். (படத்தில் காணலாம்.) இத் தேர் ஒரு முறை வலம் வர பல மாதங்களும் ஆய் விடும். இப்பதிக்குத் தீர்த்தம் திருமுக்குளம். சக்கர தீர்த்தம், திருப்பாற்கடல் என்ற தீர்த்தங்களும் உள்ளன.

ஸ்ரீவில்லிபுத்தூரின் தென் பகுதிக்கு மடவார் வளாகம் என்று பெயர். அங்கு ஒரு பெரிய கோபுரமுடைய சிவன் கோயில் உள்ளது. இறைவன் திருநாமம் வைத்தியநாதசுவாமி; தேவியார் சிவகாமியம்மை. தீர்த்தம்—சிவகங்கை. இக் கோயிலில் பெரியதொரு திருக்கல்யாண மண்டபம் இருக்கிறது. இதற்கு நாடக சாலை என்று பெயர். மதுரை திருமலை நாயக்கமன்னர் இவ்விறைவனை வழிபட்டு வயிற்று வலி நீங்கப் பெற்றமையின் இதைக் கட்டியதாகக் கூறப்படுகிறது. இந்த மண்டபத்துள் இரண்டு மனைவியருடன் திருமலை நாயக்கருடைய பெரிய உருவச் சிலையும், முத்து விசயரங்க சொக்கப்ப நாயக்கர் உருவச் சிலையும் சிற்பச் சிறப்புடன் காட்சியளிக்கின்றன.

பாண்டியர் காலத்துக் கல்வெட்டுக்கள் இக் கோயிலிலும் உள்ளன. அவைகளில் இறைவன் பெயர் திருக்கற்றளீசுவரமுடைய நாயனார், படிக்காசு வைத்தருளிய நாயனார் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. கோயிலில் பூசை முதலிய செலவுகளுக்காக நிலங்கள் விடப்பட்டதை இவை கூறுகின்றன.

இத்தலத்தில் பார்க்க வேண்டிய மற்றொரு கோயில் கிருஷ்ணன் கோயில். இக் கோயிலிலும் நாயக்க மன்னர் காலத்திய கல்வெட்டுக்கள் உள்ளன.

ஸ்ரீவில்லிபுத்தூர் செல்பவர்கள் அதற்கு அண்மையிலுள்ள காட்டழகர் கோயில், வேங்கடேசப் பெருமாள் கோயில் இவைகளைப் பார்க்க வேண்டியதவசியம். ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து பத்து மைல் தொலைவில் மலைமேல் அடர்ந்த காட்டில் அழகர் கோயிலிருக்கிறது. அங்கு வற்றாத மலை யருவியிலிருந்து நீர் விழுந்து கொண்டே இருக்கிறது. ஸ்ரீவில்லிபுத்தூருக்கு இரண்டு மைல் தூரத்தில் குன்றின் மேல் வேங்கடேசப் பெருமாள் நின்ற திருக்கோலத்துடன் காட்சியளிக்கிறார். இதைத் திருவண்ணாமலை அல்லது திரு அண்ணன்மலை யென்று அழைக்கின்றனர். இந்த குன்றைச் சுற்றியுள்ள கோனேரி என்ற சுனையின் தோற்றம் மிக்க அழகாக இருக்கும்.



## திருப்புகலூர் சித்த வைத்தியசாலை

தஞ்சை ஜில்லா நன்னிலம் தாலூக்கா திருப்புகலூர் ஸ்ரீ அக்னீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தில் 7—10—58-ல் அறநிலைய பாதுகாப்பு இலாக்கா கமிஷனர் திரு. ஏ. உத்தண்டராம பிள்ளை ஐ.ஏ.எஸ். அவர்கள் தலைமையில் கனம் எம். பக்தவத்ஸலம் அவர்களால் ஆரம்பித்து வைக்கப் பெற்ற சித்த வைத்திய சாலையில் 10—12—58வரை 3615 நோயாளிகள் சிகிச்சை பெற்றுப் பயனடைந்துள்ளார்கள்.

# மாணிக்கவாசகர்

[டாக்டர் மொ. அ. துரை அரங்கசாமி, M.A., M.O.L. Ph. D.
சென்னைப் பல்கலைக்கழகம்]



"மாணிக்கவாசகரே திருவாசகம்; திருவாசகமே மாணிக்கவாசகர்" எனலாம்.

"திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்"—இந்தப் பழமொழி ஒன்றே, திருவாசகத்தின் சிறப்பையும், அதன் உண்மைத் தத்துவத்தையும் உணர்த்துதற்குப் போதுமானது! மாணிக்கவாசகரது சிறப்பிற்கும் இப்பழமொழி சாலும்.

மக்கள் உள்ளம், இயற்கையில் நெகிழ்ச்சியுடையது. குழந்தை உள்ளம் இயற்கை உள்ளம் எனலாம். வயது ஏற ஏற இயற்கை உள்ளம் கல்லாய் விடுகின்றது. கல்லான உள்ளத்தை மீண்டும் கனிவிக்கவல்லது திருவாசகம்.

இயற்கை நெகிழ்ச்சி உள்ளமுடைய குழந்தைக்கு, யான், எனது என்ற பற்று இல்லை; இன்னது நல்ல செயல், இன்னது தீயசெயல் என்ற செயல் வேறுபாடு இல்லை; ஏதாவது ஒரு பொருள் வயப்பட்டு மயங்கி நிற்கும் மயக்கமும் இல்லை, பற்றினை ஆணவம் என்றும், செயலைக் கன்மம் என்றும், மயக்கத்தை மாயை என்றும், அறிவுநூல்கள் கூறும். இந்த மூன்றும், மும்மலங்கள் என்றே கூறப்படும். இந்த மூன்று மலங்களாலும், உயிர்கள் கட்டப்பட்டுள்ளன. குழந்தை

உயிரும் இவற்ருல் கட்டப்பட்டதே. ஆனல், வயது ஏறஏற மலங்களின் ஆற்றல் மிகும்; அதனல், உயிரிடத்து இறுக்கம் மிகுதி யாகும்; உயிரோடு ஒன்றி அதைச் சூழ்ந்திருக் கும் உள்ளத்திலும் இறுக்கம் மிகுதியாகும். அத்தகைய இறுக்கம் மிகுதி, குழந்தைப் பரு வத்தில் இல்லையாதலின், அவற்ருல் கட்டப் பட்டும், குழந்தை உள்ளம் சிறிது நெகிழ்ச்சி யோடேயே இருக்கும்.

நெகிழ்ச்சியுடைய உள்ளம், எல்லா இடங்களிலும் எளிதாகப் பரவி நிற்கும்; எல் லாப் பொருளையும் ஒரே வகையாக நோக்கும்; எல்லாவற்றையும் விருப்பு வெறுப்பு இல்லா மல் கொள்ளும். இவ்வாறு இருத்தலால், குழந்தைப் பருவத்தில், பெரும்பான்மையாக இன்பதுன்ப வேறுபாடு ஏற்படுவதில்லை. சுருங்கக் கூறின், அப்பருவத்தில், அது காணும் காட்சி, மோன உருவெளிக்காட்சி, தெய்வக் காட்சி. வயது ஏறஏற இந்தத் தெய் வக் காட்சி மறைந்து போகிறது.

உயிர்கள், இன்பத்தை விரும்பும்; துன் பத்தை வெறுக்கும். இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும். முன்னே துன்பம் உண்டா ஞல், பின்னே இன்பம் உண்டாகும். கூர்ந்து நோக்கினல், துன்பம் காரணமாகவும், இன் பம் அதன் காரியமாகவும் காணப்படும். காரி யம் காரணத்தை விட்டு, வேருவதில்லை. எனவே, காரியமான இன்பமும், அதன் காரணமான துன்பத்தை விட்டு வேருவ தில்லை. இவ்வாருகும்போது, இன்பம் துன் பமேயாய் முடிகின்றது. இந்த வகையாக எல் லாப் பொருள்களையும் துன்பமயமாகவே பெரும்பான்மையோர் கொண்டு, திகைப்புற் றுக் கலங்குகின்றனர். இந்த திகைப்பு நிலை தான் உள்ளம் கல்லாய்ப் போன நிலை. இந் தத் திகைப்பு ஒழிய வேண்டுமானல், கல் லுள்ளம் கசிந்துருக வேண்டும். அந்த உருக் கத்தை உண்டாக்குவது திருவாசகம். எனவே, திருவாசகத்தை ஓதினல், உள்ளம் உருகும்; திகைப்பு ஒழியும்; எல்லாம் இன்ப மயம் என்னும் காட்சியுண்டாகும்; பேரின் பப் பேறு கிடைக்கும்.

துன்பம் காரணமாகவும், இன்பம் அதன் காரியமாகவும் கொள்ளலாம். அப்படிக் கொள்ளுவார், உள்ள நெகிழ்ச்சி யுடையவரே. அவர்க்குத் துன்பமும், இன்பமேயாகத்



மாணிக்கவாசகர்

தோன்றும்; எல்லாம் இன்ப மயமாகத் தோன்றும். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்ற திருக்குறட் பகுதி, துன்பமும் இன் பமேயாகக் கொண்டு நிற்க வேண்டும் என்ப தையே உணர்த்துகின்றது. எல்லாம் இன்ப மயம் என்னும் உணர்வை உண்டாக்கவல்லது திருவாசகம். திருவாசகத்தேன் என்று அது சிறப்பிக்கப்படுவது இக்கருத்தே பற்றியாகும்.

வள்ளல் இராமலிங்க அடிகள் திருவாச கப் பழமொழியின் உண்மையை ஆராய்ந்து தெளிந்தவர். அவர், மரங்கள் அடர்ந்த சோலைக்குள் செல்வார். அங்கே, மரக்கிளை களுக்கிடையில், பலவகைப்பட்ட பறவைகள், இங்குமங்கும் பறந்து கூவிக்கொண்டிருக்கும். அவற்றைப் பார்த்து, "இழிந்த பிறப்புடை யன ஆன இவை, இவ்வாறு வீண் பொழுது போக்குகின்றனவே!" என்று அவர் எண்ணு வார்; பொழுதை நல்வழியிற் பயன்படுத்தும் தம் உயர்பிறப்பை எண்ணி மகிழ்வார்; இறை வனை நினைந்தபடி இசையுடன் திருவாசகப்

பாடலைப் பாடுவார். திருவாசகப் பாடல் காதில் பட்டவுடன், பறவைகள் ஒலியடங்கி, அமைதிகொண்டு, அதை விருப்பமுடன் கேட்கும்.

ஓரொருகால், அடிகள், காட்டிற்குச் செல்வார்; திருவாசகப் பாடல்களைப் பாடு வார். சீறி வரும் பொல்லா விலங்குகள், அப் பாடலைக் கேட்டவுடன், தம்மை மறந்து, மெய்ஞ்ஞானிகள்போல் அசையாமல் நின்று விடும்.

திருவாசகப் பாடலைக் கேட்டவுடன், கீழ்ப்பறவை சாதிகளும், பொல்லா விலங்கு களும் நெஞ்சுருகும் என்றால், மக்கள் நெஞ்சு உருகுதலில் வியப்பு ஒன்றுமே இல்லை. இவ்வாறு, திருவாசகப் பாடலைப் பாடிப்பாடி அனுபவித்த வள்ளலார், தம் அனுபவத்தை அழகான ஒரு பாட்டால் விளக்கியுள்ளார்.

"வாட்டமிலா மாணிக்கவாசகநின்
வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த
கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும்; பொல்லா
விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னிலங்கு
நானடைதல் வியப்பன்றே"

இராமலிங்க அடிகளுக்கு, அவர் தம் வாழ்க்கையின் மேல் வரிச் சட்டமாகவே திரு வாசகம் அமைந்தது எனலாம். அவர், திரு வாசகப் பாடலுள் ஒன்றைப் பாடுவதற்குத் தொடங்குமுன், அதன் ஒவ்வொரு சொல்லை யும் நன்கு சுவைத்துப் பார்ப்பார்; அப்பாட லைப் பாடுங்கால், அதன் ஆசிரியர் எந்த நிலை யில் நின்றிருப்பார் என்று எண்ணிப் பார்ப் பார்; எவ்வாறு பாடியிருப்பார் என்று எண் ணிப் பார்ப்பார்; அவர் முன்னால் பாடத் தாம் பின்னால் பாடுவதாகச் சிறிது நேரம் பாடு வார்; அதன் பின்பு, அவரோடு கலந்து பாடு வார்; ஒலியிலும், நிலையிலும், உணர்ச்சியிலும் கலந்து விடுவார். அப்போது அவருக்கு உண்டாகும் இன்ப அனுபவத்தை அவ ரையே கேட்டுப் பார்க்க வேண்டும்.

"வான்கலந்த மாணிக்க
வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால்,
நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து, பால்கலந்து,
செழுங்கனித் தீஞ்சுவைகலந்து
ஊன்கலந்து உயிர்கலந்து,
உவட்டாமல் இனிப்பதுவே."

என்பது வள்ளலார் அனுபவ வாக்கு.

ஊனும் உயிரும் கலந்து உவட்டாமல் இனிக்கத்தான் செய்யவல்லது திருவாசகத் தேன் என்று கருதி விடல் ஆகாது. அநாதி யாகப் பிறப்போடு தொடர்ந்து வரும் ஆண வத்தளையை அது நீக்கும், வினைத் துன்பங் களை வேர் அறுக்கும்; மயக்கத்தைப் போக்கி மகிழ்ச்சியை ஆக்கும். வீட்டின்ப வாழ்வை அடைவிக்கும் தனிப்பெருந் துணையாவது திருவாசகம். இந்த உண்மையை,

"தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லல் அறுத் தாநந்தம் ஆக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகம்என்னும் தேன்"

என்ற திருவாசகப் பாயிரம் நன்கு உணர்த்து கின்றது.

"ஆநந்தத்
தேன்தேக் கெறியும் செய்ய மாணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்..."
ஓதின்முத்தி உறுபயன்;
வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே,"

என்றும்,

"வாதவூர் அன்ப,
பாவெனப் படுவதுன் பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே."

என்றும்,

சிவப்பிரகாச அடிகள் கூறியிருப்பன வற்றைக் கூர்ந்து நோக்கினால், "திருவாசகம் ஓதுவது ஒன்றே, முத்தி தரவல்லது, அது வேதத்தைவிட மேலானது; ஏனையோர் பாடல்கள் எல்லாவற்றினும் சிறந்தது", என்ற உண்மைகள் நன்கு விளங்கும். மேலும் அவர்,

"தானே முத்தி தருகுவன் சிவனவன்
அடியன் வாத வூரனைக்
கடிவில் மனத்தால் கட்டவல் லார்க்கே,"

என்பதால்,

திருவாசகம் அருளிச்செய்த வாதவூரடி களை, மனத்தால் இடைவிடாமல் நினைப்புவர்க்

குச் சிவபெருமான் தானே வலிந்து வந்து முத்திதருவன் என்று கூறியுள்ளார்.

இத்தகைய சிறப்புக்களெல்லாம் பெற்ற திருவாசகத்தை அருளிய சிறப்புடையவர் இயற்பெயர் யாதோ, அதை நாம் அறியக் கூடவில்லை. பாண்டிவள நாட்டிலே, வாத ஆரில் தோன்றி, இளமை முதற்கொண்டே அறிவு ஒழுக்கங்களால் சிறந்து விளங்கின இவரை, **வாதவூரர்** என்றே யாவரும் மதிப் போடு வழங்கி வந்தனர். திருவாசக ஆசிரி யரை, வாதவூரர் என்றே அவர் வரலாறு கூறும் புராணங்கள் எல்லாம் குறிக்கின்றன.

கூர்ந்து நோக்கினல், திருவாசகம் முழு தும் வாதவூரருடைய வாழ்க்கை வரலாற்றை உணர்த்தும் நூலாகவே காணப்படும். அவர் வாழ்க்கை, தத்துவக் கூறுபாடுகள் அமைந்த சீரிய வாழ்க்கையாகும். அவர் வரலாற்றை அறிவதே திருவாசகத்தின் தத்துவத்தை அறிவதாகத் திகழும்.

வாதவூர் அடிகளைப்பற்றிய வரலாறு, வடமொழியில் ஆலாசிய மான்மியம், ஆதி கைலாச மான்மியம், மாணிக்கவர்சக புரா ணம், என்ற நூல்களாலும், தமிழ் மொழியில் கடம்பவன புராணம், திருவாலவர்யுடையார் திருவிளையாடற் புராணம், திருப்பெருந் துறைப் புராணம், உத்தரகோச மங்கைப் புராணம், திருவாதவூரடிகள் புராணம் என்ற நூல்களாலும் உணர்த்தப்பட்டுள்ளது. இவற்றுள், ஒன்றற்கொன்று மாறுபட்ட சில கருத்துக்கள் உள்ளன. அவற்றை நீக்கி நோக்கினல், "அடிகள் வாதவூரில் தோன்றி ஞர்; வாதவூரர் என்று அழைக்கப்பெற்ருர்; இளமையிலேயே அறிவு ஒழுக்கங்களில் சிறந்து விளங்கினர்; பலவகை நூல்களையும் ஐயம் திரிபு அறப்பயின்று பெரும்புலமை உற் ருர். அவருடைய கல்வி கேள்வி அறிவு ஒழுக்கங்களைப்பற்றிக் கேள்விப்பட்ட பாண்டி மன்னன், அவரை அழைத்துத் தன் முத லமைச்சனக அமர்த்திக்கொண்டான். அமைச் சுத் தொழிலை, அவர், யாவரும் வியக்கு மாறு நன்கு ஆற்றினர். ஒரு நாள், அரசன், அவரைக் குதிரைகள் வாங்கிவருமாறு பெரும் பொருள் தந்து ஏவினன். திருப்பெருந் துறையில் ஞானாசிரியரைக் கண்டு, அவரால், அடிகள், மெய்ப் பொருளுணர்வு பெற்ருர்; ஆசிரியரைச் சிறப்பித்துப் பாடினர். ஆசிரி யர் அவருக்கு மாணிக்கவாசகர் என்ற பெயர் சூட்டினர்; அவர் ஏவல்படி, குதிரை வாங்கக் கொண்டுவந்த பொருளை, ஆலயப் பணிக்கும், அடியார் கூட்டத்திற்கும் அடிகள் உரிமை யாக்கினர். பாண்டியன், அவரை வருவித் துச் சிறைப்படுத்தினன். அவர், திருவரு ளின் துணைக்கொண்டு குறித்த அதேநாளில் குதிரை வரவே, அவன் அவரைச் சிறையி லிருந்து நீக்கினன். அன்றிரவே குதிரைகள், நரிகளாயின. அது கண்ட பாண்டியன், அவரை, வெயிலில், வையை ஆற்று மணலில் நிறுத்தி ஒறுப்பித்தான். திருவருளால், வையையில், எதிர்பாராதபடி வெள்ளம் பெருகி வந்தது. இறைவனே கூலியாளாக வந்து வையைக் கரையைக் கட்டி, மணிவாசக ருடைய உண்மைச் சிறப்புக்களைப் பாண்டி யன் அறியுமாறு உணர்த்தினன். பாண்டி யன் அடிகளிடம் மன்னிப்பு வேண்டினன். அதன் பின், பாண்டியனிடம் விடைபெற்றுத் திருப்பெருந்துறையை அடைந்து, அங்கே சிலநாள் தங்கியிருந்து, பின்பு தில்லைக்குச் சென்று, அங்கே, அடிகள் பலநாள் தங்கினர். அங்கே அவர் பாடிய பாடல்கள் அம்பல வாணராலேயே எழுதப்பெற்றன. இறுதியில், உலகம் வாழத் திருவாசகத்தை வாழவைத்து விட்டு, அடிகள் தில்லையம்பலவாணனோடு இரண்டறக் கலந்தார்," என்ற அடிகள் வர லாறு, அவை எல்லாவற்றிலும் ஒரே வகை யாகவே விளங்கும். திருவாசகப் பூங்காவி லிருந்து பறித்த மலர்களோடு, வேறு சில மலர்கள் கொண்டு தொடுக்கப்பட்ட மாலை களே அப்புராணங்கள் எல்லாம்.

மக்கட் பிறப்பு எடுத்தவர்களுள் பெரும் பான்மையோர் அரைகுறை வாழ்க்கையே வாழ்ந்து, மறுபடியும் மறுபடியும் பிறந்தும் இறந்தும் அல்லல் உறுகின்றனர். முழு வாழ்க்கையே முத்தி இன்பம் தரவல்லது; இனிப் பிறவா நிலை அளிக்கவல்லது.

மணிவாசகர் முழு வாழ்க்கை வாழ்ந்த வர்; இறைவனோடு இரண்டறக் கலந்து இனிப்பிறவா நிலை எய்தினவர்; சமய நூல் கள் கூறும் தத்துவப் படிகளில், கீழிருந்து மேலே ஒழுங்காக ஏறிச் சென்றவர். தளரா மல் உழைத்தவர்; அச்சம் உற்றபோதெல் லாம், அழுதழுது, அவனருளைப் பெற்று அச் சம் அகன்றவர். முழு வாழ்க்கை வாழ்ந்து

பிறவிப் பயன் பெற விரும்புவார், அவர் சென்ற வழியே செல்லுவதற்கு, உறுதியும் உழைப்பும், இறைவன்பால் அன்பும், மேற் கொள்ளவேண்டும். அவற்றை மேற்கொண் டால், அவனருளாலே, அவனைக் கண்டு அவ னோடு இரண்டறக் கலந்து, என்றும் இன்ப மாக இருக்கலாம். அடிகள் சென்ற வழியைத் திருவாசகத்தால் அறிந்து, அவ்வழியே நாம் செல்லுதல் வேண்டும்; சென்றால் நாமும முத்தியின்பம் தடையின்றிப் பெறுவோம்.

மணிவாசகர், இவ்வுலகில் வந்து தோன் றுவதற்கு முன்பு, கயிலையில் கணநாதர் ஒரு வராய்த் திகழ்ந்திருந்தார் என்று திருவால வாயுடையார் திருவிளையாடற்புராணம் கூறு கின்றது. "குடமுழ நந்தீசனை வாசகனாய்க் கொண்டாய்" என்ற அப்பர் வாக்கும், "நீக்கி முன் எனைத் தன்னொடு நிலாவகைக் குரம்பை யில் புகப்பெய்து," என்ற மணிவாசகர் வாக் கும், புராணம் கூறும் உண்மையை வலியுறுத் தும் சான்றுகளாம் என்று அறிவுடையோர் எடுத்துக்காட்டுவர். இப்பகுதியை நோக்கிய வுடன், "கயிலையில் கணநாதராய்த் திகழ்ந் தவர், முழு வாழ்க்கை வாழ்ந்து, மீண்டும் கயிலையை அடைய முடியும்; நம்மால் அது முடியாது," என்று யாவரும் முடிவு செய்து விடுவர்.

இறைவன் என்று உண்டோ, அன்றே உயிர்கள் உண்டு என்பதும், அன்று முதற் கொண்டே அவன் ஆண்டான், உயிர்கள் அடிமை என்பதும், அவனுடைய திருவரு ளைத் துணையாகக்கொண்டு, அவனிடம் அன்பு பூண்டு ஒழுகினால், அவனோடு இரண் டறக் கலந்து பேரின்பம் எய்தலாம் என்பதும் சைவ சமயக் கொள்கைகளாம் உண்மைகள். "என்று நீ அன்று நான் உன் அடிமை அல் லவோ?" என்பது தாயுமானவர் அருள் வாக்கு, எனவே, மாணிக்கவாசகர் மட்டும் அல்லர். உயிர்கள் யாவும் கயிலையில் அவனுட னிருந்து, பின்பு, அவனை விட்டு உலகில் வந் தனவேயாகும்; வந்த உயிர்கள் எல்லாம் அவனை மீண்டும் அடைதற்கு உரியனவே யாகும். ஆனால், மணிவாசகர் சென்ற வழியே சென்றால்தான், உயிர்கள் இறைவனை மீண் டும் அடைய முடியும்.

வித்து, நலமுடையதாயின், அஃது உவர் நிலத்திலும் முளைக்கும்; ஆனால், சில நாட்களுக்குள் முளை கருகிவிடும். நிலம் சிறந்ததாயின், முளைத்த முளை, மரமாய்த் தழைத்தோங்கி வளர்ந்து, தானும் பய னுற்று, மற்றவர்க்கும் பயன்தரும். இவ் வாறு நில நலம் அமைவது அருமை! இறை வழிபாடு ஆற்றும் பெற்றோர், பிள்ளைகளா கிய வித்துக்கள் முளைத்துத் தழைப்பதற் குரிய சிறந்த வள நிலம் ஆவர். "விளையும் பயிர் முளையிலேயே தெரியும்," என்பது பழ மொழி. மணிவாசகர், இப்பழமொழிக்குச் சிறந்த இலக்கியமாய் விளங்கினார். அஃது அவருடைய அருள் வாக்காலேயே அறியப் படுகின்றது.

"உருத்தெரியாக் காலத்தே
உள்புகுந்தென் உளமன்னிக்
கருத்திருத்தி ஊன்புக்குக்
கருணையினால் ஆண்டுகொண்ட
திருத்துருத்தி மேயான்,"

என்று அடிகள் பாடியுள்ளார். உருத்தெரியாக் காலம் குழந்தைப்பருவம் குழந்தைப் பருவத் தில், அடிகள், தந்தையார் தோளில் இருந்து கொண்டு, திருத்துருத்தி இறைவனை நோக் கினர். அப்போது, அங்கிருந்த சிலை வடிவத்தி லிருந்து, ஒளிவடிவமாக, இறைவன் எழுந்து, அவருக்குக் காட்சியளித்தான்; அளித்தவன், அவருடைய உள்ளத்துள் புகுந்தான்; அவ் வுள்ளத்துள் நிலை பெற்றான்; தன்னை மறவாத படி, அவர் கருத்தில் தன் வடிவத்தை இருத்தி னான். இவ்வாறு ஊனால் ஆகிய உடலுக்குள் புகுந்து, தன் கருணையினால், அவன், தம்மைக் குழந்தைப் பருவத்திலேயே ஆண்டுகொண் டான் என்பதை அடிகள் தெளிவாக இங்கே குறித்துள்ளார். இராமலிங்க அடிகளுக்கும், குழந்தைப் பருவத்தில், தில்லையில் இவ்வகை அருட்காட்சி ஏற்பட்டது என்பது அவர் வர லாற்றால் தெரிகின்றது. எதிரே தோன்றும் சிலை வடிவத்தில், இறைவனுடைய உண்மை ஒளிவடிவம் கொண்டு தொழுதலே ஆலய வழிபாட்டின் பெறலரும் பயனாகும். குழந் தைப் பருவத்தில் நம் அடிகளார்க்கும் வள்ள லார்க்கும் கிடைத்த இக்காட்சி, வயதேறிய வர்க்கும், அச்சிலை வடிவத்தை நெடுநேரம் உற்று நோக்கி அன்புகொண்டு கசிந்துருகி வழிபாடு ஆற்றினால், தடையில்லாமல் கிடைக்கும். கிடைத்த அக்காட்சியில்,

கருத்து நிலைபெற்றுவிட்டால், அஃது அருட் சத்தியின் பதிவு பெற்று விட்டதாகும்.

அருட்சத்தி பதியப்பெறுதல் என்பது, பெறுதற்கரிய பேறுகளுள் பெரும்பேறு ஆகும். இம்மையிலும் மறுமையிலும் நுகரப் படும் இன்பதுன்பங்களைப் பொருட்படுத்தா மல், வினையால் வரும் இன்ப துன்பங்களை ஒரு நிகராகக்கொண்டு அவற்றை உவர்க்கும் உள்ள நிலை ஒருவர்க்கு வருதல் வேண்டும். சிறிதளவு விழிப்பும் உழைப்பும் இருந்தால், இந்த உள்ள நிலை வந்துவிடும்: இதுவே இரு வினை யொப்பு எனப்படும். இது வந்ததும், அறியாமையாகிய ஆணவமலம் நழுவும் தகுதி யடையும்: இதுவே மலபரிபாகம் எனப்படும். இந்த இரண்டும் ஏற்பட்டால் உயிரின் அறி வின்கண், திருவருள்பதியும்: இதுவே சத்தி நிபாதம் எனப்படும். இந்தச் சத்தி நிபாதம் நான்கு வகைப்படும். இறைவன் திருவருளை நாடி, உலகப்பயன் கருதாது, வீடு பேற்றை அவாவி நிற்றல் ஒருவகை. இறைவனை அடையும் வழி யாதென்று ஆராய்ந்து மேற் செல்லுதல் ஒருவகை. அகத்தால் முழுதும் உலகைத் துறந்து, திருவருள் வழி நின்று, உலக வாழ்க்கையை நடத்தல் மூன்றும் வகை. அகத்தும் புறத்தும் துறவு நிலையுற்று ஞானா சாரியன் ஒருவனையே தேடி நிற்பது நான்காம் வகை. மணிவாசகர் நான்காம் வகைச் சத்தி நிபாதம் எய்தி நின்றவர்.

அருட்சத்தி பதியப்பெற்றோர்க்கு, வினை வயத்தால், ஐம்பொறிகளும், தத்தமக்கு உரிய புலன்கள் மேற்செல்லின், அது மிகுந்த இடையூறாகத் தோன்றும். அக்காலத்தில், அவர் தம்மை மிகவும் பழித்துரைப்பர் என் பர்; அதுபற்றி அவரை ஆசை வயப்பட்டவர் என்று குறை கூறுவது பொருந்தாது என்பர்.

"வேனில்வேள் மலர்க்கணைக்கும்
வெண்ணகைச் செவ்வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும்
பதைத்துருகும் பாழ்நெஞ்சே,"

என்பது போன்ற வாக்குக்களெல்லாம், 'உரன் என்னும் தோட்டியால் ஓரைந்தும் காக்க' அடிகள் செய்த முயற்சியையே காட்டு வன. பழித்துரைத்தல், தமக்கு வினை வயத் தால் ஏற்பட்ட ஆசையெழுச்சியை மட்டும் காட்டுவதன்று; அதை வெல்லுவதற்குத் தாம் கொள்ளும் பெரு முயற்சியையும் காட்டு வதாகும்.

அடிகள், தம் இளமைப் பருவம் முதற் கொண்டே உலக நிலையாமையை நன் குணர்ந்து, வீடு பேற்றிற்கு உரிய சிவஞானம் நல்கும் அருட்குரவனை இடைவிடாமல் நாடி நின்று உழன்றவர்.

உலகப் பொருள்களைக் கூர்ந்து நோக் கும் இயல்பு, அடிகளிடம் இளமை முதற் கொண்டே படிந்திருந்தது. எறும்புகளிடை யில் நாங்கூழ் (நாக்குப் பூச்சி) அகப்பட்டுத் துடிதுடித்தலைக் காணும்போது, அடிகள் மனம் துடிதுடிக்கும். பெருநீர் அறச்சிறு மீன் துவளுதல் கண்டு, அடிகளும் துவளு வார். கொம்பில்லாமல் கொடிகள் அலமரல் (சுழலல்) கண்டு, அவரும் அலமருவார். பலாப் பழத்தில் ஈக்கள் மொய்த்து அதில் உள்ள பசையில் அகப்பட்டுத் தவிப்பது கண்டு, அவ ரும் தவிப்பார். முள் நிறைந்த பெருங்காட்டில் தீப்புகுந்து அதைச் சாம்பராக்குவது கண்டு, அவர் வியப்பும் திகைப்பும் ஒருங்கே எய்து வார். ஆற்றங்கரை மரம் தழைத்துச் செருக்கி நிற்றல் கண்டு, "அந்தோ ஆற்றில் பெரு வெள்ளம் வந்தால், இதன் கதி யாதாம்?" என்று அதனிடம் அவர் பேரிரக்கம் காட்டு வார்.

இளமையிலேயே, இரக்கமே வடிவமாகத் திகழ்ந்த அடிகள், தமக்கு வயதேறின காலத் தில், புலன்கள் தம்மை அரித்தலுக்கும், நாங் கூழை அரித்தலுக்கும் ஒப்புமை கண்டு, உள்ளம் உருகினார். அப்போதுதான் எறும் பிடை நாங்கூழ் எய்திய துன்பத்தின் முழு வேகம் அவருக்கு நன்கு புலனாயிற்று என லாம். எறும்புகளிடமிருந்து நாங்கூழ் விடு தலை பெறுதற்குத் தன்னால் ஆனமட்டும் முயன்றும் அதனால் விடுதலை பெறமாட்டாது போனதைக் கண்ட அடிகள், தாமும் தம் மால் ஆனவரைமுயன்றும், புலன்களிலிருந்து விடுதலை பெறமாட்டாமைக் கண்டு திகைப் புற்றார். ஆனால், அருட்பதிவால், திகைப்பி னிடையே சிறிது தெளிவும் ஏற்பட்டது. "உயிர், தன் முயற்சியால் மட்டும், ஒன்றைச் சாதித்து விடல் முடியாது; திருவருளின் துணையும் கூடினவிடத்தில்தான், முயற்சிக் கேற்ற பயன் கிடைக்கும்," என்பதை அவர்

தெளிய உணர்ந்தார். எனவே, இறைவனையே தஞ்சமெனக்கொண்டு, அவர்,

**" எறும்பிடை நாங்கூழ்**
**எனப்புலனுல் அரிப் புண்டலந்த**
**வெறுந்தமி யேனை விடுதிகண் டாய்,"**

என்று அழுது வேண்டினர்.

இவ்வாறே, அவர், தாம் இளமையில் பிறபொருள்களில் கண்ட வேதனைக் காட்சிகளையெல்லாம் உவமைகளாக அமைத்து, மங்கையராலும், புலன்களாலும், பிறவற்றாலும் தாம் அடைந்த துன்பங்களை உணர்த்தி, அத்துன்பங்களிலிருந்து தம்மை விடுவிக்குமாறு இறைவனை வேண்டுதலைச் சிறப்பாக நீத்தல் விண்ணப்பத்திலுள்ள ஐம்பது பாடல்களும், பொதுவாகப் பிறபாடல்களும் உணர்த்துகின்றன.

பாண்டியனிடம் அமைச்சராக இருந்த போதும், அடிகள் உள்ளம், நிலையாமையை நன்குணர்ந்து, வீடுபேற்றிற்கு உரிய சிவஞானம் நல்கும் அருட்குரவனையே நாடி நின்றது. அமைச்சர் கடமையை அவர் எள்ளளவும் தவறுமல் செய்துவந்தார். போர் நிகழின், அவர் போர்க்களங்களுக்குச் செல்வார்; யானைப்போர் காண்பார்; குறுந்தூறுகள், ஒன்றோடொன்று போரிடும் யானைகளின் கால்களிடையே பஞ்சாய்ப் பறப்பதை உற்றுநோக்குவார்; தாம், புலன்களாகிய யானைகளால் அலைப்புண்ணுதலை உள் நோக்குவார். உடனே அவருள்ளம் இறைவனை நாடி நிற்கும்.

**" ஆனைவெம் போரில் குறுந்தூ**
**றெனப்புல னுல் அலைப்புண்**
**டேனைஎந் தாய்விட் டிடுதி கண்டாய்"**

எனத் தம் குறையை இறைவனிடம் எடுத்துக் கூறித் தம்மைக் கைவிட்டுவிடாமல் ஆட்கொண்டருள வேண்டுமென்று அவர் இரப்பார்.

ஞானாசிரியன் என்று கிடைப்பானே, எங்கே கிடைப்பானே என்று அவர் பலப்பல இடங்களில் தேடி அலைந்தார்.

**" நிருத்தனே நிமிலா நீற்றனே நெற்றிக்**
**கண்ணனே விண்ணுளோர் பிரானே**
**ஒருத்தனே உன்னை ஓலமிட் டலறி**
**உலகெலாம் தேடியும் காணேன்"**

என்று வரும் திருவாசகப் பகுதி, அவர் இறைவனுகிய ஞானாசிரியனைத் தேடியலைந்தமையைக் குறிக்கும். இப்பகுதி, படிப்போர் உள்ளத்தையே உருக்குவதென்றால், அவருள்ளம் எவ்வளவு உருகியிருக்கும் என்பது கூறாமலே விளங்கும். அடிகள் சென்ற வழியே செல்ல விரும்புகிறவர், அவர்பால் உருகி உருகி இறைவனிடம் முறையிடவேண்டும்.

" வேண்டத் தக்க தறிவோன்; வேண்ட முழுதும் தருவோன் " முழு முதலாகிய இறைவனே ஆவன். **முறையிட்டைக் கேட்ட இறைவன் அவருக்கு ஞாநாசிரியனுக வந்து சிவஞாநம் நல்க உளங்கொண்டான்.**

ஆணவமலம் நழுவும் தகுதியடைந்தது; திருவருள் நன்கு பதிந்தது. பாண்டியன் ஏவல் பெற்றுக் குதிரை வாங்கி வரச் சென்ற மணிவாசகர் திருப்பெருந்துறையில் அருட்குரவனைக் கண்டார்.

முழுமுதற் கடவுளின் இயல்பை, அக்கடவுளே, வீடு அடையும் தகுதியுடையார்க்கு அறிவுறுத்தியருளினல்தான் சிற்றுயிர்கள் அதை அறிதல் கூடும் என்பது சித்தாந்த நூல்களின் துணிவு. சிற்றுயிர்கள் மூவகைப்படும். மலங்களின் தொடர்பால் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்கள் உயிர்களைத் தளைத்து நிற்பன. இவற்றுள், ஆணவமலத்தால் மட்டும் கட்டுண்ட உயிர்களை அவற்றின உள்நின்று உண்மை உணர்த்தி ஆட்கொண்டருளுவன். ஆணவம் கன்மம் இரண்டாலும் கட்டுண்ட உயிர்களைத் தன் தெய்வத் திருமேனியுடன் வந்து ஆண்டருளுவன்; ஆணவம் கன்மம் மாயை மூன்றாலும் கட்டுண்ட உயிர்களுக்கு, மனிதப் போர்வையோடு வந்து மெய்யறிவு நல்கினன் என்பதைத் திருவாசகம் பல இடங்களில் உணர்த்துகின்றது.

**" தேவநும் அறியாச் சிவனே காண்க**
**பெண்ஆண் அலிஎனும் பெற்றியன் காண்க!**
**கண்ணல் யானும் கண்டேன் காண்க!**
**அருள்நனி சுரக்கும் அமுதே காண்க!**
**கருணையின் பெருமை கண்டேன் காண்க!**
**புவனியில் சேவடி தீண்டினன் காண்க!**

சிவன்என யானும் தேறினன் காண்க !
அவள்எனை ஆட்கொண் டருளினன் காண்க !
குவளைக் கண்ணி கூறன் காண்க !
அவளும் தானும் உடனே காண்க !

என்றும்,

" நானும்என் சிந்தையும்
நாயகனுக் கெவ்விடத்தோம்
தானும்தன் தையலும்
தாழ்சடையோன் ஆண்டிலனேல்''

என்றும் வரும் திருவாசகப் பகுதிகள், இறைவன் மாதொருபாகனாக வந்து அடிகளை ஆட்கொண்டருளின உண்மையைப் புலப்படுத்துவன.

அருட்குரவன் ஐந்தெழுத்து அருள்நிலை உணர்த்திச் சென்னிமேல் திருவடி சூட்டிப் பாச நீக்கமும் சிவப்பேறும் உடன் நல்க, அடிகள் சென்னிப் பத்துப் பாடினர். மாணிக்கவாசகர் என்ற பெயர் அருட்குரவனால் அப்போது அளிக்கப் பெற்றது. அருட்குரவன் ஏவல்படி குதிரை வாங்கக் கொண்டுவந்த பொருளை யெல்லாம் ஆலயப்பணிக்கும் அடியார்க்கும் அடிகள் உரிமையாக்கினர். அதனோடு அடிகள் பிறவித்தளை நீங்கி இறைவனோடு இரண்டறக் கலந்து விட்டிருக்கலாம். ஆனால் சோதனைகளுக்கெல்லாம் தளராமல் தன்னிடம், அன்பு பூண்டு ஒழுகுகின்றார்களா என்று, பொறுக்க மாட்டாத துன்பங்களை யெல்லாம் தன் அடியார்களுக்கு உண்டாக்குவது இறைவன் இயல்பு. துன்பங்களெல்லாம் தம் பேரின்பப் பேற்றிற்கேயாம் என்பதை, அவன் இயல்பு உணர்ந்த அடியார்கள் நன்கு அறிந்து அவன் திருவடிகளையே போற்றி நிற்பர்.

அடிகளை ஆட்கொண்டருளின அருட்குரவன், அவருக்குத் தில்லையில் பரமுத்தி அருளுவதாகக் கூறித் தன்னுடன் வந்த அடியார்களோடு மறைந்தருளினன். இதனை,

" நாயினேனை நலம்மலி தில்லையுள்
கோலம் ஆர்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை ஈங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியரை
ஒன்ற ஒன்ற உடன் கலந்தருளியும்''

என்று அடிகள் உணர்த்தியுள்ளார்.

அதன்பிறகு அடிகள், ஒப்பற்ற அன்புருவாய், உலகை மறந்து, ஜீவன் முத்தர் நிலையுற்றுச் சிவபெருமானையே இடைவிடாமல் வழிபடும் செயலர் ஆனார்.

" உன்கோயில் வாயிலில் பிச்சனுக்கினாய்
பெரிய அன்பருக் குரிய னாக்கினாய் ''

என்று அடிகள் தம் செயலைக் குறித்துள்ளார். அச்செயலும் தம் செயலன்றி அவன் செயலேயாம் என்று அவர் கூறுவது, அவனைத் தஞ்சமென்றடைந்தார்க்கு அவன் உணர்வு வடிவமாக நின்று அருள்புரிவன் என்பதன் உண்மையை உணர்த்தும்.

இறைவனாகிய அருட்குரவனுக்கு ஆட்பட்ட பின்பு, அரசர் ஆணைக்கும் அவர் அஞ்சவில்லை. உடனே வரவேண்டும் என்ற பாண்டியன் ஓலைச் செய்தியைக் கேட்ட அடிகள்,

" தேவர்கோ அறியாத தேவதேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கும் மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவனடியார் அடியா ரோடும்
மேன்மேலும் குடைந்தாடி ஆடுவோமே''

என்று கூறினரே ஒழிய, அரசனுக்குத் தாம் அமைச்சுப் பூண்டொழுகும் அடிமை என்று கூறவில்லை. எனினும், அப்போதும் இறைவன் கட்டளைப்படி நடத்தலே நேரிது என்று எண்ணி அவனைத் தம் அகக் கண்ணால் நோக்க, அவன், "நீ வருந்தாதே; ஆவணி மூலநாளில் குதிரைகள் வருமென்று அரசனிடம் சென்று சொல்; தூதர் ஓலைகொண்டு வந்ததால், முன்பே வந்ததாக அவனிடம் கூறு" என்று தெரிவிக்க, அடிகள் அரசனிடம் சென்று அவ்வாறே தெரிவித்துத் தம இல்லத்தை யடைந்தார். இதற்கிடையில் திருப்பெருந்துறைப் பக்கத்தில் குதிரைகள் இருக்கும் அடையாளம் ஒன்றும் காணப்படவில்லை என்று சில ஒற்றர்கள் வந்து தெரிவிக்க, அரசன் அடிகளைச் சிறையிலடைப்பித்தும், வெயிலில் நிற்க வைத்தும் வருத்தினன். அப்போதும் அடிகள் இறைவனையே நினைந்து

உருகினர். வாழாப்பாத்து, அருட்பத்து, அடைக்கலப்பத்து, குழைத்த பத்து முதலிய உளமுருக்கும் மணிகள் அப்போது உதிர்ந்த னவே ஆகும். அதே காலத்தில் இறைவன் தனக்குப் பாதச் சிலம்பொலி கேட்பித்தருள வில்லையே என்றும் அடிகள் நினைந்து வருந் துவாராயினர். அவர் வருத்தத்தை நீக்கச் சிவபெருமான் நரிகளைப் பரிகளாக்கித் திருப் பெருந்துறையிலிருந்து திருவாதவூர் வழி யாக வந்து, அவர் விரும்பியபடி தன் பாதச் சிலம்பொலியை அவருக்குக் காட்டிப்பின் பாண்டியனிடம் குதிரைகளைச் சேர்ப்பித்த னன்.

''வாதவூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்''

என, இந்த நிகழ்ச்சியை அடிகள் குறித்துள் ளனர். சிலம்பொலியை இடைவிடாமல் கேட் டுக் கொண்டே யிருக்க வேண்டும் என்று அடிகள் எண்ணிய எண்ணப்படி பின் தில் லைக்குச் சென்று சேர்ந்ததும் அவருக்கு இறைவன் அருள் செய்வானாயினன். இதனை,

''சீரார் திருவடித் தன்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகம்மகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடம் செய்
பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ.''

என்ற மகளிர் விளையாட்டுப் பாடலால் அடி கள் அருளிச் செய்துள்ளனர்.

சிலம்பொலி கேட்பார்க்குப் பிறவித்தளை அடியோடு தகர்ந்தொழியும். இறைவன் செய்யும் சோதனைகளின், உச்சநிலை அப் போதுதான் ஏற்படும். அதன் பின் உண்டா வது பேரின்பம்; நீங்காத பேரின்பம், நிலைத்த பேரின்பம்.

குதிரைகள் வந்து சேர்ந்ததும் அடிகள் சிறை நீக்கம் பெற்றார். ஆனால் அன்றிரவே குதிரைகள் நரிகளாயின. வைகை வெயிலில் நிறுத்தி அடிகளை ஒறுக்குமாறு முறையிட் டார். எண்ணப்பதிகம் அப்போது தோன் றியதேயாகும்.

''அலறி என்னுள்ளே ஆற்றுவனாக உடையவனே எனை ஆவ என்றருளாயே'' என்ற முறையீட்டைக் கேட்ட பின், ''இனி உன் தொல்லை தொலைந்தது'' என்பதுபோல, வைகையில் பெருவெள்ளம் பெருக்குவித்து, அடிகளைக் கரையேற்றிப் பாண்டியனுக்கு உண்மை உணர்த்தி, இறைவன், அடிகளைத் தில்லைக்குச் செல்ல வழி செய்தான்.

இறைவன் தன் அடியார் பொருட்டுச் செய்தருளும் அற்புதங்கள் பலப்பல. நரிபரி யாக்கியதும், பரிநரியாக்கியதும், மழையில் லாத காலத்தில் வைகையில் வெள்ளம்வரச் செய்ததும், பாண்டியன் தன் முதுகில் பிரம்பாலடிக்க, அவ்வடி அவன் முதுகிலும் மற்றெல்லா உயிர்களின் முதுகிலும் படச் செய்ததும் முதலிய அற்புதங்கள் மணிவாச கர் பொருட்டு இறைவன் செய்தருளிய அற் புதங்கள். இவற்றால், மக்கள் ஆற்றலுக்கும் அறிவுக்கும் எட்டாத செயல்களைச் செய்யும் அளவில் ஆற்றல் உடையவன் இறைவன் என்ற உண்மை புலப்படும்.

''நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞாலம் எல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரை
யெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே அவிநாசி
அப்பா பாண்டி வெள்ளமே
தெரிய அரிய பரஞ்சோதி
செய்வ தொன்றும் அறியேனே''

என்று அடிகள், பின்பு, தில்லையில் பாடிய பாட்டொன்றால், நரிபரியாக்கியதும், பரிநரி யாக்கியதும், பாண்டியனும் மதுரை மக்களும் வைகை வெள்ளத்தால் திகைப்புண்டது முத லான அற்புதச் செயல்களையெல்லாம் தொகுத்துக் குறித்துள்ளார். 'மதுரையெல் லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்' என் பதால் பரிநரியாக்கிய செயலைக் குறிப்பாக அவர் பெறவைத்தார். நரிபரியாக்கிய செயலை அடிகள் உணர்த்தியுள்ள இடங்கள் பலப்பல.

இறைவன் ஆற்றும் செயல்கள் காரண காரியத் தொடர்பற்றவை; அறிவியல் நூல் முறைக்கு அப்பாற்பட்டவை. இச்செயல்க ளெல்லாம் அறிவியல் நூல் முறைக்குப் பொருந்தவில்லையே என்று தம்மைப் பேரறி வுடையவர்கள் என்று மதிக்கும் சில தாந் தோன்றிகள், உண்மையென ஏற்றுக்கொள்

ளும் முறையையுடையன அல்லன என்று வாய் கூசாமல் கூறுவர். அவர்களுக்குத் தெளிவு உண்டாக்கவேண்டி,

''விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணும் மண்ணகம் முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய்''

என்ற பகுதியால் இறைவன் காரண காரியத் தொடர்பின்றி யாது வேண்டினும் செய்யும் ஆற்றலுடையவன் என்று அடிகள் உணர்த்தி யிருப்பது பொன்னேபோல் போற்றுதற்கு உரியது.

மதுரையில் பாண்டியனிடம் விடை பெற்ற மணிவாசகர், திருப்பெருந்துறைக்குச் சென்று சிலநாள் தங்கியிருந்து, பின திருவுத்தரகோசமங்கை, திருப்பூவணம், திருக்கழுக் குன்றம் முதலிய தலங்களுக்குச் சென்று, இறுதியாகத் தில்லையை யடைந்தார். திருவுத்தரகோசமங்கையில் ஒளியுருவம் கண்டு அடிகள் மகிழ்ச்சி எய்தியதை, அவர்,

''தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி''

என்பதால் குறிப்பிட்டுள்ளார்.

''பூவண மதனில் பொலிந்தினி தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்''

என்பதால் இறைவன் தூவண்ண மேனியைப் பூவணத்தில் கண்டதை அடிகள் உணர்த்தி யுள்ளார். கணக்கிலாத் திருக்கோலங்களை அடிகள் திருக்கழுக்குன்றத்தில் கண்டார் என்பது திருக்கழுக்குன்றப் பதிகத்தால் விளங்குகின்றது.

இறுதியில் தில்லைக்குச் சென்ற அடிகள், தாம் குழந்தைப் பருவத்தில் கண்ட இறைவன் வடிவை, திருத்துருத்தியில் கண்ட அதே வடிவை,

''திருத்துருத்தி மேயானைத்
தித்திக்கும் சிவபதத்தை
அருத்தியினால் நாயடியேன்
அணிகொள்தில்லை கண்டேனே''

என்று அளவிலா மகிழ்ச்சியோடு உரைத்துள்ளார்.

தில்லையில் அவர் ஆற்றிய அற்புதங்கள் வியப்பிற்குரியவை. புத்த அரசன் மகள் ஊமையாயிருந்தவள் பேசும் ஆற்றலொடு திருவருட் பதிவு பெற்றுத்திகழ்ந்த வரலாறு, திருச்சாழல் என்னும் பகுதியால் அடிகளின் அற்புதச் செயலை விளங்க உணர்த்தி நிற்கின்றது.

புராணங்களில் உரைக்கப்பட்டிருக்கும் வரலாற்றிற்குத் திருவாசகத்தில் அகச் சான்றுகள் கண்ட நாம், திருவாசகத்தை அம்பலவாணனே எழுதினான் என்றும், அதற்குப் பொருள் கேட்டவர்க்கு அடிகள் தில்லை நடராசனைக் காட்டி அவனே பொருள் என்று கூறினான் என்றும், அவனை நெருங்கி இரண்டறக் கலந்தார் என்றும், புராணங்கள் கூறும் பொருளை ஏற்றுக் கொள்ளுவதில் ஐயப்படுதல் ஆகாது.

''ஒருவன் என்னும் ஒருவன் காண்க,'' ''உருமூன்றும் ஆகி உணர்வரிதாம் ஒருவன்,'' ''சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம் ஒருவனே,'' என்ற தொடர்களால் **இறைவன் ஒப்பற்ற ஒரே முதல்வன்** என அடிகள் உணர்த்தியுள்ளார்.

இறைவனது தனித்தன்மையை, ''ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இலான்,'' ''ஏதவன் ஊர் ஏதவன் பேர் யார் உற்றார் யார் அயலார் ஏதவனைப் பாடும் பரிசு,'' ''குறியொன்றும் இல்லாத கூத்தன்'' முதலான தொடர்களால் அவர் தெளிவுபடுத்தியுள்ளார்.

''ஆறு அறிவாய் அளவிறந்த பல் உயிர்க்கும் கோன்'' என்பதனால் **இறைவன் உயிர்கட்குத் தலைவன்** என்ற உண்மையை அவர் காட்டியுள்ளார்.

''நாலுணர்வு உணரா நுண்ணியன்,'' ''நின்னை ஐம்புலன்கள் காண்கிலா,'' ''நினைப்பதாக சிந்தை செல்லும் எல்லையேய வாக்கினால் நினைத்தனையும் ஆவதில்லை சொல்லலாவ கேட்பவே'' என்பவற்றால் **உயிர்களின் சுட்டறிவினால் இறைவன் அறியப்படாதவன்** என்ற கருத்தை அடிகள் வலியுறுத்தியுள்ளார்.

''ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்சோதி,'' ''முந்திய முதல் நடு இறுதியுமானாய்'' என்ற தொடர்களால், ''அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்

தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துள தாம் அந்தமாதி'' என்ற சித்தாந்தக் கருத்தை அவர் விளக்கியுள்ளார்.

''எல்லா உயிருமாய்த் தழைத்துப் பிழைத்தவை யல்லையாய் நிற்கும் எத்தனே,'' ''நீ அலால் பிறிது மற்றின்மை,'' ''நிற்பதும் செல்வதும் ஆனேன் காண்க,'' முதலிய அருள்வாக்குகள், இறைவன் எப்பொருளிலும் இரண்டறக் கலந்து நின்றும், பொருள் தன்மையால் அவன் வேறானவனே என்ற உண்மையைப் புலப்படுத்துவன.

அன்பர்கட்கு அருள் செய்யவேண்டி, இறைவன், தன்னுடைய திருவருட் சத்தியினுல் பல்வேறு வடிவம் கொள்வான் என்பதை, ''ஏறுடை ஈசன் இப்புவனியை உய்யக் கூறுடை மங்கையும் தானும் வந்தருளி நூறு நூறாயிரம் இயல்பினதாகி'' என்றும், ''பித்த வடிவு கொண்டு இவ்வுலகிற் பிள்ளையுமாம்,'' ''போர் ஏறே அடற்கரியே கயிலைப் பரம்பரனே'' என்றும் அவர் அருளியுள்ளார்.

''பத்திவலையிற் படுவோன் காண்க,'' ''ஓவாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை,'' ''தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும் அன்ப போற்றி,'' என்ற வாசகங்கள், அன்பே இறைவனை அகப்படுத்தும் கருவி என்றும் அன்பர் உள்ளத்தே அவன் என்றும் நிலையாகக் குடியிருப்பான் என்றும் அன்பரிடத்தே அவரினும் மிக்க அன்புகொள்ளுவான் என்றும் விளங்க உணர்த்துகின்றன.

''தேனைப் பாலைக் கன்னலின் தெளிவை'' என்றும், ''நெல்லிக்கனியைத் தேனைப்பாலை நிறையின்னமுதை'' என்றும் வருவன, இறைவன் தூய பேரின்ப வடிவினன் என்பதையும், ''சித்தம் புகுந்து தித்திக்க வல்லகோன்'' என்றும், ''என் உட்கலந்து தேனாய் அமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்'' என்றும் வருவன, பேரின்ப வடிவினனை இறைவன் அன்பர்கட்கு இன்பத்தை இடையீடின்றி அருளுபவன் என்பதையும் காட்டுவன.

இறைவனே தம்மைப் பேரின்ப நுகர்ச்சிக்குத் தகுதியாக்கிக் கொண்டனன் என்பதைக் ''கல்லை மென்கனி ஆக்கும் விச்சை கொண்டென்னை நின்கழற்கன்பன் ஆக்கினாய்,'' ''இன்பே அருளி உயிருண்கின்ற எம்மானே'' முதலிய பகுதிகளால் அடிகள் பெற வைத்துள்ளார்.

''வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே,'' ''அழுகேன் நின்பால் அன்பாய்,'' ''அழுமதுவேயன்றி மற்றென் செய்கேன்,'' என்பன, அன்பால் அழுவார் அவனையடையலாம் என்று கூறுவன.

இறைவனைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் கொண்டு, ''சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன் திரள்தோள் கூடுவேன்...அம்மானாய்'' என்று பாடும் பாடல் நாயக நாயகிபாவ வழிபாட்டையும் அடிகள் மேற்கொண்டவர் என்பதை உணர்த்துகின்றது.

மகளிர் அம்மனை ஆடுதல், தெள்ளேணம் கொட்டுதல், பூவல்லி கொய்தல், தோணோக்கம் ஆடல், பொன்னூசல் ஆடல், சுண்ணமிடித்தல், அன்னையொடு உரையாடல் முதலிய பொழுதுகளிலும் இறைவனுக்கு வழிபாடாற்றுதல் கூடும் என்பதையும் அவர் உணர்த்தியிருப்பது அனைவர்க்கும் ஊக்கம் ஊட்டுவதாகும்.

மக்கட் பிறப்பெடுத்தவரேயல்லாமல் குயில், கிளி, தும்பி போன்ற உயிர்களும் இறைவனையடைந்து இன்பமெய்த வேண்டுமென்ற பரந்த நோக்கம் உடைய அடிகள், அவற்றைப் பார்த்து, இறைவன் பெயரைக் கூறுமாறும் இறைவன் திருவடிக் கமலத்தேனில் படியுமாறும் வேண்டுகின்றார்.

பெருந்துன்பங்களையும் ஐந்தெழுத்து மந்திரம் போக்கவல்லது என்பதை ''ஐந்தெழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேன்,'' ''நமச்சிவாயவாஅழ்க,'' ''நமச்சிவாய என்றுன்னடி பணியாப்பேயன்,'' ''நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்'' என்பவற்றால் அவர் வலியுறுத்தியுள்ளார்.

''உய்யும் நெறி காட்டுவித் திட்டோங்காரத்துட் பொருளை ஐயன் எனக்கருளிய வாரூர் பெறுவா ரச்சோவே'' என ஓங்கார மந்திரத்தின் சிறப்பையும், அதைத் தாம் அருட்குரவனிடமிருந்து பெற்ற அருமையையும் அடிகள் வியந்து பாராட்டியுள்ளார்.

''ஒன்று நீ அல்லை அன்றி ஒன்றில்லை,'' ''பேதமில்லாதோர் கற்பளித்த பெருந்துறைப்

# ஆண்டாள்

வித்துவான் திரு. B. R. புருஷோத்தம நாயடு, சென்னைப் பல்கலைக் கழகம்.

பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் விஷ்ணு சித்தர் என்னும் பெரியாழ்வார் நந்தவனம் அமைத்துத் திருமாலுக்குச் சாத்துவதற்குத் திருத்துழாய் முதலியன வைத்து வளர்த்து வரலாயினர். அவர் திருத்துழாய்க்குப் பாத்தி அமைக்கக் களைக்கொட்டுக்கொண்டு கொத்துகையில் கொத்தின நிலத்தில் ஒரு பெண் மகவு காணப்பட்டது' அப்பெரியாழ்வார் தாம் கண்ட அக்குழந்தையைத் தம் புத்திரியாகப் பாவித்துக் 'கோதை' என்று பெயர் இட்டு வளர்த்து வந்தார்.

அந்தக் குழந்தை, தனது தந்தை முதலிய பலரும் கண்டு வியக்கும்படி இறைவனிடத்தில் பேரன்பு கொண்டு அவனையே தான் மணம் செய்து கொள்ள விரும்பி, நாடோறும் வடபெருங் கோயிலுடையானுக்குச் சமர்ப்பிக்கும் பொருட்டுப் பெரியாழ்வார் கட்டிவைத்த திருமாலையை அவர் இல்லாத சமயம் பார்த்து எடுத்துத் தன் கூந்தலிலே சூடிக்கொண்டு அவனுக்கு ஒப்பேனோ, ஒவ்வேனோ என்று நாறை பூண்டு கூறை உடுத்துக் கைவளை குலுக்கிக் கோவைச் செவ்வாய் திருத்தி அவ் ஒப்பனை அழகினைக் கண்ணாடியிலே கண்டு, தந்தையார் வருவதற்கு முன்னரே மலர் மாலையைக் களைந்து முன்போலவே செண்டாகச் சுற்றிக் கலங்காமல் வைத்து வருவாள். இப்படிப் பலநாள் கழிந்தன; ஒரு நாள் வெளியில் சென்றிருந்த ஆழ்வார் விரைவில் மீண்டு வந்தபொழுது இறைவனுக்கு என்று தொடுத்த மலர் மாலையைக் கோதை சூடியிருக்கக் கண்டார்; கண்டதும், சினம் கொண்டு 'பெண்ணே! நீ செய்த இது தவறான காரியம்; இனி இப்படிச் செய்யாதே' என்று சொல்லிவிட்டு, அன்று அம்மாலையை இறைவனுக்குச் சாத்தாமல் மனம் வருந்தியிருந்தார்; அன்று இரவில் அவ்வூர் வட

---

பெரு வெள்ளமே" என்ற தொடர்கள், கேவலாத்துவிதப் பொருளை எய்தியவர் அடிகள் என்று கூறுவார்க்குச் சான்றுகளாக நிற்பன.

"நீற்றோன் காண்க நினைதொறும் நினைதொறும் ஆற்றேன் காண்க" எனவும், "வெண்ணீ றணிகிலாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே" எனவும் வரும் தொடர்கள் வெண்ணீற்றின்பால் அடிகள் கொண்ட மதிப்பை விளக்குவன.

சுருங்கக் கூறின் திருவாசகத்தால் உணர்த்தப்படாத சித்தாந்தத் தத்துவப் பொருள்களே இல்லையென்னலாம்.

"மக்கட்பிறவி அடைதற்கு அரியது. தெய்வம் ஒன்று உண்டு என்று சித்தமுண்டாவது அதனினும் அரியது. மக்கள் யாவரும் வீட்டின்பம் பெறவிரும்பின், சிவபெருமானை முதற் கடவுளாகக்கொண்டு வழிபாடாற்றல் வேண்டும். யாவரும் வீட்டின்பம் பெறலாம். இறைவனிடத்து அன்பும், அடியார் கூட்டுறவும், அன்பால் அவன் பால் அழுகையும் கொள்ளுபவர், அவனருளாலே அவனே மெய்க்குரவனாக வந்துணர்த்த அவன் உண்மை இயல்பைத் தெளிய உணர்வர். இடையே அவன் செய்யும் சோதனைகட்குத் தளராமல் அவனையே பற்றி நிற்பின் அவன் பலப்பல அற்புதங்கள் காட்டி அருள் புரிவன். பின்னர் உயிர்கள் தாமே அற்புதங்கள் நிகழ்த்தவல்லன ஆகும். இறுதியில் அவனொடு இரண்டறக் கலந்து இன்புறலாம்" என்ற உண்மைகளை உணர்த்துவது திருவாசகம். இத்தகைய திருவாசகத்தை நாம் சுவைக்க அருளியவர் மாணிக்க வாசகர் என்பதை நாம் உணர்ந்து திருவாசகத்தையும் மணிவாசகரையும் நாம் என்றென்றும் போற்றிக்கடைத் தேறுவோமாக.



தமது குமாரியாகத் திரு அவதரித்தாள் எனத் துணிந்து, அந்தக் காரணத்தால் அவளுக்கு '**ஆண்டாள்**' என்றும், இறைவனுக்குச் சாத்தும் மாலையைத் தன் கூந்தலில் சூட்டிக் கொடுத்த காரணத்தால் '**சூடிக் கொடுத்த நாய்ச்சியார்**' என்றும் பெயரிட்டு அது முதற்கொண்டு தம் புத்திரியாரை அப் பெயர்களால் அழைத்து வரலாயினர்.

நாள் செல்லச் செல்ல ஞானமும் காதலாகிய பக்தியும் விஞ்சி வளரவே, இந்தக் கோதை, 'எம் பெருமானைத் தழுவி முழுவிக் கலக்க வேண்டும்' என்று பெரு விருப்பம் கொண்டாள். அவனை விட்டு அகன்று உயிர் ஆற்ற நில்லாத நிலையினை அடைந்தாள்.

இவர் நினைத்தபடி எம்பெருமான் முகம் காட்டவில்லை. அதனால், மிகமிக வருந்திய இவர் என் செய்யலாம் என்று ஆலோசித்தார். அப்போது 'இறைவன் ஸ்ரீ கிருஷ்ணனாகத் திருவவதரித்திருந்த காலத்தில் திருவாய்ப்பாடியில் உள்ள பெண் பிள்ளைகள் அப்பெருமானை நினைத்தபடி அநுபவித்தார்கள்' என்பது நினைவிற்கு வந்தது; அந்தக் கிருஷ்ணாவதாரம் பல நாட்களுக்கு முற்பட்டதாகையால் தான் நினைத்தபடி அவனைப் பெற முடியாதே என்று பின்னும் வருந்தலானார். அப்போது, தார்மிகர்கள் சிலர் "முன்பு ஸ்ரீ கிருஷ்ணனும் திருவாய்ப் பாடிப் பெண்களும் கைகோர்த்துக் குரவைக் கூத்தாடிப் பேரானந்தத்திலிருக்கையில், 'இவர்களால் இப் பெருமகிழ்ச்சி தாங்கப் போகாது' என்று ஸ்ரீ கிருஷ்ணன் ஒளிந்துகொள்ள, அப்பெண்கள் தங்கள் ஆற்றாமையாலே ஒருத்தி கிருஷ்ணனாகவும் மற்றொருத்தி காளியனாகவும் இங்ஙனம் பலபடி பாவனை செய்து ஆறினார்கள்" என்று சொல்லினர்.

உடனே இந்தக் கோதையும் அந்தத் திருவாய்ப் பாடிப் பெண்களைப் போலவே நோன்பு நோற்றுத் தன் ஆற்றாமையைத்

பெருங்கோயிலுடையான் ஆழ்வார் கனவிலே தோன்றி 'இன்று நீர் நமக்கு மாலை கொண்டு வாராதது என்?' என்று கேட்க, ஆழ்வாரும் நடந்த செயலை விண்ணப்பித்தார். அது கேட்ட பெருமான் 'அவள் சூடிக் கொடுத்த மாலையே நமது மனத்துக்கு உவப்பானது; ஆகையால், இனி, அப்படிப்பட்ட பூமாலையையே நமக்குக் கொணர்க' என்று அருளிச் செய்து மறைந்தான். உடனே கண் விழித்தெழுந்த ஆழ்வார் "பின்னை கொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்" என்கிறபடியே, உலகமக்களை உய்விப்பதற்காகவே திருமகளே இவ்வாறு

தவிர்க்கப் பார்த்தார்; அப்படிச் செய்யுமிடத்தில் **பாவனையின் மிகுதியினாலே,** தான் ஆயர் கன்னிகைகளின் தன்மையை அடைந்து, தன்னுடைய ஸ்ரீவில்லிபுத்தூரே திருவாய்ப்பாடியாகவும், ஆங்குள்ள வடபெரும் கோயிலே கிருஷ்ணனை வளர்த்த தந்தையாகிய ஸ்ரீநந்தகோபரின் திருமாளிகையாகவும், வடபெருங் கோயிலுடையானே ஸ்ரீ கிருஷ்ணனாகவும் கொண்டு நோன்பு நோற்கலானார்; அச்செயலைப்பின்புள்ளாரும் அறியுமாறு **திருப்பாவை** என்ற பிரபந்த மூலமாகத் தெரிவிக்கலானார்.

பின்னரும் தம் விருப்பம் நிறைவேறாத படியால் அந்தக் கோதை காமனைக் குறித்து நோற்பதும், ஆய்ச்சிமார்க்கும் ஸ்ரீகிருஷ்ணனுக்குமாக நடந்த வரலாறுகளைப் பாவனை செய்வதும், மேகம் முதலிய பொருள்களைத் தூதுவிடுவதும் முதலிய மனத்தின் அநுபவங்களை **நாச்சியார் திருமொழி** என்கிற பிரபந்தத்தின் மூலமாக வெளியிட்டார். இந்நாச்சியார் திருமொழியில் அன்னையாருடைய காதல் பெருக்கு எடுத்து கரைபுரண்டு ஓடுவதைக் காணலாம். "திருத்துழாய் பரிமளத்தோடே கூடியே முளைக்குமாறு போலே, இந்நாச்சியாரும் ஆஜன்ம பால்ய யௌவனாவஸ்தைகள் தோறும் வளருகிற பரபக்தி பரஞான பரம பக்திகளையுடையள் ஆகையாலே, பகவத் விஷயப்ராவண்யம் அல்லாத ஆழ்வார்களைக் காட்டில் இவளுக்கு அதிசயித்திருக்கும். புருஷனைப் புருஷன் காமிக்கு மதுவும் ஸ்திரீயை ஸ்திரீ காமிக்குமதுவும் மேட்டுமடையாய் இருக்கும்; புருஷன் ஸ்திரீயைக் காமிக்குமதுவும் ஸ்திரீபுருஷனைக் காமிக்குமதுவும் பள்ளமடையாகையாலே, இது சேர்ந்திருக்குமிறே; ஆகையாலே ப்ராவண்யம் அதிசயித்திருக்கும்" என்ற வாக்கியங்கள் இங்கு நினைத்தல் தகும்.

இங்ஙனம் நிகழ்கையில், தம்புத்திரிக்குத் திருமணம் செய்வதற்கு ஏற்ற பருவம் வந்ததையும், மானிடவர்க்கு என்று பேச்சுப்படில் வாழமாட்டாத அவருடைய வைராக்கியத்தையும் கண்டு பெரியாழ்வார் சிந்தைகொண்டு அயர்ந்திருக்க, திருவரங்கநாதன் ஆழ்வாருடைய கனவில் தோன்றி 'உமது திருமகளைத் திருவரங்கம் பெரிய கோயிலுக்கு அழைத்துக் கொண்டு வாரும்; நாமே அங்கீகரிப்போம்' என்று அருளிச் செய்து ஸ்தானிகர் முதலியோர்க்கும் வெகு சம்பிரமத்துடனே கோதையைப் பல்லக்கில் ஏற்றி அழைத்து வரும்படி கனவில் கட்டளை இட்டான்.

அக்கட்டளையின்படியே, கோயிலைச் சார்ந்த எல்லாப் பரிகரத்தாரும் ஸ்ரீவில்லிபுத்தூர்க்குச் சென்று நம் பெருமாளுடைய கட்டளையை விண்ணப்பிக்க, ஆழ்வார் மிகவும் மனம் உவந்து வடபெருங்கோயிலுடையானிடம் விடை பெற்றுக்கொண்டு பிரயாணம் ஆயினர். அதனைக் கேள்வியுற்ற பாண்டிய அரசன் கோதையின் திருமணத்தைச் சிறப்பாக நடத்தக்கோலி, ஸ்ரீவில்லிபுத்தூர் முதல் திருவரங்கம் வரையிலும் அலங்கரிக்க ஏற்பாடு செய்துவிட்டு நால்வகைச் சேனைகளோடு ஆழ்வாரிடம் வந்தான்.

பின்னர், ஆழ்வார் ஆண்டாளை மணிப் பல்லக்கில் எழுந்தருளப் பண்ணி மங்கள வாத்தியத்துடனே 'சூடிக்கொடுத்த சுடர்க் கொடி வந்தாள், திருப்பாவை பாடிய செல்வி வந்தாள், வேயர்குலத்து விளக்கு வந்தாள்' என்று திருச்சின்னங்கள் பணிமாற, மெய்காப்பாளர் உடன் சூழ்ந்து வரத் தாமும் அரசனுமாக இருபுறமும் இடைவிடாதிருந்து அழைத்து வந்து திருவரங்கம் பெரியகோயிலை அடைந்தார்.

பெரிய பெருமாளுடைய முன் மண்டபத்திலே ஆண்டாளை நிறுத்திப் பெருமாளைச் சேவிக்கச் செய்கையில், காந்தம் இரும்பினை இழுப்பது போன்று அப்பெருமானுடைய முடிவில்லதோர் எழில் அப்பிராட்டியை இழுக்க, ஆண்டாள் சிலம்பு ஆர்க்கச் சீரார் வளை ஒலிப்ப நுண்ணிடை நுடங்க மென்னடைகொண்டு அப்பெருமான் அருகிற் சென்று அப்பெருமானது திருவடி பிடிக்கக் கருதி நாகணையை மிதித்து ஏறி அப்பெருமானது திருமேனியிலே இரண்டு அறக்கலந்து அப்பரமனை என்றும் பிரியாதிருப்பவர் ஆயினர்.

இதனைக்கண்ட பாண்டியன் உள்ளிட்ட அனைவரும் ஆச்சரியப்பட, திருவரங்கச் செல்வனார் ஆழ்வாருக்கு அருள்பாடிட்டருளி 'க்ஷீரசமுத்திரராஜனைப் போலவே நீரும் நமக்கு மாமனார் ஆய்விட்டீர்' என்றுமிகவும் உவந்தருளி, இவர்க்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டத்துடனே ஸ்ரீசடகோப

னும் பிரசாதித்து, 'ஸ்ரீவில்லிபுத்தூர் உறைவான்தன் பொன்னடி பூண்டு கொண்டு வாழும்' என்று விடை கொடுத்தருள, ஆழ்வாரும் பிரீதி கலந்த துக்கத்தோடு ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று முன்போல் வடபெருங்கோயிலுடையான் துளவத் தொண்டிலே ஈடுபட்டு வாழ்ந்து வந்தார்.

**ஆண்டாளுக்கு உள்ள ஒப்புயர்வு அற்ற பெருமை:**—தேகத்தையே ஆத்மாவாக நினைத்திருக்கும் சம்சாரிகளுக்கும், ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவர்களான ரிஷிகளுக்கும் மிகவும் வாசி உண்டு. ஸ்வயத்னத்தால் புருஷார்த்தத்தைப் பெற நினைக்கும் ரிஷிகளுக்கும், பகவானாலே மயர்வறமதி நலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுக்கும் நெடுவாசி உண்டு. பகவத் அநுபவத்தை ஆசைப்பட்ட ஆழ்வார்களுக்கும், பகவத் ஸம்ருத்தியை ஆசைப்பட்ட பெரியாழ்வார்க்கும் நெடுவாசி உண்டு. பகவத் ஸம்ருத்தியை ஆசைப்பட்ட பெரியாழ்வார்க்கும் பாகவதஸம்ருத்தியை ஆசைப்பட்ட ஆண்டாளுக்கும் நெடுவாசி உண்டு. ஆழ்வார்கள் எம்பெருமானாலே மயர்வறமதி நலம் அருளப் பெற்றார்கள்; இவள் எம்பெருமானுக்கு மயர்வறமதி நலம் அருளினாள். ஸம்சாரத்தில் உறங்கிக் கிடந்த ஆழ்வார்களைச் சர்வேஸ்வரன் எழுப்பினான். பள்ளி உணர்த்தும் பிரானாகிய தொண்டரடிப்பொடியாழ்வாரும், முதலிலே நாராயணனாலே உணர்த்தப் பெற்று பின்பு அவனை உணர்த்தினார்.

'அவரைப்பிராயம் தொடங்கி என்றும்
ஆதரித்து எழுந்தஎன் தடமுலைகள்
துவரைப்பிரானுக்கு என்றே சங்கற்பித்துத்
தொழுது வைத்தேன் ஒல்லைவிதிக்கிற்றியே''

என்கிறபடியே, பிறந்ததிலிருந்தே கேசவனைக் காமுற்றவளாய் இருந்து அவனை எழுப்பினாள் இவள். ஆழ்வார்கள் இளையபெருமாளைப் போன்றவர்கள். பெரியாழ்வார் ஸ்ரீபரதாழ்வானுக்கு ஒப்பானவர். ஆண்டாளும் மதுரகவிகளும் ஸ்ரீசத்ருக்நாழ்வானை ஒப்பர்கள். ஆழ்வார்களும் இளையபெருமாளும் பகவதநுபவத்தை ஆசைப்பட்டார்கள். ஸ்ரீபரதாழ்வானும் பெரியாழ்வாரும் பகவத்ஸம்ருத்தியை ஆசைப்பட்டார்கள். ஸ்ரீசத்ருக்நாழ்வானும் மதுரகவிகளும் ஆண்டாளும் பாகவத சேஷத்வத்திலே நிலைநின்றவர்கள். ஆழ்வார்களுடைய பக்தியைக் காட்டில் பதின்மடங்கு அதிகமான அன்பினை உடையவளாய் இருப்பாள் இவள். பதின்மருடைய ஞானமும் ஸ்திரீதனமாக இவள் பக்கலிலே குடிகொண்டது. பத்துப் பேர்க்கு ஒரு பெண் மகவு அன்றோ இவள்.

அஞ்சுகுடிக்கு ஒரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்ப்—பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து.

இவருடைய காலம்.—கி. பி. எட்டாம் நூற்றாண்டு. கி. பி. 731-இல் திருப்பாவை பாடியது என்பர்.



## ஆலயவார வழிபாடு

தஞ்சை ஜில்லா நன்னிலம் தாலூக்கா, திரு அம்பல் ஸ்ரீ பிரமபுரீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தில், ஆலய வார வழிபாடு 12—12—58 வெள்ளிக்கிழமை மாலை 5-மணிக்குத் துவங்கியது. திரளான மக்கள், சிறுவர் சிறுமியர்கள் கூடி தேவாரம் பாடப்பட்டு சன்னிதி தோறும் வழிபட்டு, திருக்கோயிலை வலம் வந்து ஸ்ரீ நடராசப் பெருமான் சன்னதியில் திருமறைக் கோயிலை-டி ஆலய தர்மகர்த்தா ஸ்ரீ ஆ. நடராச பிள்ளை அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. பின்னர் ஸ்ரீ பிரமபுரீஸ்வரர் சன்னதியில் தருமபுர ஆதீனத்தைச்சேர்ந்த சைவசமயப் பிரசாரகர் ஸ்ரீ கோ. சிவஞானம் அவர்களால் " ஆலய வழிபாடு " என்பதுபற்றி சொற்பொழிவு ஆற்றப்பட்டது.





# திருச்செந்தூர்

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்-
பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தி வாழ்வே.

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே-ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால்
எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.

—திருமுருகாற்றுப்படை-வெண்பா.

திருச்செந்தூர் ஒரு பெருமை பெற்ற முருகன் தலம். இது திருநெல்வேலி மாவட்டத்தில் கடற்கரையில் அமைந்துள்ளது. செந்தில், அலைவாய், திருச்செந்தில், திருச்சீரலைவாய், திருச்செந்திலூர், திருச்செந்தூர், ஜெயந்திபுரம், ஸ்ரீசாந்தி நகரம், சந்தனாசலம் என்ற பல பெயர்கள் இப்பதிக்குண்டு. இவ்வூர் சிவக்கொழுந்தீசர் கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்றில் திரிபுவன மாதேவி சதுர்வேதி மங்கலம் என்று குறிக்கப்படுகிறது.

சங்க இலக்கியங்களில் செந்தில், அலைவாய் என்றும், தேவாரத்தில் செந்தில் என்றும், திருப்புகழில் திருச்செந்தூர் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. •முருகனுக்கு சேந்தன் என்ற பேருண்டு. அவன் குடிகொண்டிருப்பது சேந்து இல்; அது செந்தில் என்றாகி, செந்திலூர் என்று வழங்கி, செந்தூர் ஆயிற்றென்பர் ஒரு சாரார். ஜெயந்திபுரம் என்பது செந்தூர் ஆக மருவியது என்பர் மற்றொரு சாரார்.

இத்தலம் பண்டைப் பெருமை வாய்ந்ததென்பது கீழ்க்காணும் கூற்றுக்களால் அறியலாம்:—

வெண்டலைப் புணரிய அலைக்குஞ் செந்தில்
நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை

—புறநானூறு

திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேய்

—அகநானூறு

உலகம்புகழ்ந்த ஓங்குஉயிர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே

—திருமுருகாற்றுப்படை

சீர்கெழி செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்

—சிலப்பதிகாரம்

நஞ்செந்தின் மேயவள்ளி மணாளற்குத்
தாதை கண்டாய்.

—அப்பர்-திருத்தாண்டகம்

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திரு ஆவினன்குடி, குன்றுதோறாடல், பழமுதிர் சோலை என்ற ஆறுபடை வீடுகளில் இதை இரண்டாவதாகச் சொல்லப்படுவது. இந் நகரம் கண்டவர் முருகப்பெருமானே என்று கந்தபுராணம் கூறும். கிரௌஞ்சமலையைப் பிளந்து தாரகாசுரனைக் கொன்ற பின் அறுமுகன் செந்திலுக்கு வந்து தங்கி, தேவகம்மியனைக்கொண்டு திருக்கோயில் அமைத்தார். அதை,

அறுமுக னங்கணேகிய
கிலகம்மியனை நோக்கி
இறையிலோர் சினகரத்தை
மியற்றுதி யீண்டையென்னத்
திறனுணர் புனைவர் செம்மல்
சிந்தை யினுடித்தேவர்
உறைதிரு நகரம் வெஃகவொரு
திருக்கோயில் செய்தான்.

எனவரும் கந்தபுராணச் செய்யுளால் அறியலாம். வீரமகேந்திரம் சென்று சூரபதுமனாதியரை அழித்து திரும்பிவந்து அறுமுகப் பெருமான் இங்கு இருந்தருளினார்; அப்போது சிவபெருமானை வழிபட்டார் என்றும் கந்தபுராணம் கூறுகிறது. அவர் வழிபட்ட சிவலிங்கமூர்த்தி மூலத்தானத்தில் இருக்கிறது.

அகநானூறு, புறநானூறு, சிலப்பதிகாரம் இவைகளில் இத்தலத்தைப்பற்றிய குறிப்புக்களேயுள்ளன. நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையில் இங்கெழுந்தருளியுள்ள முருகப்பெருமானின் ஆறு திருமுருகங்களின் செயல்களையும், பன்னிரு திருக்கரங்களின் செயல்களையும் அழகாக எடுத்துரைக்கிறார். அருணகிரிநாதர் செந்தில் என்ற பெயரில் 84 திருப்புகழ்ப் பாடல்களும், செந்தூர் என்ற பெயர் அமைத்து 8 பாடல்களும், அலைவாய் என்ற பெயருடன் 7 பாடல்களும், சீரலைவாய் என்ற பேர்வரும் 3 பாடல்களும், அலைசெய்திருப்பதி, அலையெறி திருநகர், உயர்கரை, செந்திமலை, வேலைநகர் என்ற பெயர்கள் குறித்த ஒவ்வொரு பாடலும் ஆக 107 பாடல்கள் பாடியுள்ளார். இன்னும் "செந்திலை யுணர்ந்துணர்ந் துணர்வுற," "கயிலைமலையனைய செந்தில்," "மகா புனிதந் தங்கும் செந்தில்" என்றெல்லாம் அவரே விதந்தோதுகிறார். குமரகுருபரர் ஐந்து வயது வரை ஊமையாய் இருந்தார். அவர் தாய் தந்தையர் குழந்தையை செந்திலாண்டவன் திருமுன் விட்டுப் பாடு கிடந்தார்கள். அறுமுகன் திருவருளால் ஊமைத்தன்மை நீங்கி அக்குழந்தை "பூமேவு செங்கமலப்புத்தேளும் தேறறிய" எனறு தொடங்கும் கந்தர் கலி வெண்பாவைப் பாடி முடித்ததும் இத்தலத்தேதான். இராமநாதபுரத்துக்கருகிலுள்ள சன்னுசி கிராமத்தைச் சேர்ந்த பகழிக் கூத்தர் என்ற வைணவர் கொடிய வயிற்று வலியால் துன்புற்றார். அலைவாய் முருகன் அருளால் அந்நோய் தீரப் பெற்றார். திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் என்ற அரிய நூலைப் பாடினர். பாடல்கள் பக்திச் சுவை மிக்கு உடையன. எடுத்துக் காட்டாக கீழே இரண்டு பாடல்கள் தரப்படுகின்றன :—

கத்துந் தரங்க மெடுத்தெறியக்
கடுஞ்சூ லுளைந்து வலம்புரிகள்
கரையிற் றவழ்ந்து வாலுகத்திற்
கான்ற மணிக்கு விலையுண்டு

தத்துங் கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளந் தனக்கு விலையுண்டு
தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்

கொத்துஞ் சுமந்த பசுஞ் சாலிக்
குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்டல் தருநித் திலந்தனக்குக்
கூறுந் தரமுண் டுன்கனிவாய்

முத்தந் தனக்கு விலையில்லை
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே.

பேரா தரிக்கு மடியவர்தம்
பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா

சேரா நிருதர் குலகலகா
சேவற் கொடியாய்த் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா வென்றுன் திருமுகத்தைப்

பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடனப்
பரவா வாவென் றுனைப் போற்றிப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்

வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருவே.

இன்னும் திருவாவடுதுறை யாதீனத்து சுவாமி நாததேசிகர் என்பார் திருச்செந்திற் கலம்பகம் என்ற அழகிய நூலை யாத்துள்ளனர். அதனின்றும் ஒரு பாடல் கீழ்க் காண்க :—

வரங்கொண்ட உமைமுலைப்பால் மணங்கொண்ட
செவ்வாயும்,
பரங்கொண்ட களிமயிலும், பன்னிரண்டு
கண்மலரும்,
சிரங்கொண்ட மறைஇறைஞ்சுஞ் சேவடியும்,
செத்தூரன்
கரங்கொண்ட வேலுமென்றன் கண்ணை விட்டு
நீங்காவே.

மேலும் துறைமங்கலம் சிவப்பிரகாசரின் திருச்செந்தில் நிரோட்டகயமக வந்தாதி, திருச்சிற்றம்பல நாடிகள் எழுதிய திருச்செந்தூரகவல், வென்றிமாலைக் கவிராயர் இயற்றிய திருச்செந்தூர்த்தல புராணம், சரவணப் பெருமாள் கவிராயர் செய்த கந்த வருக்கச் சந்தவெண்பா, பாம்பன் சுவாமிகள் திருவலங்கல் திரட்டில் பாடிய பாடல்கள், சர்க்கரைப் புலவருடைய திருச்செந்தூர்க் கோவை, கந்தசாமிப் புலவர் எழுதிய திருச்செந்தூர் நொண்டி நாடகம், தண்டபாணி சுவாமிகளின் திருச்செந்தூர்ப் பிரபந்தங்கள், திருச்செந்தூர்ப் பரணி, திருச்செந்திலரசு, திருச்செந்திலந்தாதி, திருச்செந்தில் வெண்பா, மாசிலாமணிமாலை முதலிய பல நூல்கள் இத்தலத்தைப் பற்றியுள்ளன. ஆதிசங்கரர் சுப்பிரமணியப் புஜங்க தோத்திரத்தைப் பாடி யிருக்கின்றார்.

இயற்கையழகமைந்த இத் திருக்கோயில் கடற்கரையில் இருக்கிறது. வாயில்கள் தெற்கிலும் மேற்கிலும் உண்டு. கிழக்கு வாயில் அடைக்கப்பட்டிருக்கிறது. தெற்கு வாசலிள்ள சண்முக விலாசமும் மேடை மண்டபமும் மிகவும் அழகுடையன. அம்மண்டபத்துக்கு நேரே ஆறுமுக நாயனர் சந்நிதி இருக்கிறது. அதற்கடுத்து கிழக்கு நோக்கியிருப்பது மூலத்தானம். இக்கோயிலில் செந்திற் கோவிந்தப்பெருமாள் சயனத் திருக்கோலத்துடன் சேவை சாதித்தருளுகிறார். வள்ளி, தெய்வயானை அம்மையார்களுக்கு உட்பிரகாரத்திலேயே தனித்தனிக் கோயில்கள் உள்ளன. கோயில் எல்லையைக் குறுகும்போதே துண்டுகை விநாயகர் கோயில் இருக்கிறது. கடற்கரைக் கோயிலையொட்டி வடக்கே கடல் ஓரத்தில் ஒரு குகைக் கோயில் இருக்கிறது. இதில் வள்ளியம்மையின் உருவம் அமைந்துள்ளது. 'வள்ளி ஒளிந்தவள நாடு' என்று இக் குகைக்குப் பெயர் வழங்குகிறது.

சண்முக விலாசத்துக் கெதிரில் கடற்கரையில் வதனரம்பம் முதலாக 24 தீர்த்தங்கள் உள்ளன. திருச்செந்தூர்த் தலபுராணத்தில், கந்தபுஷ்கரணி, தெய்வயானை தீர்த்தம், வெள்ளை வாரணதீர்த்தம், வயிரவ தீர்த்தம், குறக்கொடி தீர்த்தம், பாவநாச தீர்த்தம், சேது தீர்த்தம், தசகங்கை தீர்த்தம் என்ற ஒன்பது தீர்த்தங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. கோயிலுக்குத் தெற்கே 200 கஜ தூரத்தில் கடற்கரையில் நாழிக்கிணறு என்ற கிணறு இருக்கிறது. பெரிய கிணற்றுக்குள் இது ஒரு சிறு கிணறாய் அமைந்துள்ளது. ஒரு சதுர அடி பரப்பும், ஏழு அடி ஆழமும் உள்ளது. நல்ல தண்ணீர். வாம்பு வரையில்

நிறைந்திருக்கும். எடுத்தால் நிறைந்துவிடும். எடுக்காமலிருந்தாலும் நீர் ஊறி வழிவ தில்லை. இவ்வற்புதக் கிணற்றின் தன் மையை என்னென்று கூறுவது!

ஆவணி, மாசி இந்த இரண்டு மாதங் களிலும் பெரிய திருவிழாக்கள் நடைபெறு கின்றன. வைகாசி விசாகத்திலும், ஐப்பசி சஷ்டியிலும் சிறப்பான விழாக்களும் நிகழ் கின்றன. இக்கோயிலில் பன்னீர் இலையில் திருநீறு அளிக்கும் வழக்கம் தனிச் சிறப் புடையது. திரிசுதந்திரர், முக்காணியர் அல் லது போற்றிமார் என்ற வகுப்பினர் ஆலய பூசை செய்கின்றனர்.

ஆதியில் இக்கோயிலை உக்கிரபாண்டி யன் கட்டியதாகச் சொல்லப்படுகிறது. மேலக் கோபுரம், சண்முக விலாசம், வசந்த மண்ட பம் முதலிய திருப்பணிகளை, தட்சணாமூர்த்தி சுவாமிகள், மௌனசுவாமிகள், காசி சுவாமி கள், வள்ளிநாயக சுவாமிகள் முதலிய துறவி கள் செய்து முடித்தது பெரிதும் போற்றத் தக்கது. மேலக்கோபுரம் 9 நிலைகளுடன் 137 அடி உயரம் உள்ளது. கண்ணுக்கெட்டிய தூரம் இக்கோபுரம் வானளாவி நிற்கும் காட்சி எழில் மிகுந்தது.

திருச்செந்தூர்க் கோயிலில் நான்கு கல் வெட்டுக்கள் உள்ளன. இரண்டு பாண்டியன் வரகுண மாறன் (கி. பி. 875) காலத்தவை; ஒன்று மாறவர்மன் (கி. பி. 1282) காலத்தது. மற்ற ஒன்று விக்கிரம பாண்டியதேவன் காலத்தது. முருகனை, 'திருச்செந்தில் சுப்பிர மணியப் பிள்ளையார்' என்று கல்வெட்டுக் குறிக்கிறது. இக்கோயிலுக்குள் நக்கீரதேவ நாயனுருக்குக்கோயில் இருந்ததாக ஒரு கல் வெட்டு கூறுகிறது. கோயில் பூசைக்காகவும் மற்ற செலவுகளுக்காகவும் 1400 பொற்காசு கள் மூலதனமாகவும், நிலங்களும் விடப்பட்ட செய்திகளை இக்கல்வெட்டுக்கள் அறிவிக் கின்றன.

கி. பி. 1648-ஆம் ஆண்டில் சில டச்சு வணிகர்கள் ஆறுமுக நாயனரின் திருவுருத் தைப் பொன் என்று எண்ணி, திருடிக் கொண்டு கப்பலில் எடுத்துப்போய் உருக்க முயன்றார்கள். கடல் கொந்தளிப்பு ஏற்பட, பயந்து விக்கிரகத்தைக் கடலில் எறிந்துவிட் டனர். இதையறிந்த வடமலையப்ப பிள்ளையன் என்கிற பேரன்பர் மரக்கலங்களுடன் கடலிற் சென்று, அத்திருவுருவத்தை யெடுத்து வந்து கி. பி. 1653-இல் மறுபடியும் பிர திஷ்டை செய்தார்; பல நிபந்தங்கள் அளித் தார்; ஒரு மண்டபமும் கட்டினார். அது இப் போது வடமலையப்பன் மண்டபம் என்று வழங்குகிறது. இந்தச் செய்தியை எம். ரென் ஹல் என்னும் பிரெஞ்சு ஆசிரியர், ஜெர்மனியி லுள்ள பர்லின் நகரில் 1785-ஆம் ஆண்டில் ஒரு டச்சு மாலுமியிடம் தெரிந்துகொண்ட தாகக் கூறியிருக்கிறார். திருநெல்வேலியில் கலெக்டராக இருந்த எஸ். ஆர். லூஷிங்டன் என்பவர் 1803-ல் கோயிலுக்கு சில வெள் ளிப் பாத்திரங்களைக் கொடுத்தாராம்.

பாஞ்சாலங்குறிச்சி வீரபாண்டிய கட்டப் பொம்மன் திருச்செந்தூர் முருகனிடம் பேரன்பு பூண்டவன். செந்திலாண்டவனுக்கு உச்சிப் போதில் பூசை முடிந்த பின்னரேதான் உணவுண்ணும் நியதியை மேற்கொண்டிருந் தான். இதை யறிந்துகொள்ள திருச்செந்தூரி லிருந்து பாஞ்சாலங்குறிச்சிவரை 40 கல் தொலைவிற்கு இடையிடையே நகரா மண்ட பங்கள் நிறுவி, அவைகளில் முரசங்கள் முழங்கச் செய்து, கடைசி மண்டபத்தின் முரசொலி கேட்டுப்பின் உணவு உண்பது வழக்கம். என்னே இவ்வீரமன்னனது முருக பக்தி!

பல்லாயிரக்கணக்கான மக்கள் இங்கு பிரார்த்தனை செலுத்துகின்றனர். "வந்த வினையும் வருகின்ற வல்வினையும், கந்த னென்று சொல்லக் கலங்குமே, செந்தினகர்ச் சேவகா என்று திருநீறு அணிவார்க்கு மேவ வாராதேவினை" என்பது நம்பிக்கை. "சாகா வரமும் தந்திடும், உடம்பிற் போகாப் பீடை போக்கி ரட்சிக்கும், வறுமை நீங்கும், வாழ் வுண்டாகும்" என்று திருச்செந்தூர் அகவல் தெரிவிக்கிறது.

கருணைமா ருதுள்ளுறுங்
கண்கள்பன் னிரண்டினுலே
இருவினை களைந்தமேலோர்க்
கினிய வானந்த மெல்லாம்
வரன்முறை பெருக்கி யன்னுர்
மனமெனுங் கோயிற் றூண்டாத்
திருவினக் கொளியாம் வைவேற்
செயந்தியம் பதியாய்போற்றி
—திருச்செந்தூர்த்தல புராணம்.

# காசிகண்ட குமரகுருபர அடிகள்

[டாக்டர் R. P. சேதுப்பிள்ளை B.A.B.L.,]

[தாமிரபர்ணி ஆற்றங்கரையில் ஸ்ரீ வைகுண்டம் என்ற பதியின் ஒரு பகுதி திருக்கைலாசபுரம். அங்கு சுமார் 300 ஆண்டுகள் முன் வாழ்ந்த சண்முகசிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமசுந்தரி அம்மையாருக்கும் அருமந்த மகவாய் அவதரித்தவர் குமரகுருபரர். ஐந்தாண்டுவரை பேச்சின்றி ஊமைபோல இருந்தார். மனங்கவன்ற பெற்றோர் அக்குழந்தையை எடுத்துத் திருச்செந்தூர்ச் சென்று செந்திலாண்டவன் திருமுன் விட்டுப் பாடு கிடந்தனர். குழந்தை பேசும் ஆற்றல் பெற்று 'கந்தர் கலி வெண்பா' என்னும் நூலைப் பாடியது. பின்னர் தம்மூர் இறைவன்மீது, குமரகுருபரர் 'கைலைக் கலம்பகம்' பாடி யருளினர். மதுரைக்குச் சென்று 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் பாடினர். அதை அரங்கேற்றும்போது மீனாட்சியம்மையே குழந்தை வடிவில் தோன்றி திருமலை நாயக்க மன்னரின் கழுத்திலிருந்த முத்துமாலையை எடுத்து அடிகளாருக்கு அணிந்து மறைந்தாள். பின்னர் 'மதுரைக் கலம்பகம்' இயற்றினார். துறவற நாட்டங் கொண்டு தருமபுர ஆதீனத்தை யடைந்தார். அங்கெழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகரின் ஆணையின் வண்ணம் சிதம்பரம் செல்லும்போது, வைத்தீசுவரன் கோயிலில் தங்கி 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்' என்னும் நூலையாத்தனர். சிதம்பரத்தில் 'சிதம்பர மும்மணிக்கோவை', சிதமபரச் செய்யுட்கோவை', 'நீதிநெறி விளக்கம்' முதலிய நூல்களை இயற்றினர். 'திருவாரூர் நான்மணிமாலை'யும் இவர் இயற்றியதே. தருமைக்குத் திரும்பிவந்து ஞானாசிரியரிடம் ஞானோபதேசம் பெற்று, 'பண்டார மும்மணிக்கோவை' என்ற நூலைப் பாடினர். பின்னர் காசியை யடைந்து இந்துஸ்தானி மொழியைக் கற்று டில்லி பாதுஷாவின் பேரன்பிற்குப் பாத்திரரானார். பாதுஷாவின் ஆதரவினால் மறைந்திருந்த விசுவலிங்கப் பெருமானை வெளிப்படுத்திக் கோயில் எடுப்பித்து பூசை முதலியவற்றிற்கு ஏற்பாடுகள் செய்தார். 'சகலகலாவல்லி மாலை', 'காசித் துண்டி விநாயகர் பதிகம்,' 'காசிக்கலம்பகம்' என்ற நூல்களை இயற்றியருளினார். அவர் தங்கி யிருந்த மடத்திற்குக் குமாரசாமி மடம் என்று பெயர். விசுவநாதர் கோயிலையும், மடத்தையும் காசியில் கங்கைக் கரையில் கண்ட குமரகுருபர அடிகளாரின் பெருமையை அழகுபெற அமைத்துக் காட்டுகிறது இக்கட்டுரை]

'கங்கைக்கு நிகரான நதியும் இல்லை; காசிக்கு நிகரான பதியும் இல்லை' என்பது இந்துக்கள் கொள்கை. தொன்று தொட்டு, பாரத நாட்டு மன்னரும் அறிஞரும் கங்கை யாற்றையும் காசிமா நகரையும் வணங்கிப் போற்றி வாசி பெற்றுள்ளார்கள்.

முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே தமிழ்நாட்டில் தோன்றிய முனிவர் ஒருவர் காசியம்பதியைக் காண ஆசைப்பட்டார்; காடும் மலையும் கடந்து அப்பதியை அடைந்தார். கங்கைக் கரையிலே நின்று பொங்கிப் பரந்து சென்ற பெரு வெள்ளத்தை நோக்கினார். அவர் உள்ளத்தில் இன்ப வெள்ளம் பொங்கிற்று.

"எங்கும் புகழ்பெற்ற கங்கைமா நதியே! காசி நகரில் உன்னைக் கண்டு வணங்கும் ஆசையால் எத்தனையோ காத வழி நடந்தேன்; கடுந்துயர் உழந்தேன். ஆயினும்

இங்கு வந்து சேர்ந்தவுடன் நான் பட்ட பாடெல்லாம் பறந்தோடி மறைந்தது; தாய் முகம் கண்ட சேய் போல் மனம் தழைத்தேன்.

"கருணை வடிவாய திருநதியே! பாரத நாடு செய்த பெருந் தவத்தின் பயனாக இமய மலையிலே பிறந்தாய்! விண்ணுக் கடங்காமல், இமய வெற்புக்கு அடங்காமல் எழுந்த உன் வெள்ளத்தைப் பேணி அணைத்துத் தன் வேணியில் அமைத்தான் என்னையாளுடைய ஈசன்.

"புனிதர் போற்றும் பெருநதியே! உன் புண்ணியத் துறைகளில் அமர்ந்து அருந் தவம் முயன்று இன்பப் பேறு பெற்றவர் எண்ணிறந்தவர். மாதவத்தின் ஆற்றலால் விதியையும் வென்று உயர்ந்த மார்க்கண்டனுக்கு அருள் புரிந்த மணி கர்ணிகைத் துறையை இன்று கண்களிப்பக் கண்டேன்; மனம் குளிர்ந்து வணங்கினேன்.

"கூற்றம் குதித்தலும் கைகூடும், நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு"

என்ற அருமைத் திருக்குறளில் மாதவ முனிவனாகிய மார்க்கண்டனை அன்றோ மனத்திற் கொண்டு பாடினார் தமிழ் மறை யருளிய திருவள்ளுவர்?

"வித்தகர் போற்றும் விழுமிய நதியே! மன்னன் அரிச்சந்திரன காவல் புரிந்த மயானத்தைக் கண்டேன். மனம் உருகி நின்றேன். வாய்மை தவறாத அம் மன்னவன் கடுமையான சோதனையைத் தன் சாதனையால் வென்ற வரலாற்றை அறியாதார் பாரத நாட்டில் உளரோ? "பதி இழந்தேன், பாலனை இழந்தேன், நிதி இழந்தேன், இன்னும் எதை இழந்தாலும் சொன்ன சொல்லை இழக்க மாட்டேன்" என்று அவ்வாய்மையாளன் கூறிய கட்டுரையைக் கேளாத செவி என்ன செவியே!

"மாசகற்றும் காசிமாநகரே! உன் பெயர் வாசியை அறிந்து போற்றுகின்ற நாடுகளுள் தலை சிறந்தது எங்கள் தமிழ் நாடு. தென்காசி என்ற ஊரும், சிவகாசி என்ற ஊரும் தென்னாட்டிலே உண்டு. விசாலாட்சியின் அருள் இங்கு விளங்குதல் போலவே மீனாட்சியின் அருள் தமிழ் நாட்டில் உள்ள மதுரையில் விளங்குகின்றது. வாரணாசி என்று உன்னை அழைப்பதன் காரணத்தை இங்கு வந்த பின்னரே அறிந்தேன். கங்கையில் வந்து சேரும் வாரணை என்ற ஆற்றுக்கும் அசி என்ற ஆற்றுக்கும் இடையே முன்னாளில் அமைந்த காசி, வாரணாசி என்று பெயர் பெற்றது என்று அறிந்தோர் சொல்லக் கேட்டேன். வாரணாசி என்னும் பெயரே திரிந்து 'பானாரஸ்' ஆயிற்று என்று அன்னார் சொல்லியபொழுது சிறிது திகைத்தேன்; வடநாட்டார் நாவில் வகரம் திட்டவட்டமாக வழங்குவதில்லை என்பதை வழி நடந்து வரும்போது ஒருவாறு உணர்ந்தேன். கன்னட நாட்டில் வசவன் பசவன் ஆகின்றான். வங்க நாட்டில் வங்காளம் பெங்கால் ஆகின்றது. அந்த முறையில் வாரணாசி என்ற சொல் பாரணாசியாக மருவி பனாரஸ் எனச் சிதைந்தது என்பதை அறிந்துகொண்டேன். எனினும் பழந்தமிழ்க் கவிதையில் வாரணாசி என்ற பெயர் அழகாக வழங்குவதறிந்து அகமகிழ்கின்றேன்.

"பிறவிப் பிணிதீர்க்கும் பெரு நகரே! தென்னாட்டு அறவோரும், அறிஞரும் உன்னை நாடி வருகின்றார்கள். பலநாள் இங்கே தங்கிப் புண்ணியத் துறைகளில் நீராடி அகிலேசரை வணங்க ஆசைப்படுகின்றார்கள். ஆயினும் கடும்பனியால் நலிந்து கடு வெயிலால் உலர்ந்து அன்னார் வாடி வருந்துகிறார்களே! அவர்கள் தங்குவதற்கு இடமும் இல்லை; மடமும் இல்லை. வடநாடு முழுவதும் ஒரு குடைக்கீழ் ஆளுகின்ற மகம்மதிய மன்னர்க்கு இவர்கள் படும்பாடு தெரியுமோ? தெரியாதோ? அம்மன்னனிடம் சென்று இக் குறையை முறையிடக் கருதியுள்ளேன். தமியேன் வாசி பெறுதற்கு நீ வரம் தரல்வேண்டும்" என்று கைகூப்பித் தொழுது விடை பெற்றார்.

மெய் வருத்தம் பாராது, பசி நோக்காது, கண் துஞ்சாது முனிவர் மன்னர் மொழியை மாசறக் கற்றார். அம்மொழியைச் செம்மையாகப் பேசுதற்கேற்ற நாவன்மை பெறுமாறு சகல கலாவல்லியாகிய கலைமகளின் அருளை நாடினார்.

"மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னரும் என்
பண்கண் டளவில் பணியச்செய்
வாய், படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்
டேனும் விளம்பில் உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ
சகல கலா வல்லியே"

என்று பாமாலை அணிந்து போற்றினர்.

நாமகளின் அருளை முன்னிட்டு நாளும் மன்னனிடம் சென்றார். செவ்வி பார்த்து அவன் முன்னே போந்து செம்மையான சொற்களால் தென்னாட்டார் படும் தொல்லைகளை எடுத்துரைத்தார். முனிவர் பேசிய தெள்ளிய மொழிகள் மன்னன் உள்ளத்தைக் கவர்ந்தன. அவர் விரும்பியவாறே காசிமா நகரில் உள்ள கேதார கட்டத்தில் மடம் கட்டிக்கொள்ள இடமளித்தான் மன்னன். அங்கு முனிவர் முயற்சியால் எழுந்த மடம் குமாரசாமி மடம் என்று பெயர்பெற்றது.

அத்திரு மடத்தில் தமிழ் மணம் கமழ்ந்தது; தெய்வ நலம் திகழ்ந்தது. வட நாட்டு மொழியின் வாயிலாகத் தென்னாட்டுப் பண்பாட்டையும் பக்திப் பாடல்களின் சுவையையும் விரித்துரைத்தார் முனிவர். இவர் "சில சமயங்களில் கம்பராமாயணப் பிரசங்கமும் செய்ததுண்டு. சிறந்த இராம பக்தராகிய துளசிதாசர் அந்தப் பிரசங்கங்களைக் கேட்டு உவந்தனர் என்றும், கம்பராமாயணத்தில் உள்ள கருத்துக்களைத் தாம் இந்துஸ்தானியில் இயற்றிய இராமாயணத்தில் அமைத்துக்கொண்டனர் என்றும் கூறுவர்." *

குமரகுருபர முனிவர் என்று தமிழ்நாடு போற்றும் இப்பெரியார் நிறுவிய திருமடம் இன்றும் காசியம்பதியில் காட்சி தருகின்றது. அங்கிருந்து அவர் தொடுத்த காசிக் கலம்பகம் என்னும் பாமாலையில் தெய்வ மணம் கமழ்கின்றது.

"பாவலரும் நாவலரும் பண்மலரக் கண்மலரும்
காவலரும் ஏடவிழ்க்கும் காசியே"

என்று முனிவருடன் சேர்ந்து நாமும் திசை நோக்கித் தொழுவோம்!

---

* குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் டாக்டர் உ. வே. சாமிநாதையர். பக்கம் 29.

## ஸ்ரீ சதுரங்க வல்லபநாத சுவாமி தேவஸ்தானம்

### பூவானூர்-மன்னார்குடி தாலூகா-தஞ்சைமாவட்டம் திருப்பூவானூரில் வார வழிபாடு

விளம்பி ஆண்டு கார்த்திகைத் திங்கள் அறுபத்திமூன்றும் நாள் (8—12—58) சோமவாரம், நான்காம் சோமவாரம், பிரதோஷம் கூடிய நன்னாளிலே மாலை 7-மணிக்கு ஆலய தர்மகர்த்தர் திரு N. சிதம்பர முதலியார் அவர்கள் தலைமையில் வார வழிபாட்டு விழா தொடங்கப்பெற்றது. அவ்வமயம் பூவனூர் மெய்யன்பர்களும் தொடக்கப்பள்ளி ஆசிரியர்களும் மாணவர்களும் அருகாமையிலுள்ள நீடாமங்கலம் ஸ்ரீ சந்தான ராமசுவாமி வகையரு தேவஸ்தானம் நிர்வாகி திரு. L. வெங்கடராமன் தமது தேவார சிஷ்யர்களுடனும் கலந்துகொண்டு சிறப்பித்தனர். ஆலய ஓதுவார் திரு S. சோமசுந்திர தேசிகர் தேவாரம் பாடினர்.

வழிபாடு, விநாயகர், சன்னதியில் ஆரம்பிக்கப்பட்டு ஸ்ரீ சாமுண்டீஸ்வரி சன்னிதியில் முடிவுபெற்று குழுமியிருந்த அனைவருக்கும் பெருமாளின் பிரசாதம் வழங்கப்பட்டு கூட்டம் இனிது முடிந்தது.

# திருநெல்வேலி



காந்திமதியம்மை

மருந்தவை மந்திர மறுமைநன்
நெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ்சமே

பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலி
யுறைசெல்வர் தாமே.

வெடிதரு தலையினர் வேனல்வெள்
ளேற்றினர் விரிசடையர்
பொடியணி மார்பினர் புலியதள்
ஆடையர் பொங்கரவர்
வடிவுடை மங்கையோர் பங்கினர்
மாதரை மையல்செய்வர்
செடிபடு பொழிலணி திருநெல்வேலி
யுறைசெல்வர் தாமே.

—திருஞான சம்பந்தர்

வற்றாதவளங் கொழிக்கும் தாமிரபரணி என வழங்கும் தண்பொருநை ஆற்றின் பாங்கர் அமைந்துள்ளது திருநெல்வேலித் திருநகர். பாண்டி நாட்டில் பாடல்பெற்ற பதினான்கு திருப்பதிகளில் ஒன்று. 'திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி', 'ஈண்டுமா மாடங்கள் மாளிகை மீதெழு கொடிமதியம் தீண்டிவந்துலவிய திருநெல்வேலி', 'தேனில் வண்டமர் பொழில் திருநெல்வேலி', 'திங்கள்நாள் விழமல்கு திருநெல்வேலி' என்றும் பலவாறாகத் திருஞான சம்பந்தர் தம் தேவாரப் பதிகத்தில் ஓதியுள்ளார். இத் தலத்துக்கு வேணுவனம், நெல்வேலி, நெல்லூர், சாலிவேலி, சாலிவாடி, சாலிநகர், பிரமவிருத்தபுரம், தாருகாவனம் முதலிய பெயர்கள் உண்டு. ஆண்டவன் தாண்டவம் செய்யும் அம்பலங்கள் ஐந்தனுள் ஒன்றாகிய தாமிர சபை இங்கு இருத்தலால் செப்பறை என்ற பேரும் இப்பதிக் குண்டு. ஆற்றுவெள்ளச் சேதமின்றிச் சிவபெருமான் நிவேதனத்துக்குச் சேமிக்கப்பெற்ற நெற்களஞ்சியத்தை வேலிகட்டிக் காத்தமையால் நெல்வேலி என்ற



திருநெல்வேலி தாமிரசபை

பெயர் வந்தது, வேதசன்மன் என்னும் அந்தணன் நைவேத்தியத்துக்காக உலர்த்தி வைத்திருந்த நெல்லை வெள்ளமடித்துப் போகாவண்ணம் சிவபெருமான் வேலிகட்டிக் காத்தருளினபடியால் திருநெல்வேலி என்றபெயர் உண்டாயிற்றென்று தலபுராணம் கூறுகிறது. அழகிய நெல்வயல்கள் நகரைச் சூழ்ந்து வேலி போல் விளங்குவதால் நெல்வேலி என்றபேர் வந்ததாகவும் கொள்ளலாம் போலும். கோயில் கல்வெட்டுக்களில் இத்தலம் கீழ்வேம்பு நாட்டுக் குலசேகர சதுர்வேதிமங்கலம் என்று கூறப்படுகிறது.

இப்பதியில் கோயில் கொண்டிருக்கும் இறைவன் திருநாமங்கள் நெல்லையப்பர், வேணுவன நாதர், வேய்முத்தநாதர், நெல்வேலிநாதர், சாலிவாடீசர் என்பன. இறைவன் மூங்கிலிற் றோன்றிய காரணத்தால் 'வேய்முத்தநாதர்' என்ற திருப்பெயர் உண்டாயிற் றென்பதை, "பொருநைத் துறை வாய்ப் பிறவாக் கடவுள் வேய் வயிற்றிற் பிறந்த தொன்னகர்" என்று திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. காந்திமதியம்மை, வடிவுடையம்மை என்பன இறைவியின் திருப்பெயர்கள். கல்வெட்டுக்களில் இறைவன் பெயர் திருநெல்வேலி உடையார் அல்லது உடைய நாயனர் என்றும், தேவியின் நாமம் திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார் என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது. திருநெல்வேலியுறை செல்வர், வடிவுடை மங்கையோர் பங்கினர் என்று சம்பந்தர் தேவாரம் கூறுகிறது.

நெல்லையப்பருக்கும், காந்திமதி யம்மைக்கும் தனித்தனிக் கோயில்கள் உள்ளன. அம்பிகை கோயில் கோபுரம் 1626-ல் கட்டப்பட்டது. முதலில் அம்மன் அம்பலம் இருக்கிறது. பின்னர் ஊஞ்சல் மண்டபம் காணப்படும். அதிலுள்ள 96 தூண்கள் 96 தத்துவங்களையும் விளக்கிக் காட்டுவனபோல் அமைந்துள்ளன. திருக்கலியாண மண்டபம் அல்லது ஆயிரக்கால் மண்டபம் 520 அடி நீளம் 63 அடி அகலம் உள்ளது. இங்கு ஐப்பசியில் திருமண விழாவும் பங்குனி உத்திரச் செங்கோல் விழாவும் நடைபெறும். இன்னும் வசந்தமண்டபம், சங்கிலிமண்டபம் இவை காணத்தக்கவை. இக்கோயிலுக்குள்ளே பொற்றாமரை, கருமாறித் தீர்த்தங்கள் உள்ளன. அம்மை காந்திமதியின் திருவுருவம் அழகும் அருளும் நிரம்பியது. அழகிய சொக்கநாதப் புலவர் இயற்றிய காந்திமதியம்மைப் பிள்ளைத் தமிழிலுள்ள கீழ்வரும் பாடல் படித்துப் படித்து இன்புறும் பான்மையுடையது:—

வாரா திருந்தால் இனிநான்உன்
வடிவேல் விழிக்கு மைஎழுதேன்
மதிவாள் நுதற்குத் திலகம்இடேன்
மணியால் இழைத்த பணிபுனையேன்
பேரா தரத்தி னெடுபழக்கம்
பேசேன் சிறிது முகம்பாரேன்
பிறங்கு முலைப்பால் இனிதூட்டேன்
பிரியமுடன்ஒக் கலையில் வைத்துத்

தேரார் வீதி வளங்காட்டேன்
செய்ய கனிவாய் முத்தம்இடேன்
திகழும் மணித்தொட் டிலில் ஏற்றித்
திருக்கண் வளரச் சீராட்டேன்
தாரார் இமவான் தடமார்பில்
தவழுங் குழந்தாய் வருகவே
சாலிப் பதிவாழ் காந்திமதித்
தாயே வருக வருகவே.

சுவாமி நெல்லையப்பர் கோயிலில் முதலில் காணப்படுவது நந்தி - மாக்காளை எழில் மிக்கது. தெற்குப் பிரகாரத்தில் ஆறுமுக நயினர் கோயில் அமைந்துள்ளது. ஒரே கல்லில் செய்யப்பட்ட மயில் வாகனத்தில் அறுமுகப் பெருமான் வள்ளி தெய்வானையுடன் அமர்ந்திருக்கும் காட்சிமாட்சி மிக்கது. சோமவார மண்டபம், நவக்கிரக மண்டபம், சர்வ நல் வாத்திய மண்டபம், இவைகளும் பார்க்கத் தக்கன. மணிமண்டபம் அவசியம் காணத் தக்கது. ஒரே பெரிய கல்லில் மத்தியில் பெரிதாக ஒன்றும், சுற்றிலும் உருவிலும் உயரத்திலும் பேதமுள்ள தூண்களாகவும் அமைக்கப்பட்ட இரண்டு தூண்கள் உள்ளன. ஒவ்வொரு சிறு தூணையும் ஒலிப்பித்தால் வெவ்வேறு ஓசைகள் எழுகின்றன. இங்கிருந்து மகா மண்டபம் வழியாகப்போய் வேணுவன நாதரை வழிபடலாம். மூங்கிலில் தோன்றி முழுது கண்ட ராமக்கோனுக்கு முத்தியளித்தவர் இவரே. வேண்ட வளர்ந்த மகாலிங்கம் என்றும் அழைக்கப்படுவர். இந்த சந்நிதிக்கு வடபால் நெல்லைக் கோவிந்தர் சயனத் திருக்கோலத்தில் சேவை சாதிக்கிருர். தெற்குப் பிரகாரத்தில், இராவணன் தாங்கி நிற்கும் திருக்கயிலாயக் காட்சியும், மேல்புறப் பிரகாரத்திலுள்ள தாம்பிர சபையும் பார்க்க வேண்டியவை. சைலப்பநாதர் சந்நிதியும் இருக்கிறது. முகம்மதிய தலைவன் ஒருவன் தன் மனைவி நோய் நீங்கவேண்டி அதுதீரப் பெற்றமையால் ஒரு லிங்கம் பிரதிஷ்டை செய்வித்தான். அநவரதநாதர் என்று அதற்குப்பெயர். அன்வர் உடின்கான் பெயரிட்ட இறைவன் பின்னர் அனவரதநாதன் என்ருயிற்றென்றும் கூறுவர்.

இத்தலத்தில் 32 தீர்த்தங்கள் உள்ளன. அவைகளில் ஒன்பது முக்கியமானவை. பொற்ருமரை, கருமாறி, வயிரவ தீர்த்தம், சர்வதீர்த்தம் இவை கோயிலுக்குள்ளே உள்ளன. கம்பை, தெப்பக்குளம், சிந்துபூந்துறை துர்க்கை தீர்த்தம், குறுக்குத்துறை இவை கோயிலுக்கு வெளியேயிருக்கின்றன. இத் தல விருட்சம் மூங்கில். ஆனி மாதத்தில் பெரிய திருவிழா நடைபெறுகிறது. தாமிர பரணி ஆற்றின் நடுவில் குறுக்குத் துறை, முருகன் கோயில் சிறப்புடையது. "கந்தமார் தழிபொழில் மந்திகள் பாய்தர மதுத்திவலை சிந்துபூந்துறை கமழ் திருநெல்வேலி" என்ற தேவாரப் பாடலை ஒட்டி ஆற்றங்கரையிலுள்ள ஊர்ப்பகுதி சிந்துபூந்துறை என்று இன்றும் வழங்கப்பெறுகிறது.

சுவாமி அம்மன் இரண்டு கோயில்களும் முதலில் முழுது கண்ட ராமபாண்டியனுலும், பின்னர் கி. பி. ஏழாம் நூற்ருண்டில் நின்ற சீர் நெடுமாறனுலும் கட்டப்பட்டனவாம்.

"நீதி தழைத் தோங்குதிரு நெல்வேலி நாதர்முன்பு
நிலைபெற் ருேங்கச்
சோதிமணி மண்டபத்தைத் தூயமக மேருவெனத்
துலங்கச் செய்தே
வேதிகை பொற்படி தூண்கள் விளங்கு
வாயிலணி விரவிச்சூழ்ந்த
கோதில்மணிக் கோபுரமும் சேண்மதிலும்
வெள்விடையும் குலவச் செய்தான்"

என்று தலபுராணம் நெடுமாறனுர் திருப்பணிகளைச் சொல்லுகிறது. அதற்குப் பிறகு வடமலையப்ப பிள்ளையன முதலிய பிள்ளைமார்கள் பலர் அரிய திருப்பணிகளைச் செய்திருக்கின்றனர்.

கோயிலில் பல கல் வெட்டுக்கள் உள்ளன. மிகவும் பழமையானவை கி. பி. 950-ல் இருந்த வீரபாண்டியன் காலத்தவை. முதல் இராஜராஜேந்திரன் (கி. பி. 1011-44), முதல் குலோத்துங்க சோழன் (கி. பி. 1074-1118), முதல் மாறவர்ம சுந்தரபாண்டியன் (கி. பி. 1216-35), இரண்டாம் மாறவர்ம சுந்தர பாண்டியன் (கி. பி. 1238-51), முதலாவது மாறவர்ம குலசேகரன் (கி பி. 1268-1308), இரண்டாம் மாறவர்ம குலசேகர தேவன் (கி. பி. 1314-21) இவர்களுடைய கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவைகளில் பூசை, நந்தவனம், விளக்கு, வழிபாடு முதலியவற்

நீற்காக நிலம், பொருள் இவைகளை வழங்கியிருப்பதைக் கூறப்பட்டிருக்கின்றது.

திருநெல்வேலித் தலத்தைப் பற்றிய நூல்கள் பல உள்ளன. திருஞான சம்பந்தர் 11 பாடல்களுள்ள ஒரு பதிகம பாடியுள்ளார். சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் "நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்" என்று குறிப்பிடுகிருர். திருத்தொண்டர் திருவந்தாதியிலும், சேக்கிழார் பெரியபுராணத்தில் நின்றசீர் நெடுமாறர், திருநாவுக்கரசர் இவர்களின் புராணங்களிலும் திருநெல்வேலியைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. திருவிளையாடற் புராணம் அருச்சனைப் படலத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. சுந்தரம் பிள்ளை இயற்றிய மனோன்மணீயம் என்ற நாடக நூலில் 'இந்நதி வலம்வர இருந்த நந்தொன்னகர் பொன்னகர் தன்னிலும் பொலிவுறல் கண்டனை" என்று போற்றிப் புகழ்கிருர். அழகிய சொக்கநாதப் புலவர் பாடிய 'காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்' பக்திச் சுவை நிரம்பியது. அவரே 'காந்திமதியம்மை கலித்துறை யந்தாதி'யும் யாத்துள்ளார். இன்னும் மு. ரா. அருணசலக் கவிராயர் இயற்றிய வேணுவன புராணம், நெல்லையப்ப பிள்ளை பாடிய திருநெல்வேலித் தலபுராணம், வேம்பத்தூர் அம்பிகாபதி அய்யர் செய்த நெல்லை வருக்கக் கோவை, காந்திமதிநாதன் செட்டியார் இயற்றிய நெல்லைச் சிந்து, முருகேச முதலியாரின் திருநெல்லைச் சேத்திரக் கும்மி, சிதம்பரநாதக் கவிராயர் பாடிய திருநெல்லை மும்மணிக்கோவை, தையல்பாகம் பிள்ளை எழுதிய நெல்லை யந்தாதி, காந்திமதியம்மன் பதிகம் முதலியவை இத்தலத்தைப் பற்றியனவே.

அஞ்சக் கரமெனும் ஆயுதத்
தாலக மாவயலிற்
பஞ்சப் புலன்களை வெட்டிஅன்
பாமுரம் பாங்கமைத்து
விஞ்சத் திருத்திநெல் வேலியில்
மேவிய வித்தகனுர்
கஞ்சத் திருப்பத நாற்றினை
நாட்டிக் கடிதுய்மினே.

—நெல்லையந்தாதி.

ஆணிக் கனகத் தரும்பொ
ருளேயென தாவியுடல்
பேணிக் கருதும் பொருளெனு
மூன்றும் பிரபலமாய்க்
காணிக்கை யாகத்தந் தேனெனை
யாளக் கடனுனக்கு
மாணிக்க மேவளம் வாய்நெல்லைக்
காந்தி மதியமையே.

—காந்திமதியம்மன் பதிகம்.

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

# அறிக்கை

சென்னை, ஸ்ரீ கந்தகோட்டம், ஸ்ரீ கந்தஸ்வாமி கோயில் வசந்தமண்டபத்தில் பிரதி செவ்வாய், வெள்ளி, ஞாயிறு கிழமைகளில் மாலை 6-30 மணிமுதல் 8 மணி வரையில், சைதை—தேவாரம்—ரு. பாலசுந்தரம அவர்களால், தேவாரம், திருப்புகழ் பாராயணம் தொடர்ச்சியாக 14-9-58உ முதல் நடைபெற்று வருகிறது.

சென்னை, ஸ்ரீ கந்தகோட்டம், கந்தஸ்வாமி கோயிலென வழங்கும், ஸ்ரீ முத்துக் குமார ஸ்வாமி தேவஸ்தானத்தின் விளம்பி ஆண்டு, தை திங்களில் நடைபெறப் போகும் பிரம்ம உத்ஸவத்தில், ஸ்ரீ கந்தஸ்வாமி கோயில் வசந்தமண்டபம் டிரஸ்டைச் சார்ந்த உபயமான 13வது நாளாகிய 27-1-1959 செவ்வாய்க்கிழமை மாலை 6 மணிக்கு தேவேந்திர போகம், மங்களகிரிவிமான உத்ஸவமும், 14வது நாளாகிய 28-1-1959 புதன்கிழமை மாலை சுமார் 7 மணிக்கு தெய்வநாயகியார் திருமணமும் ஆனபிறகு வெள்ளையானை வாகனத்தில் சுவாமி புறப்படுதல் வெகு சிறப்பாக நடைபெறும்.



# திருக்கார்த்திகை



இடர்கெடுத் தென்னை யாண்டுகொண் டென்னுள்
இருட்பிழம் பறவெறிந் தெழுந்த
சுடர்மணி விளக்கி னுள்ளொளி விளங்கும்
தூயநற் சோதியுட் சோதீ
அடல்விடைப் பாகா அம்பலக் கூத்தா
அயனெடு மாலறி யாமைப்
படரொளி பரப்பிப் பரந்துநின் றுயைத்
தொண்டனேன் பணியுமா பணியே

—திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா

தத்துவங்கடந்த தனிப்பரம்பொருளான சிவபெருமானை அறவே மறந்து அரியும் அயனும் தாங்களே கடவுளென வாதிட்டுக் கொண்டனர். ஆதியும் அந்தமும் இல்லா அமலன் ஒரே அனல் பிழம்பாய் நின்முன். மாலும் பிரமனும் அவன் அடிமுடிகளைத் தேடிக்காண அரிதின் முயன்றனர்; சிவபரஞ் சுடரின் அழற்சோதி வடிவத்தைக் காண முடியாது வருந்தினர். பின்னர் அவர்கள் முனைப்பை யொழித்து பரமனைப் பணிய இறைவன் இருவருக்கும் தன் திருவுருக் காட்சி நல்கினன். இதைப்பற்றி இருக்கு வேதம், பாஸ்கர சங்கிதை, சரப உபநிடதம முதலிய வடமொழி நூல்களில் கூறப்பட்டிருக்கிறது. வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் "ஒரேனந்தனைத் தேட ஒளித்தருளும் இருபாதத்தொருவன்" என்று கூறி யிருக்கிறுர். திருவாசகத்தில் "எங்கள் பெருமான் பாதமிரண்டும் வினவில் பாதாளமேழினுக் கப்பால் சோதி மணிமுடி சொல்லில் சொல்லிறந்து நின்ற தொன்மை" என்று மணிவாசகர் அருளுகிருர். இன்னும் அவரே,

"பிரம னரியென் றிருவருந்தம் பேதமையால்
பரம மியாம்பர மென்றவர்கள் பதைப்பொடுங்க
அரனு ரழலுருவா யங்கே யளவிறந்து
பரமாகி நின்றவா தோனேக்க மாடாமோ"

என்று அடிமுடி தேடிய உண்மையைக் கூறுகிருர்.

பஞ்ச பூதங்களில் அக்கினியே சிறந்தது. இறைவன் நிலம், நீர், தீ, வளி, வான், சூரியன், சந்திரன், ஆன்மா என்ற அட்ட மூர்த்தங்களாய் விளங்குகிருன். இவ்வெட்டில் அக்கினி, நான்கு மூர்த்தங்கள்; அவை தீ, சூரியன், சந்திரன், ஆன்மா என்பன. வேதாகமபுராணங்கள் இதனலேயே இறைவனை ருத்ராக்நி, சிவசோதி, பரஞ்சுடர் என்று அழைக்கின்றன.

'எரியலாலுருவமில்லை', 'தழலுருவாம் சங்கரன்,' 'பாசுபதா பரஞ்சுடரே' என்று தேவாரத்திலும், 'சோதியாய்த் தோன்றும் உருவமே' என்று திருவாசகத்திலும், 'சோதியுட் சோதி', 'படரொளி' என்று திருவிசைப் பாவிலும், 'அலகில் சோதியன்' என்று பெரிய புராணத்திலும், 'சோதிப் பிழம்பதோர் மேனி' எனக்கந்த புராணத்திலும் வருவது காண்க. இதனுல் சிவபெருமான் அக்கினி வண்ணன் என்பதுபோதருகின்றது. பூதாக்கினிக்கும், ஞானக்கினியான சிவபரஞ்சுடருக்கும் பல இயைபுகள் உள்ளன.

தீ தன்னை யடைந்தவர் அழுக்கைப் போக்கித் தன் மயமாக்கும்; இறைவன் ஆன்மாக்களின் ஆணவ இருளைக் கெடுத்துத் தன் மயமாக்குவன் அக்கினி அருவமாகவும் உருவமாகவும் விளங்குவதுபோல் அரனும் அருவமாகவும் உருவமாகவும் மிளிர்கின்ருன். நெருப்பு ஒன்றைப்பற்றித் தோற்றஞ்செய்வது போல் சிவபெருமான் சிவஞானிகளின் அறிவினிடம் தன் விளக்கத்தைத் தோற்றச் செய்கிருன். அக்கினியொன்றே பல தீபங்களாக விளங்குவதுபோல் சிவமொன்றே பல மூர்த்தங்களாக விளங்கும்.

சிவசோதியை யோக வழியால் காண முடியாத மக்கள் சரியைத் தொண்டுகளால் காண முயல வேண்டும் என்று சிவாகமங்கள் கூறுகின்றன. சரியைத் தொண்டுகளில் ஒன்று திருவிளக்கிடல். சிவஞான சித்தியாரில் 'தீதில் திருவிளக்கிட்டு' என்றும், அப்பர் தேவாரத்தில் 'விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்க்நெறி ஞானமாகும்' என்றும் கூறப்பட்டிருக்கிறது. நமிநந்தியடிகள், கலிய நாயனர், கணம்புல்ல நாயனர் என்ற அடியவர்கள் திருவிளக்குத் திருத்தொண்டால்

முத்திப்பேறு பெற்றவர்கள். முற்பிறவியில் எலியாக இருந்து சிவாலயத் திருவிளக்கைத் தூண்டிய காரணத்தால் மறுபிறவியில் மாவலிச்சக்கரவர்த்தியாக விளங்கினன் என்று புராணங்கள் கூறும். அப்பர்,

'நிறைமறைக் காடுதன்னி
நீண்டெரி தீபந்தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச்
சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும்
நீண்டவா னுலகமெல்லாம்
குறைவறக் கொடுப்பர் போலும்
குறுக்கைவி ரட்டனாரே'

என்று இதைச் சிறப்பித்துள்ளார்.

திருமாலும் நான்முகனும் யாம் பிரமம் என்று செருக்கித் தருக்கித்து நின்றனர். இவர் அகந்தையை யொழிக்க ஆண்டவன் அழற் சோதிமலையாய் நீண்டு நின்றனன். அருணாசலம், சோணகிரி என்றால் சிவப்பு மலையென்று பொருள். மால் அயன் இருவரும் அடிமுடி தேடிக் காணமுடியாது தயங்கினர். இறைவன் அவர்களுக்கு இரங்கி இலிங்கோற்பவ மூர்த்தியாய் காட்சியளித்து, "இது போன்றதோர் சோதி ஆண்டுதோறும் கார்த்திகைத் திங்களிலும் காட்டுவோம்" என்று அருள் செய்தான். இதன்படியே கார்த்திகை மாதக் கார்த்திகையன்று திருவண்ணாமலையில் திருக்கார்த்திகைத் தீப விழா கொண்டாடப் பெறுகிறது.

திருவண்ணாமலையிலுள்ள மலை சுமார் 2600 அடி உயரமுள்ளது. திருக்கார்த்திகையன்று இம்மலை உச்சியில்தான் தீபம் ஏற்றுவார்கள். இந்த தீபத்தைப்போல் மிகப் பெரிய தீபம் நம்நாட்டில் வேறெங்கும் ஏற்றுவதில்லை. மலைமேல் பெரிய செப்புக் கொப்பறை வைத்து அதில் நெய், கற்பூரம், துணி இவைகளைப் பெய்து மாலை 6 மணிக்கு தீபத்தை ஏற்றுவார்கள். ஏராளமான மக்கள்கூடி இக்காட்சியைக் கண்டு பேரானந்தம் அடைவர். தீபம் சில நாட்கள் வரையில் எரிந்துகொண்டிருக்கும். பல மைல்கள் தூரத்துக்கு இவ்வொளி தெரியும். தென்னாட்டிலுள்ள எல்லா ஆலயங்களிலும் கார்த்திகைத் தீபவிழா நடைபெறும். மலைமேல் உள்ள கோயில்களில் சிறிய அளவில் தீபம் ஏற்றுகின்றனர். மற்றக் கோயில்களில் பனையோலைகளைக் கூண்டுபோல் ஆலய முன்னால் கட்டி எரிய விடுகின்றனர். எல்லோரும் வீடுகளில் வரிசை வரிசையாக விளக்குகளை ஏற்றி வைத்து அழகு செய்கின்றனர். இவ்விழா, சிவராத்திரி, வைகுண்ட ஏகாதசி, கந்தசஷ்டி முதலியவை போன்று விரதத்தோடு நம்நாடு முழுதும் கொண்டாடப்பெறும் ஒரு பெருவிழா.

நம்நாட்டில் பண்டைக் காலந்தொட்டு கார்த்திகைத் தீபவிழா நடந்து வந்திருப்பதற்குப் பல இலக்கியச் சான்றுகள் உள்ளன. தொல்காப்பியத்தில் 'வேலினோக்கிய விளக்கு நிலையும்' என்பதற்கு 'இது கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாளில் ஏற்றிய விளக்கு' என்று நச்சினார்க்கினியர் உரை கூறியிருக்கின்றனர். சமண நூலான சீவக சிந்தாமணியில் 'கார்த்திகை விளக்கிட்டன்ன' என்ற கூற்று வருகிறது; 'நலமிகு கார்த்திகை நாட்டவரிட்ட தலைநாள் விளக்கு' என்று கார்நாற்பதிலும், 'கார்த்திகைச் சாற்றிற் கழிவிளக்கு' என்று களவழி நாற்பதிலும் வருவது நோக்கத்தக்கது. சம்பந்தர் 'தையலார் கொண்டாடும் விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்' என்றும், அப்பர் 'தேச விளக்கெலாம் ஆனாய் நீயே' என்றும் கூறியிருக்கின்றனர். 'மலைவிளக்கு', 'குன்றின் மேலிட்ட தீபம்' இந்தப் பழமொழிகள் நம்நாட்டில் இவ்விழாவின் பழம் பெருமையை உணர்த்தி நிற்கின்றன. கார்த்திகை என்ற நட்சத்திரத்தின் பெயரே இம் மாதத்திற் கமைந்திருப்பது தனிச் சிறப்பைத் தருவது.

நினைக்க முத்திதரவல்ல திருவண்ணாமலையில் கார்த்திகைத் தீபவிழாக் காண வேண்டும்; முடியாதவர்கள் தங்கள் ஊர் ஆலயங்களில் சொக்கப்பனை கண்டு, வீட்டில் விளக்கேற்றி வைத்து, விதிப்படி விரதம் இருந்து இறைவன் திருவருளைப் பெறவேண்டும். நான் என்னும் முனைப்பு (ஆணவம்) அகன்றால் இறைவன் அருள்புரிவான என்பதும், அக இருளைப் போக்கி ஞானவொளியை அடைய நாம் முயலவேண்டும் என்பதும் திருக்கார்த்திகைத் தீபவிழா விளக்கிக் காட்டும் அடிப்படைத் தத்துவங்கள்.

"சோதி உணர்கின்ற வாழ்வு சுகமென்ற
சோகமது தந்து எனை யாள்வாய்"

—அருணகிரிநாதர்.



# வைகுண்ட ஏகாதசி





மார்கழி மாதம் தேவர்களுக்கு விடியற்கால நேரம். கார்த்திகை சுத்த ஏகாதசியில் சாதுர்மாஸ்ய சயநத்திலிருந்து விழித்தெழுந்த பெருமாளை மார்கழி மாத மான காலை நேரத்தில் வணங்க வேண்டியது. மார்கழி சுக்ல ஏகாதசியிலிருந்து 10 நாள் வேதங்களைச் சொல்லி பெருமாளுக்கு உத்ஸவம் செய்யவேண்டும் என்று ஆகமம் விதிக்கிறது. அதன்படி பகவத் ஸந்நிதி களில் ஏகாதசி முதலாக 10 நாள் வேதங் களைச் சொல்லும் உத்ஸவத்துக்கு வைகுண் டோத்ஸவம் என்றும் மோக்ஷோத்ஸவ மென்றும் பெயர்.

ஏகாதசியன்று காலை நேரத்தில் பெரு மாளை வடக்கு கோபுரவாசல் வழியாக பெரிய மண்டபத்துக்கு எழுந்தருளப்பண்ண வேண்டும். அப்போது தரிசனம் செய்வது பெரிய பாக்கியமாகும்.

சாஸ்திர விதியாக ஏற்பட்ட உத்ஸவம் நாடெங்கும் இப்படி நடந்து வருகையில், தமிழ் நாட்டில் ஆழ்வார்கள் அவதரித்து வேதங்களைத் தமிழில் பாடி எம்பெருமானைப் பல படியாக அனுபவித்தார்கள். அவர் களில் நம்மாழ்வார் பிரதானர். அவர் பாடின பிரபந்தங்கள் திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி; திருவாய்மொழி என்னும் நாலு. கடைசி பிரபந்தமான திரு வாய் மொழியின் கடைசி பதிகங்களில் ஆழ்வார் சாஸ்த்ர ரீதியாக அர்ச்சிராதி கதியில் சொல்லும்படி மண்ணுலகை விட்டு விண்ணுலகு செல்லும் கிரமம் காண்கிறது. தமிழ் வேதமாயுள்ள திருவாய்மொழியை வேதாத்யயநோத்ஸவமாயுள்ள மார்கழி ஏகாதசி உத்ஸவத்தில் வேதங்களொடுகூடப் பாடி, அதில் காண்கிறபடி ஆழ்வார் பரம பதத்தில் எம்பெருமானுடைய திருவடி களில் பிரவேசிக்கும் வைபவத்தை உலகத் தார்க்கு நடத்திக்காட்ட வேண்டுமென்று அரங்கநாதனை ப்ரார்த்தித்து உத்ஸவம் நடத்திவந்தார் திருமங்கையாழ்வார்.

பிறகு நாதமுனிகள் மற்றை ஆழ்வார் களின் பாடல்களையும் பெருமாளுக்குப் பாடி உத்ஸவம் நடத்துவதற்காக ஏகாதசிக்கு முன்பு 10 நாள் உத்ஸவம் உண்டாக்கினர். முதல் 10 நாள் திருமொழித் திருநாள் என்றும், பின் 10 நாள் திருவாய்மொழித் திருநாள் என்றும் பெயராயிற்று.

பாட்டுக்களை மட்டும் பாடி உத்ஸவம் நடக்கையில் மணவாளமாமுனிகள் பெரு மாளுக்கு நாலாயிரம் பாட்டுக்களின் வியாக் யானங்களை காலக்ஷேபமாக உபந்யஸித்ததி லிருந்து சில பாட்டுக்கு இடையில் வியாக்யா நத்தையும் சொல்லும் க்ரமம் உண்டா யிற்று.

**அர்ச்சிராதிகதி:** சேதநன் பகவதநு க்ரஹத்தால் முக்தனாகி பரமபதம் சேருவது அர்ச்சிராதிகதி என்றும், கர்மவசமாய் மீண்டும் பிறவிக்கடலில் உழலுவது தூமாதி கதி என்றும் பெயர். அர்ச்சிராதிகதிகளில் போகிறவனை அமாநவன் என்னும் திவ்விய புருஷன் மூடி எடுத்துக்கொண்டு விரஜா நதி யில் ஸ்நாநம் செய்விக்கிறான். அங்கே சேதநன் திவ்ய சரீரம் பெறுகிறான். அங்கே அவனை நித்யஸூரிகள் வேதங்களைச்சொல்லி வரவேற்று எம்பெருமானுடைய திருவடி களில் சேர்ப்பிக்கிறார்கள்.

வைகுண்ட ஏகாதசியன்று பெருமாள் எழுந்தருளும் துரை பிரதக்ஷிணம் பிரகிருதி

மண்டலமாகிறது. பரமபத வாசலுக்கு உள்புறம் வேத விண்ணப்பம் நடக்குமிடம் விரஜா நதியாகிறது. வேத விண்ணப்பம் நடப்பது நித்யஸூரிகளின் வரவேற்பு. பரமபத வாசல் திறந்தவுடன் பெருமாள் போர்வை களைந்து திருமேனி காட்டி மாலை சாத்திக் கொள்வது சேதநன் திவ்ய சரீரம் பெறுவதாகும். ஆயிரக்கால் மண்டபம் பரமபதமாகிறது. சேதநன் முக்தனாய் பரமபதம் போவதைப் பெருமாளே தன்னை முக்தனாக வைத்து அநுஹரித்துக்காட்டுவதாக நடக்கும் உத்ஸவம் இது.

வைகுண்ட ஏகாதசியன்று காலையில் பெருமாளை ஸேவிப்பது முக்த சேதநன் பிரகிருதி மண்டலமான மண்ணுலகை விட்டு திவ்யலோகம் சேரும் கிரமத்தை தரிசிக்கும் நமக்கும் அந்த பாக்யம் கிடைக்க வேண்டுமென்ற பிரார்த்தனையாகிறது.



திருமருகல் அம்மன்கோயில் முன்மண்டபத் திறப்புவிழா

# திருவாதிரை

நம் நாட்டில் ஒரு ஆண்டிலுள்ள பன்னிரண்டு மாதங்களிலும் திருவிழாக்கள் நடைபெறுகின்றன; அவைகளை யொட்டி விரதங்களையும் மக்கள் அனுஷ்டிக்கின்றனர். விழாக்களும் விரதங்களும் சிவன், திருமால், அம்பிகை, கணபதி, முருகன் இவைகளைக் குறித்தவை. மகாசிவராத்திரி, திருவாதிரை, திருக்கார்த்திகை, வைகுண்ட ஏகாதசி, நவராத்திரி விநாயக சதுர்த்தி, கந்த சஷ்டி இவைகள் வெகுவாகக் கொண்டாடப்படுபவை. அப்போது சிவ விஷ்ணு ஆலயங்கள் எல்லாவற்றிலும் பொதுவாகத் திருநாட்கள் நடைபெறும். சில கோயில்களில் அவை சிறப்பாக நிகழும். சிவராத்திரி-ஸ்ரீசைலம், திருக்காளத்தி, இராமேசுவரம் இந்த தலங்களிலும், திருவாதிரை-சிதம்பரம், மதுரை, திருவாலங்காடு இந்த பதிகளிலும், திருக்கார்த்திகை-திருவண்ணாமலையிலும், கந்தசஷ்டி-பழனி, திருச்செந்தூர், சிக்கல் முதலிய இடங்களிலும் சிறந்தமுறையில் நடைபெறும்.

அத்தகைய பெரு விழாக்களில் ஒன்று திருவாதிரை. நட்சத்திரங்கள் இருபத்தேழில் திரு என்ற அடைமொழியுடன் இரண்டு நட்சத்திரங்களே உள்ளன. அவை திருவாதிரை, திருவோணம் என்பன. திருவாதிரை சிவனுக்கு உகந்த நாள்; திருவோணம் திருமாலுக்குச் சிறந்த நாள். "மாதங்களுள் மார்கழி மாதமாக இருக்கிறேன்" என்று கீதையில் கண்ணன் கூறுகிறார். இந்த மாதமே தேவர்கள் நாளில் வைகறைப் போதாகக் கருதப்படுகிறது. இந்த மார்கழி மாதத்தில் பௌர்ணமியும் திருவாதிரை நட்சத்திரமும் கூடிய நாள் திருவாதிரைத் திருவிழாவிற்கு உரிய நாள். "இன்பமான மார்கழி மாதத்தில் திருவாதிரையில் தாண்டவமூர்த்தியை வழிபடுக" என்று காரணாகமம் கூறுகிறது. திருமுறைகளில் யாண்டும் ஆதிரையன் என்று சிவபெருமானைப்பற்றிச் சொல்லப்படுவதால் அவ்விறைவனுக்குத் திருவாதிரை சிறந்த நாள் என்று பெறப்படுகிறது. திருஞானசம்பந்தர் பூம்பாவைப் பதிகத்தில் "கார்தரு சோலைக்கபாலீச்சரம் அமர்ந்தான் ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்" என்று பாடியிருக்கிறார்.

திருவாதிரை விழா பொதுவாக விநாயகருக்கும், சிறப்பாக நடராஜப் பெருமானுக்கும் நடைபெறுகிறது. சிதம்பரத்தில் மார்கழித் திருவாதிரையன்று திருவிழா வெகு சிறப்பாக நடைபெறுகிறது. அத்திருநாளில் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூத்தப்பெருமானைக் கண்டு வழிபடுகின்றனர்.

இறைவன் உமையம்மை காணத் திருக்கூத்து இயற்றுங் காரணத்தால்தான் இவ்வண்டசராசரங்கள் இயங்கிக்கொண்டிருக்கின்றன. உலகில் அறிவுடைப் பொருள்கள் வினைப்போகம் துய்க்கின்றன; அவற்றிற்கு அறிவில்லாப் பொருள்கள் பயன்படுகின்றன. இதுவே எம்பெருமான் செய்யும் ஊனநாடகம். நிலையற்ற உலகின்பங்களினின்றும் நிலைத்த பேரின்பத்தைக் கொடுப்பது இறைவன் திருவடிச் சார்பென்று உயிர்கள் உணர்ந்து நிற்கும் தன்மையைக் கூட்டுவது ஞான நாடகம். இதை மணிவாசகப் பெருந்தகை, 'ஊனநாடகம் ஆடுவித்தவா உருகி நான் உனைப் பருக வைத்தவா, ஞானநாடகம் ஆடுவித்தவா நையவையகத்துடைய விச்சையே' என்று விளங்க உணரவைத்திருக்கிறார். 'இந்துவாழ் சடையான் ஆடுமானந்த வெல்லையில் தனிப் பெருங்கூத்து' என்றும், 'ஆதியும் முடிவுமில்லா அற்புதத் தனிக்கூத்து' என்றும் சேக்கிழார் பெரிய புராணத்தில் விதந்தோதுகிறார்.

தில்லைக் கூத்தன் திருநடனம், ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம்பெரும் தொழில்களைக் குறிக்கும். இதை,

**'தோற்றம் துடியதனில் தோயுந் திதியமைப்பில்**
**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்-ஊற்றமாய்**
**ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்முத்தி**
**நான்றமலர்ப் பதத்தே நாடு'**

என்னும் பாடலால் அறியலாம்,

கூத்தப்பிரானின் திருவுருவ அமைப்பானது சைவ சித்தாந்தக் கருத்துக்களைத் தன்னுள்ளே அடக்கி அவற்றின் அறிகுறியாக நிற்கின்றது என ஆன்றோர் கூறுவர். அப்பெருமானின் திருவுருவம் தூல, சூக்கும ஐந்தெழுத்துக்களை உணர்த்தி நிற்கும் பான்மையில் அமைந்திருக்கிறதென்றும் கூறுவர். தில்லைக் கூத்தனின் திருவுருவப் பேரழகைக் கண்டு களிபேருவகைகொண்ட அப்பரடிகள் 'மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்று கூறுகிறார். ஆதலின் மக்களாய்ப் பிறந்த பயன் எய்தவேண்டுபவர், உய்யுநெறி விழைபவர் ஆண்டவனின் தாண்டவத்தைக் காண்டல் அவசியம். அதுவும் மார்கழி மாதம் திருவாதிரையன்று பார்ப்பது மிகவும் சிறந்தது.

மார்கழி மாதத்தில் திருவாதிரையை இறுதி நாளாகக்கொண்டு ஆலயங்களில் திருவிழா நடைபெறுகின்றது. முதல் ஒன்பது நாட்களிலும் மாணிக்கவாசகருக்கு சிறப்புப் பூசனை செய்வித்து, திருவீதி எழுந்தருளச் செய்ய வேண்டியது முறை. கோயிலின் எட்டுத் திக்குகளிலும் திருவாசகத்திலுள்ள திருவெம்பாவை முதல் எட்டுப் பாடல்களையும் பாடச்செய்து, கோயிலுக்குள் மற்ற பன்னிரண்டு பாடல்களையும் பாட வேண்டும். எட்டுத்திக்கிலுமுள்ள வாமை, சேட்டை, ரௌத்திரி, காளி, பலவிகரணி, கலவிகரணி, பலப்பிரமதனி, சருவபூததமனி என்ற எட்டு சத்திகளை ஒன்பதாவது சத்தியாகிய மனோன்மணி எழுப்பி இறைவன் முன் சேர்ப்பிப்பதை ஒக்கும். திருவாதிரைத் திருநாள் இறைவன் இயற்றும் ஐம்பெரும் தொழில்களின் உண்மையை விளக்கவந்த திருவிழாவேயாகும். திருவெம்பாவையின் கடைசிப் பாட்டான "போற்றியருளுக" என்று தொடங்கும் செய்யுளில் ஐந்தொழில்களையும் குறிக்கப்பட்டிருக்கிறது.

நடராஜப் பெருமானுக்கு நிகழ்த்தும் அபிஷேக ஆராதனைகளிலும் ஐந்தொழில் முறை அமைந்திருப்பதாக ஆன்றோர் கூறுவர். பெருமானைப் பீடத்தை விட்டு எழுந்தருளப் பண்ணுதல் **தோற்றம்** திருமுழுக்கு முதலியன **திதி**; கறுப்புச் சாந்து அணிதல் **சங்காரம்**; வெள்ளை ஆடை சாத்தல் **திரோபவம்**; உற்சவம் கொண்டருளல் **அநுக்கிரகம்.**

அந்த திருவாதிரை நாளில் இறைவனுக்குக் களி நிவேதனம் செய்வது வழக்கம். இதைப்பற்றிய வரலாறு ஒன்றுண்டு. திருவிசைப்பாபாடிய சேந்தனார் அன்பின் திறத்தை உலகத்திற்கு அறிவிக்கத் திருவுளங்கொண்டார் ஆண்டவன். அவ்வடியார் நிவேதித்த களியினை சிதம்பரம் கோயில் முழுவதும் சிதற வைத்து மணங்கமழச் செய்தார். அன்பர்கள் இதன் கருத்துத் தெரியாது திகைத்தனர். அப்போது இறைவன், "சேந்தனார் படைத்த களியினை உண்டு மகிழ்ந்தோம்" என்று அசரீரியாகச் சொன்னார். "திருவாதிரை ஒரு வாய்க்களி" என்ற பழமொழி நம் நாட்டில் வழங்குவது யாவரும் அறிந்ததே. "இறைவன் திருப்புகழ் ஒன்றைத் தவிர வேறொன்றையும் பேசாத பேற்றைக் கொடுக்க வேண்டும்" என்ற குறிப்புடைய "ஒருவாக்கு அளி" என்று திருவாதிரையன்று விண்ணப்பித்தல் இந்த "திருவாதிரை ஒருவாய்க்களி" என்ற பழமொழியில் தொனித்து நிற்கின்றது போலும்.

சேந்தனார் களி நிவேதித்த செய்தியை **திருக்களிற்றுப்படியார்** என்ற சித்தாந்த சாத்திர நூல்,

**"அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க-அவிழ்ந்தசடை
வேந்தனூர்க்கின்னமுதமாயிற்றே மெய்யன்பிற்
சேந்தனார் செய்த செயல்"**

என்று புகழ்ந்து கூறுகிறது.



# தாம்பிரபர்ணி



திரு. S. வையாபுரிப் பிள்ளை B. A. B. L.

தாம்பிரபர்ணி நமது பாரத தேசத்தின் தென்கோடியில் ஓடும் ஒரு முக்கியமான நதி. இது திருநெல்வேலி ஜில்லாவில் மேற்குத் தொடர் மலையைச் சார்ந்த பெரிய பொதிகை என்னும் அகஸ்திய மலையில் உற்பத்தியாகி, மன்னார்குடாக் கடலில் சங்கமிக்கிறது. இந் நதியின் நீளம் 75 மைல்கள்தான். ஆனால் 1750 சதுரமைல் பரப்புள்ள பிரதேசத்தை இது செழிக்கச் செய்கிறது. தென்மேற்குப் பருவமழையும், வடகிழக்குப் பருவமழையும் இந்நதியின் நீர்ப்பெருக்கிற்கு உதவுகின்றன. மரங்கள் நெருங்கியடர்ந்த பள்ளத்தாக்குகளினூடே முதலாவது விரைந்தோடி, பின் 100 அடித் தாழ்ச்சியிலிருக்கும் ஒரு பெரிய குன்றின் மேலாகப் பாய்ந்து விழுகிறது. பிற்பாடு, அருவியருவியாக அடுத்தடுத்துப் பல குன்றுகளில் விழுந்து செல்லுகிறது. சிறிது தூரத்தில் இடது பக்கத்தினின்றும் பேயாறு, உள்ளாறு என்ற இரண்டு சிற்றாறுகள் இதிற் சேருகின்றன. பின்னர், ஒரு செங்குத்தான மலையினின்றும் மிகப் பெரியதோர் அருவியாகக் கீழே விழுகிறது. இந்த அருவி வீழ்ச்சி நம்மை மயிர்க்கூச் செறியச் செய்கிறது. இதுதான் பாண தீர்த்தமாக விளங்குவது. இவ்வருவி விழுமிடத்தின் அடியில், வலது பக்கத்தில் பாம்பாறும் ஒன்றரை மைலுக்குப் பிற்பாடு இடது பக்கத்திலிருந்து காரியாறும் வந்து கலக்கின்றன. பாம்பாறு கலக்குமிடத்திலிருந்து சொரி முத்தையன் கோவில் சுமார் மூன்று மைல் தொலைவில் உள்ளது. இக் கோயிலின் பக்கத்தில் நதி வந்ததும், அதன் வேகமும் இழுப்பும் மிக அதிகம். பின்பு, அது ஒரு பீடபூமியைக் கடந்து சென்று, முண்டன் துறையின் அருகில் சேர்வையாறு என்ற ஒரு முக்கியமான உபநதியைப் பெறுகிறது. பின் அடுத்தடுத்திருக்கும் இரண்டு பெரிய மலைகளால் இரண்டாகப் பிரிவுபட்டு, பாபநாசத்திற்கு அருகிலுள்ள குன்றுகளை அடைந்து, அங்கிருந்து 300 அடித் தாழ்ச்சியிற் கீழே பாய்கிறது. இதுதான் கலியாண தீர்த்தம்; பாய்ந்து விழுந்த இடத்தில் உயர்ந்தோங்கிய குன்றுகளால் பிரிவுபட்டு, மூன்று நதிகளாகத் தனித்தனி சென்று அரைமைலுக்கு அப்பால் ஒன்று சேருகிறது. சிறிது தூரத்தில் பாபநாசம். இதுவே மலைச்சரிவில் தாம்பிரபர்ணி செல்லும் நெறி.

பாபநாசத்திலிருந்து கிழக்காக மன்னார் குடாக் கரையிலுள்ள புன்னைக்காயல் என்ற முகத்துவாரத்திற்கு 60 மைல்கள் உள்ளன. தென்காசி, அம்பாசமுத்திரம், திருநெல்வேலி, ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர் முதலிய தாலுகாக்களின் வழியாக இந்நதி பாய்ந்து செல்லுகிறது. அம்பாசமுத்திரம் தாலுகாவில் மைலுக்கு 6 அடி வீதமும், ஸ்ரீவைகுண்டம் தாலுகாவில் வரும்பொழுது மைலுக்கு 3 அடி வீதமும் நதி கிரமமாகத் தாழ்ந்து வருகிறது.

அம்பாசமுத்திரத்தில் நதியின் அகலம் 300 அடிதான். ஆனால் ஆழ்வார்திருநகரிக்கு வரும்பொழுது கால் மைல் தூரமாக அகன்று விடுகிறது. இடையிடையே சில உபநதிகள் இந் நதியோடு கலக்கின்றன. கல்லிடைக்குறிச்சிக்கு 2 மைல் மேற்காக, கன்னடியன் அணைக்கட்டை யடுத்து மணிமுத்தாறு வந்து சேருகிறது. பின், வராக நதியும் கடனாநதியும் ஒன்று சேர்ந்து திருப்புடை மருதூரில் இடது பக்கமாக வந்து கலக்கின்றன. பின்னர், பச்சையாறு. இது நாங்குனேரி, திருநெல்வேலி தாலுகாக்கள் வழியாய்ப் பாய்ந்து, தருவையில் பாளையங்காலில் வந்து விழுகிறது. கடைசியாக சித்திரா நதி என்ற சிற்றாறு. இதன் நீளம் 40 மைல். இதில் 18 அணைக்கட்டுகள் உள்ளன. 27,000 ஏக்கரா பூமியைச் சாகுபடி செய்வித்து, சீவலப் பேரியில் வந்து தாம்பிரபர்ணியுடன் கலக்கிறது.

தாம்பிரபர்ணியில் அணைக்கட்டுகள் பல உள்ளன. வெள்ளம் அயலிடங்களிற் பரவாதபடி, நதியின் இருபக்கங்களிலும் கரைகள் பெரும்பாலும் அமைக்கப்பட்டிருக்கின்றன. நதி முற்காலத்தே சங்கமித்த இடத்தில் இப்

போது மணல்மேடு பாய்ந்துள்ளது. இதனால், கடல் பின் வாங்கிப் போயிருக்கிறது. கடற் கரையில் வந்து சேர்ந்ததும், இந்நதி வளைந்து வளைந்து செல்லும் சுழிகளின் வழியாகச் சென்று, கடலோடு கலக்கிறது. இதுதான் தாம்பிரபர்ணி நதி நிலத்தில் செல்லும் நெறி.

தாம்பிரபர்ணி என்ற பெயரை இனி நோக்குவோம். வடமொழியிலே, மகாபாரதத்தில் வன பர்வத்திலும், இராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்திலும் இப் பெயரால் இந்நதி குறிப்பிடப்படுகிறது. ஆனால், இதிகாசங்களில் இந்நதிப் பெயர் பிற்காலத்துச் சேர்க்கையாகவே பெரும்பாலும் இருத்தல் கூடும். காளிதாஸன் (கி. பி. 5-ஆம் நூற்றுண்டு) தனது ரகு வம்சத்திலும், வராகமிகிரன் (கி. பி. 6-ஆம் நூற்றுண்டு) தனது ப்ருகத் ஜாதகத்திலும் இந்நதிப் பெயரைக் கூறியுள்ளார்கள். மார்க்கண்டேய புராணத்திலும், இன்னும் பல புராணங்களிலும் இப் பெயர் காணப்படுகிறது.

கி. பி. 5-ஆம் நூற்றுண்டு முதல்தான் தாம்பிரபர்ணி என்ற நதிப்பெயர் வழங்கி வருவதற்கு உறுதியான சான்றுகள் உள்ளன. இக்காலத்திற்கு மிகமிக முற்பட்டு, வேறொரு வழக்காறு இருந்தது. மெகஸ்தனீஸும் (கி. மு. 300), பெரிபுளூஸ் நூலாசிரியனும் (கி. பி. 80), டாலமியும் (கி. பி. 150), 'தாப்ரபனே' என்ற பெயராலும், கிர்நார் சிலாசாசனத்தில் அசோக சக்கரவர்த்தியும், பௌத்த ஆசிரியர்கள் சிலரும், 'தாம்பபன்னி' என்ற பெயராலும், சிங்கள நாட்டை (இலங்கைத் தீவை) வழங்கியிருக்கின்றனர். இவ்விரு பெயர்களும் 'தாம்பிரபர்ணி' என்பதன் மருஉ என்பது வெளிப்படை. இலங்கையிலிருந்து நமது தென்னாட்டில் குடியேறிய ஒருசார் மக்கள் தங்கள் தீவின் பெயரால் தென்னாட்டில் ஓடும் பிரதான நதியை வழங்கினர் என்று ஊகிக்கலாம்.

இந்நதிக்கு 'பொருநை' என்ற தமிழ்ப் பெயரொன்று பிற்காலத் தமிழ்—இலக்கிய வழக்கில் உள்ளது. சங்ககாலத்திலும் இப் பெயர் இருந்தது; ஆனால் அங்கே தாம்பிரபர்ணியைக் குறிக்கவில்லை. சேரநாட்டுத் தலைநகராய் விளங்கிய வஞ்சி-கருவூரைக் கரையிற்கொண்ட ஒரு நதியையே அது குறித்தது. இச்சேர நதியை 'பொருநை' எனவும் 'தண் பொருநை' எனவும் 'ஆன் பொருநை' எனவும் சங்க இலக்கியங்கள் வழங்கும். இப் பெயர்களுள் ஒன்றாகிய தண்பொருநை, கி. பி. 8-ஆம் நூற்றுண்டிற் கூட, சேர நாட்டுக்கு உரியதாகவே வழங்கப்பட்டுள்ளது. எனவே, இந் நூற்றுண்டுவரை இப் பெயர்கள் தாம்பிரபர்ணி நதிக்கு வழங்கவில்லை என்று கொள்ளலாம். ஆனால் 9-ஆம் நூற்றுண்டில், பொருநை வேறு; ஆன் பொருநை வேறு எனக் கொள்ளப்பட்டது. அந்நூற்றுண்டில் தோன்றிய திவாகரம்

பொருநை தண்பொருந்தம்
ஆனி வானி ஆன் பொருந்தமாகும்

என்று தனித்தனியே உணர்த்துகிறது. முதல் இராசராசனது 28-ஆம் ஆண்டு (கி. பி. 1013) வட்டெழுத்துச் சாசனமொன்றில் சீவலப் பேரியை அடுத்து சித்திரா நதி தாம்பிரபர்ணியோடு கலக்கும் நதிப்பகுதி 'தண்பொருந்தம்' என்று வழங்கப்படுகிறது. இதனால் தண்பொருந்தம் என்பது அரசாங்கம் ஒப்பிய உலக வழக்கில் இருந்தது என்று தெரிய வருகிறது. இச்சொல்தான் 'தண் பொருநை' என்றும், 'பொருநை' என்றும் மருவி வருவதற்கு இயைபு உண்டு. நச்சினார்க்கினியர் தண்பொருநை என்று மருவிய பெயரை ஆண்டிருக்கின்றனர். எனவே, பொருநை, தண்பொருநை, தண்பொருந்தம் என்பவை 9-ஆம் நூற்றுண்டளவில் தாம்பிரபர்ணியைக் குறித்தற்கு வழங்கலாயின. கலிங்கத்துப் பரணியிலும், இராசராசனுலாவிலும், கம்பராமாயணத்திலும் 'பொருநை' என்பது காணப்படுகிறது. பொருநையைப் 'பொருநல்' என நம்மாழ்வார் வழங்கியுள்ளார்.

"பொருநல் வடகரை தொலைவில்லிமங்கலம்" என்பது அவரது திருவாக்கு.

பெரிய புராணம் 'தண்பொருந்தம்' என்ற பெயரை வழங்கியுள்ளது.

'பொருநை' 'தண்பொருந்தம்' என்பன தாம்பிரபர்ணியால் வளம்பெறும் பாண்டி நாட்டிற்கும், அதனை ஆளும் பாண்டியனுக்கும அடைமொழியாகி, அந்நாட்டிற்கும் அரசனுக்கும் சிறப்பளித்தன. இதனால் நதியின் பெருமையை ஒருவாறு உணரலாம்.

இவ்வளவு பெருமை பெறுதற்குக் காரணம் என்ன? நதியின் கரையிலும் சங்க

மத் துறையிலும் விளங்கிய ஊர்கள் என்றே சொல்லலாம். இவற்றுள் கொற்கையே மிகத் தொன்மை வாய்ந்தது. இது சங்க இலக்கியங்களில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. முத்துக் குளித்தல் இங்கு நிகழ்ந்த பெருஞ் செயல் இங்கே விளைந்த முத்துக்களால் இங்குள்ள இவ்வூர் பெரும்புகழ் பெற்று விளங்கியது. கடற்கரை மிகப் பெரியதோர் துறையாகப் பூர்வத்தில் இருந்தது.

கொற்கையைப் போலவே தொன்மையும் பெருமையும் வாய்ந்தது திருச்செந்தூர். இதனைக் குறித்துப் புறநானூற்றில் ஒரு செய்யுள் வருகிறது. இதுவும் கடற்கரைப் பட்டினமே. ஒரு முக்கியமான விஷயம் இச் செய்யுளால் தெரிய வருகிறது. சுப்பிரமணிய சுவாமி வீற்றிருத்தலை இது சிறப்பாகக் குறிப்பிடுகிறது. ஆகவே, சமயம்பற்றி, இந் நகர் ஒரு சிறந்த ஸ்தலமாகச் சங்க காலத்திலேயே விளங்கியது புலனாகும். இந்த நிலைமை சங்க காலத்து இறுதியில், அதாவது கி.பி. 3-ஆம் நூற்றாண்டின் பின்னர், அமைந்ததாகக் கொள்ளலாம். இக்காலத்திற்குப் பிற்பாடு, சைவம், வைஷ்ணவம் முதலிய சமயங்களுக்குரிய ஸ்தலங்களே தாம்பிரபர்ணிக்கரையிலும் அடுத்தும் பெருகித் தோன்றின.

இந்நகரங்களுள் முதலாவது கூறத்தக்கது திருக்குற்றாலம். இது தாம்பிரபர்ணியின் உபநதியாகிய சிற்றாறு தோன்றும் மலைப் பகுதியில் உள்ளது. இதனைக் குறித்து நாவுக்கரசர், சம்பந்தர், மாணிக்கவாசகர் என்ற மூவரும் பாடியுள்ளார்கள். அடுத்தது நெல்வேலி. இதுவும் விரைவில் பிரபலமாகிவிட்டது. இதனைக் குறித்து, சம்பந்தர் ஒரு பதிகம் பாடி யிருக்கின்றனர்.

நாயன்மார் காலத்தேயே, தாம்பிரபர்ணி உற்பத்தியாகும் 'பொதியில்' மலைக்குச் சமயம் பற்றிய ஒரு பெருமை ஏற்பட்டது. இம்மலையைப் 'பொதியம்' என்றும், 'பொதியை' என்றும் 'பொதிகை' என்றும் பிற்காலத்தார் வழங்கினர். சங்க நூல்களில் 'பொதியில்' என்று இம்மலை பல செய்யுட்களிற் குறிக்கப்படுகிறது. ஆனால் பரிபாடலில் தவிர, வேறு ஓரிடத்திலேனும் இதற்குச் சமயப் பெருமை தரப்படவில்லை. 7-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இப்பரிபாடலில் 'பொதியில் முனிவன்' என அகஸ்தியர் குறிக்கப்படுகிறார். இவரைக் குறித்த வரலாறு பிரசித்தமானது. கைலாயத்தில் பார்வதிக்கும் சிவனுக்கும் திருமணம் நிகழ்ந்தது. அப்பொழுது, தேவர் முனிவர் முதலிய அனைவரும் அக் காட்சியைத் தரிசிக்க அங்குச் சென்று விட்டனர். பாரமிகுதியால் வடகோடி தாழ்ந்து தென் கோடி உயர்ந்துவிட்டது. அகஸ்தியரை அவரது பத்தினி லோபாமுத்திரையுடன் தெற்கே சென்று பூமியைச் சமப்படுத்தும்படியாக இறைவன் ஆணையிட்டனர். அதன்படியே அகஸ்தியர் தெற்கே வரும்பொழுது தாமரை மாலையொன்றை எடுத்து வந்தனராம். முனிவர் பொதியில் வந்து சேர்ந்ததும் அங்கே இறைவன் அவருக்குத் திருமணக் காட்சியளித்தனர். அப்பொழுது அந்தத் தாமரை மாலை ஓர் அழகிய பெண்ணுக வடிவெடுத்தது. அகஸ்தியர் அதைக் கண்டதும், 'நதியாக ரூபமெடுத்துச் செல்லுக' எனப் பணித்தனர். இவ்வாறு தோன்றியதே தாம்பிரபர்ணி என்ற நதியாம் என்பர். இந்நதி சென்ற இடமெல்லாம் அகஸ்தியர் விமானத்தில் சென்று அங்கங்கே புண்ணிய ஸ்தலங்களையும் தீர்த்தங்களையும் அமைத்தனராம். இங்ஙனமாக, நதி வளத்தால் நாட்டை செழிப்பித்து, புண்ணிய ஸ்தலங்களால் சமயவுணர்ச்சியையும் பக்தியையும் விளைவித்து, இலக்கணம் இயற்றித் தமிழ் மொழியைப் பேணி வளர்த்து, பின் பொதியில் மலையையே தமது நித்திய வாசஸ்தானமாகச் செய்து கொண்டனராம். அகஸ்தியருக்குப் பொதியில் முனிவர் என்ற பெயர் பொருந்துமல்லவா?

இக்கதையை அடிப்படையாகக் கொண்டு, தாம்பிரபர்ணியின் இருகரையிலும் பல க்ஷேத்திரங்கள் தோன்றின. இவற்றில் ஒரு சில பதிகள் சிலாசாசனங்கள் போற்றும் பெரும்புகழ் வாய்ந்தன. இவை அம்பாசமுத்திரம், சேரன்மாதேவி, திருப்புடைமருதூர், சீவலப்பேரி எனத் தற்காலத்து வழங்கும் ஊர்கள். இவையெல்லாம் 9, 10-ஆம் நூற்றாண்டளவில் தோன்றியவை. இவை தவிர ஆழ்வார்கள் பாடினமையால் ஒரு சில ஸ்தலங்கள் பெருமை பெற்றன. இவற்றுள் ஆழ்வார் திருநகரி நம்மாழ்வாரது நகரமாக மிகப் பிரசித்தி பெற்றது. இதன் பழம் பெயர் திருக்குருகூர், ஸ்ரீவைகுண்டம், புளிங்குடி

திருக்கோளூர், வரகுணமங்கை முதலிய திருப்பதிகள் நம்மாழ்வாரால் பாடப்பெற்றன.

முன் சொன்ன திருப்பதிகள் உள்ள காரணத்தால் தாம்பிரபர்ணியின் பெருமை நாளடைவில் சிறந்தோங்கியது. பல மாகாத்மியங்களும் இந்நதியின் புகழை வளர்க்கலாயின. வடமொழியில் 'தாம்ரபர்ணீ மாகாத்மியம்' என்ற ஒரு நூல் உள்ளது. தமிழிலும் 'தாம்பிரவர்ணிப் புராணம்' என்ற நூல் 60 ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றியது. இத்தனிப் புராணங்களில் தவிர, திருவிளையாடற் புராணம், திருநெல்வேலி ஸ்தலபுராணம் முதலியவற்றில் இந்நதியின் பெருமையை விரிவாகக் காணலாம்.

இவ்வாறு சமயத்தால் நேர்ந்த பெருமையைத் தவிர கல்வியின் வளர்ப்புப் பண்ணையாகவும் இந்நதி பெருமை பெற்றுள்ளது. நதிக்கரையூர்களிலும் அடுத்துள்ள ஊர்களிலும் பெரும்புலவர்கள் வாழ்ந்து கல்வி நிலையம் எனப் புகழ் சிறந்து விளங்கினர். சங்க காலத்தில் வெள்ளூர்க் காப்பியனார், மாறோக்கத்து நப்பசலையார் முதலியோரைக் கூறலாம். வெள்ளூர் ஸ்ரீவைகுண்டத்தை அடுத்துள்ளது; மாறோக்கம் கொற்கையைச் சூழ்ந்தநாடு. இடைக்காலத்தில் நல்லாதனார், நாற்கவிராச நம்பி, திருக்குருகைப் பெருமாள் கவிராயர், குமரகுருபர சுவாமிகள் முதலியோரைக் கூறலாம். பிற்காலத்தில், திரிகூட ராசப்பக் கவிராயர், சிவஞான சுவாமிகள், சங்கர நமச்சிவாயர் முதலியோரைக் கூறலாம். ஆழ்வார் திருநகரி, நெல்வேலி முதலிய திருப்பதிகள் டாக்டர் சாமிநாதய்யர் முதலியோருக்குப் பண்டை இலக்கியங்களைத் தொகுத்துதவிய பெருமையை யுடையன.

இப்பெருமைகள் ஒருபுறம். தொன்று தொட்டு இதற்குரிய நேரடியான இயற்கைப் பெருமை யாதெனில், இந்நதி பயிர் செழிக்கச் செய்து, நாட்டை வளம்படுத்தி வரும் பெருமையே யாம். நெல்வேலிச் சீமையை 'திரைபடு பொருநை நீத்தம் செவிலிபோல் வளர்க்கும்' என்றனர் பரஞ்சோதி முனிவர். தற்காலத்தும் மின்சார சக்தியை விளைத்து, ஆலைகளை இயக்கி, மக்களுக்கு இந்நதி பெரும் பயன் அளிப்பதில் முயன்று வருகிறது. இந்நதி ஜீவநதி. பொருநை மாதாவின் கருணை வெள்ளம் இன்றும் வற்றாது பாய்ந்து, மக்களது உயிரையும் உள்ளத்தையும் தளிர்க்கச் செய்கிறது.

[இது சென்னை அகில இந்திய வானொலி நிலையத்தில் 21-11-1950-இல் ஒலி பரப்பப் பட்டது.]



## வைகானச ஆகமப் பயிற்சி, அழகர் கோயில்

7-9-58-ல் அழகர்கோயிலில் அறநிலையப் பாதுகாப்புத் துறை அமைச்சர் கனம் M. பக்தவத்சலம் அவர்களால் வைகானச ஆகமப் பயிற்சி வகுப்பு தொடங்கி வைக்கப்பட்டது. 34 பட்டர்கள் வகுப்பில் சேர்ந்து பயின்றார்கள். நாச்சியார்கோயில் திரு. K. சீனிவாச பட்டாச்சாரியார், ஸ்ரீவில்லிபுத்தூர் திரு. அலங்காரப்பட்டர் இவ்விருவர்களும் ஆசிரியர்களாக இருந்து வகுப்பை நடத்தினார்கள். திருவாளர்கள் ஆறுமுக நாவலர், ஈசானசிவாசாரியார், அரங்கநாத தாத்தாச்சாரியர், சௌமியமூர்த்திபட்டர் இவர்கள் சிறப்புச் சொற்பொழிவுகள் செய்தார்கள். 10-10-58 வகுப்பு முடிந்தது. திரு. V. விருத்தகிரீசன் M.A.M.Litt,L.T. அவர்கள் தேர்வு நடத்தினார்கள். 34 பேர்களில் 5 பேர்கள் முதல் வகுப்பிலும், 23 பேர்கள் இரண்டாவது வகுப்பிலும், 6 பேர்கள் மூன்றாவது வகுப்பிலும் தேர்ச்சி பெற்றார்கள். 10-10-58-ல் அறநிலைய அமைச்சர் கனம் M. பக்தவத்சலம் அவர்கள் வகுப்பில் பயிற்சி பெற்றவர்களுக்கு தகுதிச்சீட்டு வழங்கினார்கள்.

# கலைவளர்ச்சி ஆலோசனைக் குழு

சென்னை அரசாங்கம், அறநிலையப் பாதுகாப்புத் துறைக்கு கலாச்சாரம், இசை, சிற்பம், கட்டிடக்கலை, திருப்பணி முதலியவற்றைப்பற்றி ஆலோசனை கூறுவதற்கென பதினைந்து பேர்கள் அடங்கிய குழு ஒன்றை அமைத்திருக்கிறது. அறநிலைய அமைச்சரே அதற்குத் தலைவர். அறநிலைய ஆணையாளர் அக்குழுவிற்கு உத்தியோகப்பற்றற்ற செயலாளர். அக்குழுவின் முதற் கூட்டம் 28-11-58-ல் கோட்டையில் அறநிலைய அமைச்சர் கனம் எம். பக்தவத்சலம் அவர்களின் தலைமையில் கூடியது. கீழ்க் காணும் அங்கத்தினர்கள் வந்திருந்தனர்:—

1. திருமதி ருக்மிணி அருண்டேல்
2. திரு. K. K. சுப்பண்ணக் கவுண்டர்
3. „ பத்மபூஷண A. R. வெங்கடாச்சாரியார்
4. „ ச. சச்சிதானந்தம் பிள்ளை
5. „ R. இராமகிருஷ்ண முதலியார்
6. „ C. S. லோகநாத முதலியார்
7. பேராசிரியர் திரு. P. சாம்பமூர்த்தி
8. திரு. N, ஜம்புலிங்க நாயக்கர்
9. „ K. பாலசுப்பிரமணிய அய்யர்
10. „ A. N. பரசுராமன்

குழுவின் செயலாளரும், அறநிலைய ஆணையாளருமான திரு. A. உத்தண்டராமன் I. A. S. அவர்களும் இருந்தனர்.

கனம் மந்திரியவர்கள் அறநிலையப் பாதுகாப்புத் துறையின் அமைப்பைப்பற்றியும், கோயில்களின் நிர்வாகத்தை ஒழுங்குபெறச் செய்வதற்காகவே சட்டம் இயற்றப்பட்டதன் நோக்கம் என்பதையும் விரிவாக எடுத்துச் சொன்னார்கள். பல கோயில்கள் ஏழ்மையானவையாதலால் அவைகள் நிர்வாகத்துக்கும் திருப்பணிக்கும் பொருள் தேவையாக இருக்கின்றதென்றும், சில கோயில்கள் வரவு செலவிற்குச் சரிக்கட்டுகிறதென்றும், வெகு சில கோயில்களில்தான் கொஞ்சம் உபரி வருமானம் உண்டென்றும் குறித்துரைத்தார்கள். கோயில்களைத் தூய்மையாகவும், பழுதடையாமலும் பார்த்துக்கொள்வதும், யாத்ரீகர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுப்பதும் முதற்கண் கவனிக்க வேண்டியவை. திருப்பதி கோயிலின் வருமானம் அதிகரித்துக்கொண்டு போவதற்கு ஒரு காரணம் அங்கு யாத்ரீகர்களுக்குச் செய்யப்படும் வசதிதான். பணக்காரக் கோயில்கள், ஏழைக் கோயில்களுக்கு நன்கொடையளிக்க அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது; அது மாத்திரம் போதாது. வருமானத்தை உயர்த்தவேண்டியதற்கு உரிய வழி முறைகளைச் செய்யவேண்டும். திருவண்ணாமலைக் கோயிலின் வருமானம் ரூ. 65,000.செலவு அதற்குச்சரியாகவோ சற்று அதிகமாகவோ இருக்கிறது. ஸ்ரீரங்கம் கோயிலின் வருமானத்தைக்கொண்டு செலவைச் சரிக்கட்ட முடியாமலிருக்கின்றது. கோயிலுக்குச் சொந்தமான நிலங்களின் வருமானம் பாதிக்காமலிருப்பதற்கு அரசாங்கம் கவனித்து வருகிறது. கோயில் நிலங்களுக்கு விவசாய் வருமான வரி கிடையாது. நம்முடைய பழய கலையும் பண்பாடும் கோயில்களில் தோன்றியவை. சுவாமிமலையில் நாதசுவர வகுப்பு ஆறு மாதங்கள் நடைபெற்றன. இப்போது பழனியில் ஒரு நாதசுவர வகுப்பு நடந்து கொண்டிருக்கிறது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள பேட்டைவாய்த்தலையிலும், தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள திருவெண்காட்டிலும் சைவ ஆகம வகுப்புக்கள் நடத்தப்பெற்றன. ஸ்ரீரங்கத்தில் பாஞ்சராத்திர ஆகம வகுப்பும், அழகர் கோயிலில் வைகானச ஆகம வகுப்பும் நடைபெற்றன். சென்னையிலோ, அதன் அருகில் ஒருஊரிலோ சைவ, வைணவ ஆகம வகுப்புக்கள் நடத்த ஒரு யோசனை இருந்து வருகிறது.

கோயில்களுக்குத் திருப்பணி செய்யும் பொழுது அவைகளின் சிற்ப, கட்டிடக்கலை அழகைப் பாதுகாக்கவேண்டும். அரசாங்கத்

இன் உதவியின் பேரில் மகாபலிபுரத்தில் ஒரு சிற்பக் கலைப்பள்ளியும், சுவாமிமலையில் விக்கிரகங்கள் வார்க்கும் பயிற்சிதரும் நிலையமும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

கோயிலின் ஒழுங்கான பராமரிப்பும், வேளைகளில் ஆகமங்களின்படி பூசை முதலியன நடைபெறுவதுமே கோயிலின் பெருமையைப் புலப்படுத்துவன.

தேவாரத்துக்கு பண் முறைகள் உள்ளன. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்கு அவ்வாறு பண்கள் அமைக்கப்படவில்லை. பண்முறையோடு கோயில்களில் நாலாயிரப் பிரபந்தத்தைப் பாடப் பயிற்சி அளிக்கலாம்.

கோயிலுக்குச் சம்பந்தப்பட்ட எல்லாக் கலைகளிலும் பயிற்சியளிக்க ஒரு நிலையம் அமைக்கவேண்டியது அவசியம். அதைப் பல்கலைக் கழகத்தோடு சேர்த்து, மற்ற பட்டதாரிகளுக்கு வேலை கிடைப்பதுபோல் கோயில்களில் வேலை கிடைக்காதவர்களுக்கு வேலை கிடைக்குமாறு வழி செய்யவேண்டும். பழனி தேவஸ்தான ஆதரவில் இத்தகைய ஒரு நிலையம் அமைக்க ஒருதிட்டம் இருந்து வருகிறது. இவ்வாறு அமைச்சர் அவர்கள் கூறி, கோயில் நிர்வாகத்திற்கு ஆலோசனை கூற உப குழுக்கள் அமைக்கப்படவேண்டியதையும் சொன்னார்கள். கீழ்க்கண்ட உப ஆலோசனைக் குழுக்கள் அமைக்கப்பட்டன:—

(1) **சிற்பம், ஓவியம், இசை முதலியன.**

திருமதி. ருக்மணிதேவி—அழைப்பாளர்
திரு. பி. சாம்பமூர்த்தி.

(2) **நிர்வாகம்** (விழாக்கள், சொத்துக்கள், பசுமடங்கள், பால் பண்ணைகள், அனாதைக் குழந்தை இல்லங்கள், நந்தவனங்கள், பாடசாலைகள், வருமானம் உயர்த்தும் முறைகள், பொதுநல நிதி, உபரி வருமானத்தைப் பயன்படுத்தல் முதலியன.)

திரு. A. N. பரசுராமன்—அழைப்பாளர்
,, S. சச்சிதானந்தம் பிள்ளை
,, K. பாலசுப்பிரமணிய அய்யர்
,, K. வெங்கடசாமி நாயுடு
,, S. V. M. மெய்யப்ப செட்டியார்

(3) **திருப்பணி** (புனருத்தாரணம், பழுது பார்த்தல், கட்டிடக்கலை, சிற்பக்கலை, கல்வெட்டுக்கள், பிரயாணிகளுக்கு வசதிகள் முதலியன.)

திரு. R. இராமகிருஷ்ண முதலியார்-அழைப்பாளர்.
,, C .S. லோகநாத முதலியார்
,, N. ஜம்புலிங்க நாயக்கர்
,, பத்மபூஷண A. R. வெங்கடாச்சாரியார்
,, K. K. சுப்பண்ணக் கவுண்டர்

(4) **இலக்கியம், வெளியீடுகள்** (பிரசாரம் முதலியன)

திரு, A. N. பரசுராமன்—அழைப்பாளர்.
,, T. M. நாராயணசாமிப் பிள்ளை
,, ச. சச்சிதானந்தம் பிள்ளை

(5) **பழநியில் ஆரம்பிக்க இருக்கும் நிலையம்.**

அற நிலையப் பாதுகாப்பு ஆணையாளர்-அழைப்பாளர்.

திரு. T. M. நாராயணசாமிப் பிள்ளை
,, C S. லோகநாத முதலியார்
,, எம்பெருமானார் செட்டியார்
,, P. சாம்பமூர்த்தி

இந்த உப ஆலோசனைக் குழுக்களுக்கு இன்னும் உறுப்பினர்கள் சேர்த்துக்கொள்ள அதிகாரம் உண்டு. அப்படிச் செய்வதை அற நிலைய ஆணையாளருக்குத் தெரிவிக்க வேண்டும்.

பொது ஆலோசனைக் குழு மறுபடியும் 1959 ஏப்ரல் மாதம் கூடலாம். இதற்குள் உப குழுவினர் தங்கள் திட்டங்களை அற நிலைய ஆணையாளருக்கு அனுப்பலாம்.

உப குழுக்கள் சேர்ந்து கூடவேண்டிய கூட்டங்களை அற நிலைய ஆணையர் அலுவலகத்தில் வைத்துக்கொள்ளலாம்.

கோயில் முதலிய நிலையங்களுக்கு ஆலோசனை குழுவின் அங்கத்தினர்கள் போனால் வேண்டிய உதவிகளைச் செய்யும்படி ஆணையர் அற நிலைய அதிகாரிகளுக்கு அறிவிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்.

# அறநிலையங்களில் பால்பண்ணைகள்

அரசாங்க உள் விவகாரத்துறை 25—8—58 தேதியிட்ட 2395 எண்ணுள்ள உத்திரவு

சென்னைமாநில கால்நடை அபிவிருத்திக் கழகம் இந்து அறநிலையங்கள் பராமரித்து வரும் 'கோசாலை' முதலியவைகளை விரிவு படுத்தலாம் என்று அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறியது. அதன் பேரில் அறநிலைய ஆணையாளர் அனுப்பிய யோசனைகளை அரசாங்கம் உணவு விவசாயத் துறை 23—7—1957 தேதியிட்ட 2240 எண்ணுள்ள உத்திரவில் அங்கீகரித்தது. அரசாங்க கால்நடை அபிவிருத்தி இயக்குநர் சில குறிப்பிட்ட திட்டங்களை வகுக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். அவரைக் கலந்து ஆலோசித்து அறநிலைய ஆணையாளர் சில அறநிலையங்களில் பால்பண்ணை வைப்பதற்குரிய திட்டங்களை அனுப்பி யிருக்கிறார்.

கோசாலைகள் அல்லது பசு மடங்களை அறநிலையங்கள் வைத்துப் பாதுகாப்பது தொன்று தொட்டு நடந்து வருகிறது. காளைகள், பசுக்கள் முதலியவைகளை கோயில்களுக்குப் பொதுமக்கள் விடுவது நம் நாட்டில் வழக்கமாக நடைபெறுகிறது. சமயச் சார்பாக இந்தமுறை இருப்பதுடன் நல்ல கால்நடைகள் அபிவிருத்தி செய்யவும் மிகவும் பயன்பட்டது. துரதிர்ஷ்டவசமாக இந்த நல்ல ஏற்பாடு அநேக அறநிலையங்களில் நடைமுறையில் இல்லாமற் போய்விட்டது. ஒரு சில நிலையங்களே கோசாலைகள் அல்லது பசுமடங்களை குறுகிய அளவில் நடத்தி வருகின்றன. இவை நடத்துகின்றவைகளை நவீன முறைகளில் முன்னேற்றம் அடையச் செய்ய வேண்டும் என்றும், அபிஷேக முதலியவற்றிற்கு அதிகபால் கிடைக்கச் செய்வதுடன் ஏழைக்குழந்தைகளுக்கும் பால் விநியோகிக்கப்பட வேண்டும் என்றும் அரசாங்கம் கருதுகிறது.

அதன்படியே, அறநிலைய ஆணையாளர் கீழ்க்காணும் அறநிலையங்களில் பால் பண்ணைகள் நடத்துவதற்காக அனுப்பிய திட்டங்களை அரசாங்கம் அங்கீகரிக்கிறது. அப்பண்ணைகள் ஒவ்வொன்றிலும் 10 பசுக்களும் ஒரு பொலிகாளையும் இருக்கும்:—

**தஞ்சை மாவட்டம்**

1. அக்கினீசுவரர் தேவஸ்தானம், திருப்புகலூர்.

2. சுவேதாரணியசுவாமி தேவஸ்தானம், திருவெண்காடு.

**மதுரை மாவட்டம்**

3. தண்டாயுதபாணி தேவஸ்தானம், பழனி.

**திருநெல்வேலி மாவட்டம்**

4. சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம், திருச்செந்தூர்.

5. திருக்குற்றாலநாதர் தேவஸ்தானம், குற்றாலம்.

6. திருமலைக்குமரசாமி தேவஸ்தானம், பண்பொழி.

மேற்கண்ட அறநிலையங்களுக்கு வேண்டிய செலவுகளுக்குரிய தொகைகளுக்கு உத்திரவு கிடைக்கும்.

அறநிலைய ஆணையாளர், கால்நடை அபிவிருத்தி இயக்குநரை ஆலோசித்து பால் பண்ணைகள் நல்லமுறையில் நடைபெற கோயில் அதிகாரிகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வார்.

**1. திட்டத்தின் பெயர்:**

அறநிலையங்கள், கோசாலைகள் அல்லது பசுமடங்கள் வைத்துப் பராமரித்தல்.

**2. இடம்: தேவஸ்தானங்கள்**

**தஞ்சை மாவட்டம்**

திருப்புகலூர்
திருவெண்காடு
சுவாமிமலை

## மதுரை மாவட்டம்

பழனி

## இராமநாதபுர மாவட்டம்

ஸ்ரீவில்லிபுத்தூர்

## திருநெல்வேலி மாவட்டம்

குற்றாலம்
பண்பொழி
திருச்செந்தூர்

### 3. நோக்கம் :

கோசாலைகள் அல்லது பசுமடங்களைக் கோயில்கள் வைத்துப் பராமரித்தது தொன்றுதொட்டு நம் நாட்டில் நடைபெற்று வந்த பழக்கம். நாட்டின் கால்நடைச் செல்வத்தை அபிவிருத்தி செய்ய இக்கோயில்கள் பெரும்பங்கு கொண்டன. இந்த அறநிலையங்கள் பழயவழக்கத்தை மீண்டும நன்கு கையாண்டால் பசுமடங்களின் பால் யாத்ரீகர்கட்கும் பொதுமக்களுக்கும் அபிஷேகத்திற்காகவும், ஏழைக் குழந்தைகளுக்கு வினியோகிப்பதற்கும் பயன்படும்.

நல்ல கறவைப் பசுக்களை உண்டாக்குவதற்கு சிந்தி, தர்பார்கார், கிர் முதலிய எருது வகைகளைப் பயன்படுத்தல் மிகவும் அவசியம். இவ்வித காளைகள் சென்னை மாவட்டத்திலுள்ள கால்நடை அபிவிருத்திக்காகக் கிடைக்கும். அவைகளைப் பயன்படுத்தினால் கால் நடைத்தரமும் உயரும்.

### 4. வேலைத்திட்டம் :

தேவஸ்தானங்களின் பொருள் வருவாய், நிலைமை முதலியவற்றிற்குத் தகுதியாகும்படி மூன்று வகைப்பால் பண்ணைகள் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. அவை ஒவ்வொன்றிலும் 50, 20, 10 கால் நடைகள் இருக்கும். சிந்தி, தர்பார்கார், கிர் வகைப்பொலி காளை ஒன்று ஒரு பண்ணைக்கு இருக்கும்.

மேலே சொல்லப்பட்ட தேவஸ்தானங்கள் சிலகால்நடைகள் கொண்ட கோசாலைகள் நடத்துவதாகச் சொல்லப்படுகிறது. கோயில்களில் 1 முதல் 5 வரை கறவைப் பசுக்கள் இருப்பதாகத் தெரிகிறது. கறவை இல்லாத கால்நடைகள், கன்றுகள், பொலி எருதுகளும் சில இருக்கின்றன. இவை அநேகமாக உள் நாட்டில் அபிவிருத்தியானவையே. சிந்தி முதலிய பொலி எருதுகளை மேற்கண்ட பண்ணைகளில் சேர்த்து, அபிவிருத்தித் தரத்தை உயர்த்த வேண்டும்.

சில கோயில்கள் 6 அல்லது 7 பொலி காளைகள் வைத்திருக்கின்றன. ஆனால் அவை உள்நாட்டு வகையைச் சேர்ந்தவைகளே. இவை நல்ல கால்நடை அபிவிருத்திக்குத் தகுதியற்றவை; அவைகளை அதற்காகப் பயன்படுத்தவும் கூடாது. நல்லதரமுள்ள பொலிகாளைகளைப் பராமரிக்க இத்திட்டத்தில் செலவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது.

மேற்சொன்ன தேவஸ்தானங்களுக்குச் சொந்தமாக 100 முதல் 1000 ஏக்கர் வரையிலுள்ள நிலங்கள் இருக்கின்றன. இவைகள் உணவுப் பயிர் உற்பத்திக்காக குத்தகைக்கு விடப்படுகின்றன. ஆகையால் கால் நடைகளுக்கு வேண்டிய தீனிக்குக் கஷ்டமிருக்காது. ஆனால் நல்ல தீனிக்குதவும்படியாக கினிப்புல், யானைப்புல், ரோட்ஸ் புல் இவைகளை வளர்க்க கொஞ்ச நிலங்கள் ஒதுக்கப்பட்டால் நல்லது. ஐந்து பெரிய கால்நடைகள் உள்ள பண்ணையை வைத்து நில விஸ்தீரணத்தை நிர்ணயிக்கலாம்.

இந்த பண்ணைகளில் உற்பத்தியாகும் காளைக் கன்றுகளை தனியாகவோ, அரசாங்க மூலமாகவோ விற்றுவிடலாம். பெண் கன்றுகளைப் பண்ணைகளிலேயே வைத்திருந்தால் கால்நடைப் பண்ணை அபிவிருத்தியைப் பலப்படுத்தும். இவை பசு மடங்கள் அல்லது கோசாலைகளுக்கு நல்ல சொத்தாகவும் இருக்கும்.

### 5. திட்டச் செலவு :

பலதரப்பட்ட பண்ணைகளின் வரவு செலவு விவரம் கீழ்வருமாறு :

#### I. 10 பசுக்களும் 1 பொலிகாளை இருக்கும் பண்ணை :

மூலதனம்:

| | |
|---|---|
| தொடராத செலவு | ரூ. 14,750 |
| தொடரும் செலவு (ஆண்டு) | ரூ. 7,300 |
| ஆண்டு வருமானம் | ரூ. 8,800 |

**II. 20 பசுக்களும் 1 பொலிகாளை இருக்கும் பண்ணை :**

**மூலதனம்:**

| | |
|---|---|
| தொடராத செலவு | ரூ. 28,100 |
| தொடரும் செலவு (ஆண்டு) | ரூ. 13,150 |
| ஆண்டு வருமானம் | ரூ. 17,350 |

**III. 50 பசுக்களும் 1 பொலிகாளை இருக்கும் பண்ணை :**

| | |
|---|---|
| தொடராத செலவு | ரூ. 63,750 |
| தொடரும் செலவு (ஆண்டு) | ரூ. 36,000 |
| ஆண்டு வருமானம் | ரூ. 42,000 |

வரவு செலவு விவரங்களைப் பின்வரும் 1, 2, 3 அட்டவணைகளில் காணலாம்.

## அட்டவணை 1

### 10 கால் நடைகள் இருக்கும் பண்ணை

தொடர்ந்து வராத செலவு :

| | | |
|---|---|---|
| i. 7 கறவை கால்நடைகள் ஒன்று ரூ. 900 வீதம், 3 கறவா கால்நடைகள் ஒன்று ரூ. 650 வீதம் 1 பொலிகாளை ரூ. 1000. | ரூ. | 9250 |
| ii. பசுக்களுக்காக தொழுவமும் தண்ணீர் தொட்டியும் | ரூ. | 5000 |
| iii. பால் பாத்திரங்கள், இன்னும் மற்ற சாதனங்கள் | ரூ. | 250 |
| iv. மேசை, நாற்காலி, காகிதம் முதலியன | ரூ. | 250 |
| | | 14,750 |

தொடர்ந்து வரும் செலவு :

| | | |
|---|---|---|
| i. பால்பண்ணை அலுவலர் 35—1—60. அலவன்சு 19. | ரூ. | 648 |
| ii. (a) தீனிச் செலவு 7 கறவை கால்நடைகள் 1 நாளைக்கு கால்நடைக்கு ரூ. 1-8-0 வீதம் சராசரி செலவு | ரூ. | 3832 |
| (b) தீனிச் செலவு 3 கறவா கால்நடைகள். 1 நாளைக்கு 1 கால் நடைக்கு ரூ. 0-8-0 வீதம் சராசரி செலவு | ரூ. | 547 |
| (c) தீனிச் செலவு 5 கால் நடை கன்றுகள். 1 நாளைக்கு 1 கன்றுக்கு 0-6-0 வீதம் சராசரி செலவு. | ரூ. | 685 |
| | ரூ. | 5712 |
| iii. மருந்து, தண்ணீர் வசதி, விளக்கு முதலிய பலவகைச் செலவுகள் | ரூ. | 250 |
| iv. பால் கறப்பவன் ரூ. 35 வேலை ஆள் ரூ. 30 | ரூ. | 780 |
| v. பொலிகாளை பராமரிப்பு | ரூ. | 540 |
| | ரூ. | 7282 |
| | அல்லது ரூ. | 7300 |

வருமானம்:

| | | |
|---|---|---|
| i. பவுண்டு 4 அணு வீதம் நாள் ஒன்றுக்கு கறவை ஒன்றுக்கு 12பவுண்டு பாலாக 7 கறவைகளின் பால் ஆண்டு ஒன்றுக்கு கிடைக்கும் விலை மதிப்பு | ரூ. | 7665 |
| ii. விலைக்கு விற்கக்கூடிய மூன்று கன்றுகள் ரூ. 200 வீதம் | ரூ. | 600 |
| iii. சாணத்தின் மதிப்பு | ரூ. | 60 |
| vi. பொலிகாளைகளால் வரவு | ரூ. | 500 |
| | ரூ. | 8825 |
| | அல்லது ரூ. | 8800 |

**(2, 3 அட்டவணைகள் அடுத்த இதழில் தொடரும்)**